சுயம்பிரபை அம்மாள் நினைவு வெளியீடு

# அருங்கலச் செப்பு

## (மூலமும் உரையும்)



உரையாசிரியர்:

டாக்டர். க. ப. அறவாணன்

ஜைன இளைஞர் மன்றம்
1-ஏ, போக் சாலை
சென்னை-600 017

## BIBLIOGRAPHICAL DATA


| | | | |
|---|---|---|---|
| 1 | Title of the book | – | 'Arungala Cheppu' |
| 2 | Language | – | Tamil |
| 3 | Edition | – | First |
| 4 | Date of publication | – | 4–12–'77 |
| 5 | Commentator | – | Dr. K. P. Aravaanan |
| 6 | Copy right holder | – | Dr. K. P. Aravaanan |
| 7 | Paper used | – | White printing |
| 8 | Size of the book | – | Demmy Size, $14\frac{1}{4} \times 21\frac{1}{4}$ cm. |
| 9 | Printing types used | – | 8, 10, 12, 14, 18 points |
| 10 | Number of pages | – | 182 pages |
| 11 | Number of copies | – | 2200 |
| 12 | Artist | – | Anandan, Madras-5 |
| 13 | Printer | – | S. Dhanyakumar Press, Madras-17 |
| 14 | Binding | – | V. Pachaiyappan Binding Madras 33 |
| 15 | Price | – | Rs. 9-00 |
| 16 | Publisher | – | Jain Youth Forum,<br>1-A, Boag Road, Madras-600 017 |
| 17 | Subject | – | Religion |
| 18 | Summary | – | House holder's Dharma |
| 19 | Call Number | – | R42<br>L7 |

மூவுலகு உணர்ந்த மூர்த்தி
மகாவீரர்
வீடுபேறடைந்த
2503 ஆவது ஆண்டு
நினைவு வெளியீடு



Lord Mahavira's
2503rd Parinirvana Year
Commemorative Publication

படையல்

வணக்கத்திற்குரிய
மூடுபத்தரை ஜைன மடாதிபதி
ஸ்ரீ சாருகீர்த்தி பத்மசாகர சுவாமிகள்
இணை அடிகளுக்கு

Dedicated to:
His Holiness Swasthishri
Charukeerthi Padmasagar Swamiji
of Jain Mutt, Modabidri
Karnataka

## Bhattarak Sri Charukeerti P. Swamiji

M.A.(Hindi Lit.), M.A. (Sanskrit Lit.), Sahitya Shastri Siddhanta Shastri Upadhyay (Jainism Ph.D.)

# BLESSINGS

Generally Jain Religious Literature can be divided into two groups-one dealing with the philosophical aspect and the other with the ways of good life. In daily life, the latter claims greater importance since only leading a good life enables man to acquire honour in his society. Besides, a good way of life brings happiness. The literature dealing with the ways of life can also be divided into two groups-one dealing with that of sages and the other related to married men. As far as Digambara Jaina literature is concerned, *'Moolachara'* describes how a sage - life should be. *'Rathnakarandaka Sharavakachara'* a work by **Samanthabhadra,** says what kind of life a married man must live. It is much pleasing and encouraging to note that the above referred masterpice is published in Tamil by the name **'Arungala Cheppu'**. The tribute of Jainism to Tamilnadu is considered to be valuable. Tamilnadu had been once the holy abode of Jain Culture. It also gave birth to Scholars like **Kundakunda** and **Samanthabhadra**.

"Arungala Cheppu" consists of couplets. Simple diction and lucid style make it more delightful. This work acheived remarkable reputation among the Digambara Jain Society. This has become the most popular work. A number of religious minded men as well as students have been learning this by heart. This manual is both simple and instructive. It has been already translated into Kannada, Hindi and English. Studying this, many people made their lives fruitful and noble. The **"Jain Youth Forum"**, Madras, deserves sincere approbation for its venture of publishing this in simple Tamil Language. I hope that this enthusiastic **forum** will bring out many such useful books. Praying **Sri Veeraprabhu,** to provide the **forum** with all the means for the same in future, we conclude our words.

'Saddharmavraddhirastu'

Sri JAIN MATH
P.O. MOODBIDRI
(SOUTH KANARA DISTRICT)
KARNATAKA STATE

DATE 19-12-'77

CharuKeerti P. Swamiji



மூடுபத்திரை அறங்தகு சாருகீர்த்தி அடிகளார் நூலை வெளியிட்டருள
திரு. யு. பன்னுலால் ஜெயின் முதல் படியைப் பெறுகிருர்.

# பதிப்புரை

***மெய்ப்பொருள் காட்டி உயிர்கட்கு அரணாகித்***
***துக்கம் கெடுப்பது நூல்***

உயிருக்கு இரண்டு நிலைகள் உள. ஒன்று பிறவிநிலை; மற்றொன்று பிறவா நிலை! முன்னது படிநிலை; பின்னது முடிநிலை! படிநிலை உயிர்களை 'மாற்றுயிர்' என்றும், முடிநிலை உயிர்களை, 'வீட்டுயிர்' என்றும் குறிப்பர் மேரு மந்தர புராணத்தார். மாற்றுயிர்களுள்—மனிதஉயிர்களை—வீட்டுயிர்களாக்குவதே நூல்களின் குறிக்கோளாகும். இக் கருத்தை அழகாகச் சொல்லுவர் அருங்கலச்செப்பு ஆசிரியர்:

***மெய்ப்பொருள் காட்டி உயிர்கட்கு அரணாகித்***
***துக்கம் கெடுப்பது நூல்***

என்பது அவர்தம் திருவாக்கு. அவர் வகுத்த இவ் இலக் கணத்திற்கு இலக்கியமாக விளங்குகிறது அவர் நூலே!

அருங்கலச் செப்பு, மெய்ப்பொருள் இவை என்று விளக்குகிறது; அணுவதம் குணவதம் சிக்கா வதம் உயிர்களுக்கு அரண் என்று காட்டுகிறது; துக்கம் கெடுக்கும் பதினொரு நிலையைப் பேசுகிறது. இவற்றால் இந்நூலை இல்லறத்தார் ஒழுக்க நூல்—சிராவகாசாரம்—என்றும் குறிப் பிடுவர்.

இவ் அரிய நூலை ஆக்கித் தந்த ஆச்சாரியர் பெயர் தெரியவில்லை. சமந்த பத்திர ஆச்சாரியார் ஆக்கிய 'இரத்தின கரண்டகம்' நூலுக்கும் இதற்கும் இடையே உள்ள ஒற்றுமை கண்டு, இந்நூலை அதன் வழி நூல் என்று குறிப்பர். இது ஆய்வுக்குரியது. இந்நூலுக்கு உரை வகுத்துள்ள திரு. டாக்டர் க. ப. அறவாணன் ஓர் அரிய ஆராய்ச்சி முன்னுரை வழங்கியுள்ளார். அதில் ஆசிரியர் பற்றியும், அவர்தம் காலம் பற்றியும், நூலின் அமைப்பு பற்றியும், நூல் பதிப்புகள் பற்றியும் பல அரிய செய்திகளைத் தருகிறார். அவை, மேலும் பல ஆய்வுகளுக்கு வழி வகுக்கும்! வகுக்க வேண்டும்! இந் நூலுக்கு இதுவரை ஐந்து பதிப்புகள் வந்துள்ளன. அருங் கலச் செப்பு ஆராய்ச்சிப் பதிப்பு, இனிதான் வரவேண்டும். அதற்கு ஒரு முன்னோடியாக இந்தப் பதிப்பு திகழும் என நம்புகிறோம். இப்பதிப்பின் சிறப்பு, ஆராய்ச்சி முன்னுரையில் தரப்பட்டுள்ளது! அருங்கலச் செப்பு ஒவ்வொரு இல்லறத் தார் நாவிலும் ஒலித்து அவரை வழிப்படுத்த வேண்டும் என்ப தற்காக இதன் உரையை இனிய எளிய நடையில் அமைத் துள்ளார் உரையாசிரியர் டாக்டர் க. ப. அறவாணன். உரை பெரும்பாலும் மரபு உரைகளைத் தழுவியே செல்லு கிறது. இவ்வுரை இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே எழுதி முடிக்கப்பட்டது. ஆனால் இப்பொழுதுதான் வெளிவரு கிறது. உரையாசிரியர் வழி ஆங்கிலத்திலும் இந்நூல் சுருக்கம் வரவேண்டும் என்று மன்றம் விரும்பியது. இவ்வுரை வெளிப்பட காலம் தாழ்ந்தமைக்கு அதுவும் ஒரு காரணம். என்றாலும், மன்ற எண்ணம் நிறை வேறவில்லை. அருகன் அருள் கூடுமானால் இந்நூல் ஆங்கி லத்தில் மொழி பெயர்க்கப்படும். இந்நூல், இலக்கிய, மொழி, சமய கண்ணோட்டத்தில் ஆழ்ந்த ஆய்வுக்கு கருப் பொருளாகத் தக்கது! நீலகேசி உரைகாரரால் எடுத்தாளப் பட்ட இந்நூல், ஆராய்ச்சி அறிஞர்தம் பார்வையில் படாதது வியப்புக்கு உரியதே. இப்பதிப்பிற்குப்பின் அந்நிலை மாறும் என நம்புகிறோம்.

இந்நூலுள் சுட்டப்படும் கதைகளையும், அடிக்குறிப்பு களாகச் சிலச் செய்திகளையும் மன்றம் சேர்த்துள்ளது. குறிப்புகள் நூற்கருத்தோடு தொடர்பு உடையன என்று காட்டுதற்கு மட்டுமன்று; மேலும் பல ஆய்வுகள் அது பற்றி தொடர வேண்டும் என்பதற்காகவும் ஆகும்!

நன்கொடை பெற்று நூல் வெளியிடும் மன்ற திட்டத் தின்கீழ் இந்நூல், காலம் சென்ற காஞ்சிபுரம் துரைசாமி

நைனுர் துணைவியார் சுயம்பிரபை அம்மாள் நினைவு வெளியீடாக வெளியிடப்படுகிறது. இந்நூலைத் தம் அன்னையாரின் நினைவாக வெளியிட இலட்சுமிவிலாசு வங்கித் தலைவர் திரு. து. வர்த்தமானன் அவர்கள் பொருள் தந்து ஊக்கினுர்கள். நல் தொண்டாற்றி வரும் அவருக்கு நன்றி தெரிவிக்க மன்றம் கடமைப்பட்டு இருக்கிறது.

எளிய இனிய உரை வகுத்துக் கொடுத்த திரு. டாக்டர் க. ப. அறவாணன் அவர்களுக்கும், குறுகிய காலத்தில் அழகாக அச்சிட்டுக் கொடுத்த எஸ். தன்யகுமார் அச்சகத்தார்க்கும் மன்றம் நன்றி தெரிவிக்கிறது.

தமிழ் கூறும் நல்லுலகம், இந்நூலை ஏற்று, நூல் வெளியீட்டுப் பணியை ஊக்குவிக்க வேண்டும் என்று மன்றம் வேண்டுகிறது.

முக்குடையான் தாள் வாழ்க !

**ஜைன இளைஞர் மன்றம்**

# உள்ளடக்கம்

# ஆராய்ச்சி முன்னுரை

நூலாசிரியர் : அருங்கலச் செப்பு என்ற இவ்வழகிய நூலின் ஆசிரியர் பெயர் அறியக் கூடவில்லை. தற்புகழ்ச்சியை விரும்பாத (பா எண் 34, 35, 152) அவர் தம் பெயர் மறைந்து போனது வியப்பான ஒன்றே. இவர்தம் வரலாறு, இவர் எழுதிய இந்நூல் ஒன்றே. இந்நூல் வழி இவர்தம் வரலாற்றுக் கூறுகள் சிலவற்றை உய்த்துணர முடிகிறது.

சைனர் : இவர் சைனர் என்பது வெளிப்படை. நூலின் பேசப் பட்டன பொதுவான ஒழுக்கங்கள்; எல்லார்க்கும் பொருந்துவன; எனினும் சிறப்பாக, சைன சமயத்தார்க்கே, அதுவும் இல்லறத்தில் ஈடுபட்டவர்க்கே முற்றும் பொருந்துவன. இந்நூலின் முதன் நூலாகக் கருதப் பெறும் இரத்தின கரண்டகம், சிராவகாசாரம் (சிராவக–இல் லறம்) என்று பெயர் பெற்றிருப்பதும், அந்நூலாசிரியர் சமந்தபத்திரர் சைனர் ஆக இருப்பதும் இதனை உறுதி செய்வன. 'முற்ற உணர்ந் தான்' என்று அருக தேவனை இவர் வாழ்த்துவதும் நினைக்கத் தக்கது. சைன நூல்களான நீலகேசிக் கடவுள் வாழ்த்தும், யாப்பருங்கலச் சிறப்புப் பாயிரமும் அருகனை 'முற்ற உணர்ந்தான்' என்றே குறிப்பிடு கின்றன. ஆகவே, இவர் சைனர் என்பது வெள்ளிடை.

துறவி : 'அருங்கலச் செப்பு' என்ற நூலின் பொருள் இல்லறத் தைப் பற்றினது. ஆயினும் நூல் போக்கைப் பார்க்கும்போது, இந்நூல் துறவியால் எழுதப் பெற்றது என்று உய்த்துணரலாம். இல்லறத்தார் நோக்கம்—துறவறத்தாரை—எப்போதும்—முப்போதும் வரவேற்று உபசரிப்பதே என்று (பா எண் 134–140) அமைத்திருத்தலும், இல்லறத்தாரும் 'காமம் சான்ற கடைக்கோட் காலை' துறவிற்குச் செல்ல வேண்டும் என்று கூறப்பெற்றிருத்தலும் (172), துறவின் இன்றியமையாமையைத் – துறவியரின் பெருமையை வற்புறுத்துவன. அன்றியும், சைன சமய நூலாசிரியருள் துறவிகளே மிகுதி. ஆக இவையனைத்தையும் ஒருங்கு நோக்க, இந் நூலாசிரியரும் ஒரு துறவியே என்று உய்த்துணரல் பொருத்தம்.

ஏடு எழுதியவர் : நித்தம் அருகன் மலர் அடியைச்
சித்தம் அதனில் மகிழ்ந்தேத்திக்
குற்றம் இல்லா இந் நூலை
நக்கனையன் எழுதி னேனே

என்ற ஒரு பாடல், ஏடொன்றில் காணப் பெறுகிறது. இப் பா, ஏடு எழுதியவர் பெயரைச் சுட்டுகிறதா, நூல் எழுதியவர் பெயரைச் சுட்டுகிறதா என்பது ஐயத்திற்குரியது. இப்பெயர், ஏடு எழுதியவர் பெயரே என்பது அறிஞர் தம் முடிவு.[1]

நூற்பெயர் : 'அருங்கலச் செப்பு' என்ற நூலின் பெயர் அழகானது. இளங்கோ அடிகள் இத்தொடரைத் தம் நூலுள் ஆளுவர் :

ஆயிரம் கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய்திறந் தன்ன மதிலக வரைப்பின்
(ஊர்க்காண் காதை, 68-69)

இத் தொடருக்கு அடியார்க்கு நல்லார் உரை எழுதும்போது 'பெறுதற்கரிய மணிக்கலம் பெய்த பணிப் பெட்டகம்' என்று எழுதுவர். திருத்தக்க தேவர் 'அருங்கலப் பேழை' என்ற தொடரைக் கையாளுவர்.

அருமணி வயிரம் வேய்ந்த
அருங்கலப் பேழை; ஐந்நூறு
எரிமணி செம்பொன் ஆர்ந்த
இராயிரம் யவனப் பேழை
திருமணிப் பூணி னாற்குச்
சினந்தலை மழுங்கல் இன்றிக்
குருமணி முடியில் தேய்த்த
தரன் தமர் கொள்க என்றான்.
(காந்தருவதத்தையார் இலம்பகம், 557)

திருவள்ளுவரும் 'செப்பின் புணர்ச்சி' (உட்பகை-6) என்று போற்றுவர். செப்பு என்பது சிறு பெட்டகம். இச் சொல் இக்காலத்தும் நாஞ்சில் நாட்டில் வழங்குதலைக் கேட்கலாம். அரிய மணிப் பெட்டகம் போல, அரிய கருத்து மணிகளின் பெட்டகம்—இந்நூல் என்ற கருத்தில் இப் பெயரைப் போற்றினர் போலும். இரத்தின கரண்டகம்

---

1 அருணாசலம், மு. தமிழ் இலக்கிய வரலாறு, 12 ஆம் நூற்றாண்டு, 1973, ப. 782

என்ற சமற்கிருத நூற் பெயரும் இப்பொருளினதே. இரத்தினம்-மணி, கரண்டகம்-சிறு பெட்டகம். சமற்கிருத மொழியில் இப் பெயரில் 'இரத்தின கரண்டக சிராவகாசாரம்' என்ற நூல் ஒன்றுள் ளது. 'அருங்கலச் செப்பு' என்ற பெயர் சிலப்பதிகாரத்திலேயே இருந்த பழமையை நோக்க, 'அருங்கலச் செப்பு' என்ற பெயரைப் பார்த்து, 'இரத்தின கரண்டகம்' என்ற பெயர் வைக்கப்பட்டது என்று கருத இடமுண்டு.

**நூலின் காலம்:** நூலாசிரியர் பெயரும், பிறவும் சற்றும் தெரி யாமையால், நூலின் காலத்தைக் கணிப்பது எளிதாக இல்லை. போதிய சான்றுகளின் துணை இன்றி இதன் காலத்தைச் சிலர் பன் னிரண்டாம் நூற்றுண்டு என்று குறித்துள்ளனர். இந்நூலின் காலத்தை அறிய, நூலில் இடம் பெற்றுள்ள கருத்துகளையும், ஆளப் பெற்றுள்ள சொற்களையும் கொண்டு ஆராய்வதே இப்போது இயலக் கூடியதாகும். இரத்தின கரண்டகம் என்ற நூலின் ஆசிரியர் சமந்த பத்திரர் பற்றிய வரலாற்றுத் துணுக்கும் இங்கே ஓரளவு துணை செய்யக் கூடியது.

**சமந்தபத்திரர் வரலாறு:**[2] இராசாவளி கதை, கதா கோசம் என்ற கன்னட நூல்கள் இவர்தம் வரலாற்றை ஓரளவு தெரிவிப்பன. இவை இரண்டும் தேவசந்திரர், பிரபாசந்திரர் என்பவரால் எழுதப் பட்ட பிற்கால நூல்களே. சிரவண வெள்குளத்தில் கிடைத்த ஓலைச் சுவடிகள் இவர் பெயரைச் சாந்திவர்மன் என்றே குறிக்கின்றன. இவரால் இயற்றப் பெற்ற 'ஜின துதி' எனும் நூலின் முடிவில் சாந்தி வர்மன் என்ற பெயர் காணப் பெறுகிறது. வர்மன் என்ற பின்னொட்டுப் பெறும் பெயர்கள் தமிழக வரலாற்றில் பல்லவர் காலத்துப் பரவலான வழக்காறு. சிவஸ்கந்த வர்மன், மகேந்திர வர்மன், நரசிம்ம வர்மன், நந்தி வர்மன் என்ற பெயர்களைக் காண்க. இம் மன்னர்கள் பெரும்பாலும் ஆண்ட எல்லை தொண்டை மண்டலம் ஆகும். தீர்த்தங்கரர்கள் பிறந்தது வடநாடு எனினும், சைன சமயப் பரப்புநர்கள் - ஆசாரியர்கள் - பலரும் தென்னாட்டிலேயே பிறந்தனர். சமந்த பத்திரர் ஓர் ஆசாரியார் என்பது இங்கே கருதத் தக்கது. அன்றியும் அவர் ஒரு திகம்பர முனிவர் ஆவார். வடநாட்டைக் காட்டிலும், திகம்பர சைனம், தென்னாட்டிலேயே என்றும் செழித் திருந்தது. ஆக இவற்றை நோக்கச் சமந்தபத்திரர் தென்னாட்டவரே என்பது தெளிவாகிறது.

தென்னாட்டவர் எனில், எப்பகுதியைச் சேர்ந்தவர் என்பது அடுத்து ஆராயத் தக்கது. தமிழில் இயற்றப் பெற்றுள்ள அருங்கலச்

---

2 Jain, J P. Jaina Sources of History of Ancient India, சீரே. தன்ய குமார் - சமந்தபத்திரர், முக்குடை, மலர் 1;12

செப்பினைப் போன்றதொரு நூல் கன்னட மொழியிலும் ஆயத வர்மா (Ayata Varma) என்பவரால் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. இவ்விரண்டு நூல்களுக்கும் இரத்தின கரண்டகம் என்ற சமற்கிருத நூலே மூலம் என்பது தெளிவு. ஆயினும் 'அருங்கலச் செப்பு' என்ற பொருள் படைத்த இரத்தின கரண்டகம் என்ற பெயரின் பழமையும் கருதத் தக்கது. சமற்கிருதத்தினும், கன்னட மொழியினும், தமிழில் வழங்கும் அருங்கலச் செப்பு என்ற வழக்கே மிகப் பழமை வாய்ந்தது. சிலப்பதிகாரத்தில் (கி. பி. 3-ஆம் நூற்றாண்டு) இத்தொடர் ஆளப் பட்டிருப்பது முன்பே காட்டப்பட்டது. ஆதலால் இரத்தின கரண்டகம் என்ற பெயருக்கு மூலம் தமிழே என்பது தெளிவு. தமிழ் மூலத்தைத் - தமிழ் இலக்கியத்தை நன்கு அறிந்த ஒருவரே இச்சொல்லை அறிந்து பயன்படுத்தி இருத்தல் வேண்டும்.

தமிழக வரலாற்றுடன் தொடர்புள்ள பல்லவர் காலப் பெயர்களைச் சமந்த பத்திரரின் சாந்தி வர்மன் என்ற பெயர் நினைவூட்டுவதும் இங்கே எண்ணத் தக்கது. நூற் பெயரும், நூலாசிரியர் பெயரும், தமிழோடும், தமிழ்நாட்டு வரலாற்றோடும் நெருக்கமான இணக்கம் கொண்டிருப்பதால், இரத்தின கரண்டக நூலாசிரியர் தமிழரே என்பது தெளிவாகிறது. தமிழராயின், சமற்கிருதத்தில் நூல் எழுதுவானேன் என்பது அடுத்துச் சிந்திக்கத் தக்கது. இதற்கு எளிதாக விடை கண்டு விடலாம். இன்று, அனைத்திந்திய, அனைத்துலகத்திற்குத் தம் கருத்துப் பரவ வேண்டும் என்ற ஆவலுள்ள ஆங்கிலம் அறிந்த தமிழர், ஆங்கிலத்தில் நூல்களை எழுதிக் குவிப்பது கண்கூடு. இதனைப் போன்றே, இடைக்காலத்தில், சமற்கிருதம் இந்திய மண் அனைத்தும் அறிந்த மொழியாக இருந்தது. சைனம், இமயம் முதல் குமரி வரை பரவி இருந்தது. சமந்தபத்திரரோ, பாதிரிப் புலியூர் தொடங்கிப் பாவாபுரி வரை சென்றவர்; வாதங்களில் வென்றவர்; பிறழாமல் சைன நெறியில் நின்றவர். ஆதலால், தம் கருத்து அனைத்துப் பகுதியிலும் பரவுதற்காக முதலில் இரத்தின கரண்டகத்தைச் சமற்கிருதத்தில் சமந்தபத்திரர் இயற்றினராதல் வேண்டும். ஆதிசங்கரர் பிறப்பால் தமிழரே; ஆனால் அவர் எழுதிய விரிவுரைகள் அனைத்தும் சமற்கிருதத்திலேயே அமைந்தன. சைவ ஆகமங்கள் பல, தமிழ் நாட்டவராலேயே, சமற்கிருத மொழியில் எழுதப் பெற்றன என்பது அறிஞர் தம் முடிந்த முடிபு. இவற்றை இணைத்து நினைக்க - சமந்தபத்திரர், சமற்கிருதத்தில் நூல் எழுதியது வியப்புக்குரியது அன்று என்பது தெளிவாகிவிடும்.

அடுத்துச் சமந்தபத்திரர் தம் காலம் பார்வைக்குரியது. இவர்தம் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுத் தொடங்கி, கி. பி. ஆறாம் நூற்றாண்டு வரை கூறப்படுகின்றது. தமிழக வரலாற்றுடன் பொருத்

திப் பார்க்கும்போது, சமந்தபத்திரர் அல்லது சாந்தி வர்மன் என்ற பெயர்கள், கி.பி. இரண்டு, மூன்று, நான்கு, ஐந்தாம் நூற்ருண்டு களுடன் பொருந்தி வரவில்லை. கி.பி. ஆரும் நூற்ருண்டில் தென் புலத்தில் செல்வாக்குடன் ஆண்ட இராட்டிரகூடர் காலத்தவர் என்பது அறிஞர் கருத்து.[3]

சமந்த பத்திரரே இரத்தின கரண்டகத்தை முன்னர் எழுதிப் பின்னர் அவரே தமிழில் அருங்கலச் செப்பினையும் எழுதினராதல் கூடும். இதற்குக் காரணங்கள்:

1. இரத்தின கரண்டக நூலாசிரியர் பெயர், கன்னட மொழி பெயர்ப்பு ஆசிரியர் பெயர் ஆகியவை வெளிப்படையாகத் தெரிய, அருங்கலச் செப்பின் ஆசிரியர் பெயர் மட்டும் மறைய வலிமையான காரணம் இல்லை.

2. இரத்தின கரண்டகத்தின் காலமும், அருங்கலச் செப்பின் காலமும் ஏறத்தாழ ஒன்றே.

3. வான்மீகியை வாழ்த்தும் கம்பனைப் போல, அருங்கலச் செப்பின் ஆசிரியர் யாதொரு வாழ்த்தும் வழி நூல் தகவலும் கூற வில்லை. கூருமை ஒரே நூலாசிரியர் எழுதிய முதன்மையை அறிவிக் கிறது.

4. இரத்தின கரண்டகம் என்ற பெயரைக் காட்டிலும் அருங்கலச் செப்பு என்ற பெயரே பழமையானது. சிலப்பதிகாரத்தில் வழங்கிய பெயர்.

5. இரத்தின கரண்டகம் நூலாசிரியர் தமிழரே என்பதால் அருங்கலச் செப்பு என்ற தமிழ் நூலையும் அவர் படைத்திருத்தல் கூடும்.

6. நீலகேசி உரை சான்று: முந்துற்ற மூடப்புலி (122) என்று தொடங்கும் பாடல் உரையில்,

> *மூவகை மூடமும் எட்டு மயங்களும்*
> *தோவகையில் காட்சிக்கண் இல்*
> *அவ்விநயம் ஆறும் அகன்றது நற்காட்சி*
> *செவ்விதின் காப்பான் இடை*

என்ற அருங்கலச் செப்புப் பாடல்களைக் காட்டி, 'என்ருர் ஆகலின்' என்று குறிப்பர் வாமன முனிவர். தொடர்ந்து இரத்தின கரண்டக சிராவக

---

3 அருணசலம், மு., த. இ. வரலாறு. 12-ஆம் நூ. II. ப, 781, சுகுமாரன். ஆ அருங்கலச் செப்புத் தெளிவுரை. ப. 6.

சாரத்திலிருந்து 22, 23, 24 ஆம் பாக்களை எடுத்துக் காட்டி 'என்றார் ஆகலின்' என்று எழுதுவர். இரண்டு இடத்திலும் 'என்றார் ஆகலின்' என்று குறிப்பது பார்வைக் குரியது. வாமன முனிவர், அருங்கலச் செப்பு ஆசிரியர், இரத்தின கரண்டக ஆசிரியர் இருவரும் ஒருவரே என்றே கருதினர் ஆதலால், இரண்டு இடங்களிலும் 'என்றார் ஆகலின்' எனக் குறித்தனர் போலும். இரண்டு நூற்களின் ஆசிரியர் ஒருவராகலாம் என்பதற்கு இது வலிமையான சான்று.

7. ஒரே ஆசிரியரே, தமக்குத் தெரிந்த வேறு மொழிகளிலும் நூல் எழுதுதல் உண்டு. 'காவிய தர்சம்' என்ற நூலின் ஆசிரியராகிய தண்டியே, தமிழில் தண்டி அலங்காரத்தை எழுதினர் என்ற ஒரு கருத்துண்டு. வங்கக் கவி தாகூர், தான் வங்க மொழியில் எழுதிய கீதாஞ்சலிக்குத் தானே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தமை இங்கு எண்ணத்தக்கது. மலையாள எழுத்தாளர் தகழி சிவசங்கரம் பிள்ளை தாம் எழுதிய புதினங்களைத் தாமே ஆங்கிலத்தில் எழுதுவதும் இங்கே ஒப்பிட்டு ஓரத் தக்கது.

ஆக, தமிழும் சமற்கிருதமும் அறிந்த சமந்தபத்திரரே தமிழிலும் சமற்கிருதத்திலும் அருங்கலச் செப்பை இயற்றினர் என்று உய்த்துரைப்பதில் வலிவுண்டு.

தமிழகத்தில் சைன சமயம் ஓங்கி இருந்த காலத்திலேயே இந் நூல்கள் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும். மன்னர்களாலும் மக்களாலும் ஒரு சமயமாகக் கூட அல்ல, ஒரே சமயமாகப் போற்றப்பட்ட காலமாக இக்காலம் இருந்திருத்தல் வேண்டும். இல்லறத்தில் ஈடுபட்ட சிராவகர், தம்மைச் சார்ந்த யதிகளைத்-துறவிகளை - மனம் உவந்து ஓம்பிய காலம் ஆதல் வேண்டும். அன்றியும் வேற்றுச் சமயங்களை—வேதிச் சமயங்களை–வைதிகச் சமயச் சடங்குகளை வெளிப்படையாகவே, கண்டித்த—கண்டித்து ஒதுக்கிய காலம் ஆதல் வேண்டும். வேற்றுச் சமய இலிங்கியர், வேற்றுச் சமய ஆகமங்கள், வேற்றுச் சமயத் தெய்வங்களை விலக்குதல் வேண்டும் என்று 41-ஆம் பாடல் போதிக்கிறது. தீ மிதித்தல், கங்கை, காவிரி புண்ணிய நீராடல் என்ற வைதீகச் சடங்குகளை 30-ஆம் பாடல் உலக மூடங்கள் என்று பழித்துரைக்கிறது. பிற தெய்வ வணக்கத்தைத் தேவமூடம் என்றும், மாசுண்ட மார்க்கத்து நின்றாரைப் பூசித்தல் பாசண்டி மூடம் என்றும் இடித்துரைக்கின்றன 31, 32, 33ஆம் பாக்கள். இங்ஙனம் வேற்று மதச் சடங்குகளை வெளிப்படையாகக் கண்டிக்கும் சைன நூல், மாற்றுச் சமயங்கள் செல்வாக்காக இருந்தபோது எழுதப்பட்டிருத்தல் இயலாது. எழுதவிட்டிருக்கவும் மாட்டார்கள். ஆதலால், இவ்வாறு துணிந்து, தெளிந்து எழுதத் தகும் சூழல், பிற்காலச் சோழர் ஞாலத்திலும் கிடையாது. பாண்டிய, பல்லவர் காலத்திலும்

கிடையாது. கி. பி. 7ஆம் நூற்றுண்டு முதல் தமிழகத்தில் சைனர்தம் வாழ்க்கைசெத்துப் பிழைக்கும் வாழ்வாகவே ஆக்கப்பட்டது. கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டு முதல், முதல் விசயாலய சோழன் காலம் தொடங்கி தேய்ந்து, ஒய்ந்து நலிந்து, மெலிந்துபோன, சைனம் மேலும் ஒடுக்கப்படவில்லை. எனினும் 'ஓ' என்று சொல்லும் அளவிற்கு ஊக்குவிக்கப்படவும் இல்லை. வேத சமயங்களே ஆதிக்கஞ் செலுத்தின. சைனம் அழிக்கப்படாமல்—செழிக்கவும் விடாமல்—அனுமதிக்கப்பட்டது. அவ்வளவே! ஆகவே கி. பி. 7ஆம் நூற்றுண்டிற்குப் பின் அருங்கலச் செப்பு இயற்றப்பட்டிருக்க வாய்ப்பில்லை; இரத்தின கரண்டகமும் இயற்றப்பட்டிருக்க வாய்ப்பில்லை. எனவே இவ்விரண்டு நூல்களும் கி. பி. ஆரும் நூற்றுண்டு அளவிலேயே இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இக்காலமே—தமிழகம் எங்கும் பரவலாகவும், பாண்டிய நாட்டில் குறிப்பாகவும் களப்பிரர் என்ற சைன சமயம் சார்ந்த தமிழர் ஆண்ட காலம் ஆகும். சைன சமயத்தின் பொற்காலம் என்று இதனைக் குறித்தல் வேண்டும். பாண்டியன் கடுங்கோன் கி. பி. 575இல் தலை எடுக்கும் வரை—சைனர்தம் ஆட்சியும் மாட்சியும் குன்றவில்லை; குலையவில்லை.

அருங்கலச் செப்பில் இடம் பெற்றுள்ள வடக்கிருத்தல்—சல்லேகனைக் கருத்துக்களும் (145-153) இதனை வற்புறுத்துகின்றன. தமிழ் நாட்டில் வடக்கிருந்து உயிர் நீக்கும் வழக்கம் சங்க காலத்தில் காணப்பெறுகிறது. பிற்காலத்தில் இவ்வழக்கம் பரவலாக இருந்ததற்கான சான்றுகள் இல்லை. தன் காலத்தில் பரவலாக வழக்கத்தில் இல்லாத சல்லேகனையை ஆசிரியர் ஒன்பது பாக்களில் விவரித்திருப்பாரா? மாட்டார். உண்ணுநோன்பு இருந்து உயிர் நீக்கும் பழக்கம் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றில் சுட்டப்படுகிறது.

திருநாதர் குன்றக் கல்வெட்டு: இக் குன்றம், செஞ்சியின் ஒரு பகுதியாக உள்ளது. சந்திரநந்தி என்ற சைனத் துறவி 57 நாட்கள் உண்ணு நோன்பு (சல்லேகனை) இருந்து உயிர் நீத்ததை இங்குள்ள கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

*ஐம்பத்தேழ சைனந் நோற்ற*
*சந்திர நந்தி ஆசிரிகர்*
*நிசீதிகை.*

'ஐம்பத்து ஏழு—ஐம்பத்தேழு நாட்கள், அசனம்—உண்ணு நோன்பை, நோற்ற—கடைப் பிடித்த, சந்திரநந்தி—சந்திரநந்தி என்ற பெயருடைய, ஆசிரிகர்—ஆசிரியர், நிசீதிகை—உயிர் விடுகை.' என்பது மேற்கண்ட கல்வெட்டின் பதப் பொருள். இவ் வட்டெழுத்துக் கல்வெட்டின் எழுத்து அமைதியைக் கொண்டு, இது கி.பி.

6, 7ஆம் நூற்றுண்டினது என்று கல்வெட்டாய்வாளர் கருதுகின்றனர்.[4] ஆக இக் கல்வெட்டும், சல்லேகனை, கி.பி. 6. 7ஆம் நூற்றுண்டு அளவில் தமிழகத் தொண்டை மண்டல வட்டாரத்தில் இருந்ததைக் காட்டுகிறது. இக்காலத்திற்குப் பின் உண்ணு நோன்பு உயிர்விடுகைபற்றிய சான்று இருப்பதாகத் தெரியவில்லை.[5] எனவே இவ் வழக்கம், தமிழகத்தில் நிலவிய காலத்திலேயே இரத்தின கரண்டகமும் அருங்கலச் செப்பும் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்று உய்த்துணர்தல் பொருந்தும்.

அருங்கலச் செப்பு குறள் யாப்பில் இயற்றப் பட்டிருப்பதும் இங்கே எண்ணத் தக்கது. பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் தோன்றிய கால வட்டத்திலேயே (கி.பி. 2 முதல் 6ஆம் நூற்றுண்டு வரை) வெண்பா யாப்பு, செல்வாக்குப் பெற்றிருந்தது. சிறப்பாக அற வுரைக்கு, வெண்பா யாப்பே மிகவாகப் பயன்படுத்தப்பட்டது. குறள் வெண்பாவில் இயற்றப்பட்ட அருங்கலச் செப்பும் இக்கால எல்லையில் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பதே பொருத்தம். பிற்காலத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக வெண்பா நூல்கள் தோன்றினும் அவை பல அல்ல.

**பாயிரம் இல்லாமை:** தமிழ் இலக்கியங்களில் நூல் முகப்பில் இடம் பெறுவது பாயிரம். ஆனால் இவ் வழக்கம் பழமை வாய்ந்த தில்லை. தொல்காப்பியம், சங்க இலக்கியம் (அகநானூறு தவிர), சிலப்பதிகாரம், மணிமேகலை என்பவற்றுள் பாயிரம்—இல்லாமை நோக்கத் தக்கது. சிலவற்றுள் இடம்பெற்றுள்ள பதிகங்களும் நூலாசிரியர் காலத்தன அல்ல. அவை பிற்காலச் சேர்க்கை என்பது ஆய்வாளர் கருத்து.[6] அருங்கலச் செப்பில் பாயிரம் இடம் பெருமை ஆழ்ந்து சித்திக்கத் தக்கது. தமிழிலக்கிய வரலாற்றில் பாயிர முறை செழிப்புப்பெருத காலத்தில் அருங்கலச் செப்பு இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது இதனாலும் பெறப்படுகிறது.

**ழகர—டகர மாற்றம்:** ழகர டகர மாற்றம் வீர சோழிய ஆசிரியரால் விவரிக்கப் பெறுகிறது. தமிழ்+சொல்=தமிட் சொல் என்றுகும் என்பது அதன் கோட்பாடு (வீர. 7, 18). புகட்சி—புகழ்ச்சி (104, 149), வாட்சி - வாழ்ச்சி (104) என்பன அந்நூலிலும், அந்நூல் உரையிலும் காணப்படும் சொற்கள். இவ்வழக்குகளை இலக்கண ஆசிரியரே தோற்றுவித்திருத்தல் இயலாது. தனக்கு முன் வழங்கிய இலக்கியங்களே வீரசோழியத்திற்கு மூலமாதல் வேண்டும். அருங் கலச் செப்பில் இத்தகு வழக்குகள் இடம் பெற்றுள்ளன. வாட்கை—

---

4. காசிநாதன், நடன; தாமோதரன், கு. கல்வெட்டு ஓர் அறிமுகம், ப. 41
5. இப்பழக்கம் சைன முனிவர்களிடையே இன்றும் அருகி நிலவி வருகிறது.
6. அறவாணன் க ப, பதிக வளர்ச்சி வரலாறு, செந்தமிழ்ச் செல்வி, 1974

வாழ்க்கை (52), சூட்சி—சூழ்ச்சி (139) என்பன அருங்கலச் செப்பு வழக்காறுகள். வீரசோழிய நூலின் காலம் கி. பி. 10ஆம் நூற்றுண்டு. அவர் இலக்கணத்திற்கு உரிய இலக்கிய வழக்காறு கி. பி. 10ஆம் நூற்றுண்டிற்கு முற்பட்டது என்பது தெளிவு. இதனால் அருங்கலச் செப்பின் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டு என்பார் கருத்துச் சற்றும் பொருந்தாமை உணரலாம்.

சிலர், சீவக சிந்தாமணியில் நாய் தேவனாகும் கதை சொல்லப்படுகிறதே. இக்கதையை நினைவில் கொண்டுதான் அருங்கலச் செப்பு ஆசிரியர்,

*தேவனும் நாய் ஆகும் தீக்காட்சியால், நாயும்*
*தேவனும் நற்காட்சி யால்* (38)

என்று எழுதினர் என்பர். இதனால் சீவக சிந்தாமணிக்கு அருங்கலச் செப்பு பிற்பட்டது என முடிவுரைப்பர். இரத்தின கரண்டகத்தை மூலநூலாகக் கருதும் அவர்—கி. பி. ஆறும் நூற்றுண்டைச் சார்ந்த அந்நூலின் உள்ளும் இக்கதை உள்ளதை மறந்துவிட்டனர். சைன சமய நூல்கள் சுட்டும் கதை நிகழ்ச்சிகள் மிகப் பழையன; அவற்றை வெவ்வேறு நூலாரும் எடுத்தாளுதல் வழக்கம். அவ்வாறே இங்கும் எடுத்தாளப்பட்டதாகக் கருதுதலே பொருத்தம். நனைதாடி வெண்ணெய்க்காரன் முதலான கதை அருங்கலச் செப்பிலும் (81) நரிவிருத்தத்திலும் (28, 29) எடுத்தாளப்படுதலை நோக்குக.

ஆக இவற்றை நோக்க, இரத்தின கரண்டகம், அருங்கலச் செப்பு என்ற இரு நூல்களும் ஒரே நோக்கின, போக்கின என்பதுடன் அவை ஒரே காலத்தன; ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டன என்று முடிவு செய்யலாம். என்றாலும் இரண்டு நூல்களையும் ஒருங்கு வைத்து ஆய்தல் வேண்டும்.

ஆசிரியர் தம் பெயர் சாந்திவர்மன் என்பதும், வர்மன் என்ற பெயரை அறிமுகப்படுத்தியவர் பல்லவ மன்னரே என்பதும், நூலில் விரிவாகப் பேசப் பெறும் சல்லேகனை பற்றிய கல்வெட்டு, தொண்டை நாட்டை ஒட்டிய செஞ்சித் திருநாதர் குன்றில் இருப்பதும் முற்காலத்தும் பிற்காலத்தும் தற்காலத்தும் தொண்டை மண்டலம் சைனர் வாழ்விடமாய் இருப்பதும், தொடக்க காலப் பல்லவ மன்னனை மகேந்திர வர்மன் சைனனாக இருந்தான் என்பதும் நூலாசிரியர் தம் பிறப்பிடம் தொண்டை மண்டலமோ என்று ஐயுற வைக்கின்றன. சமந்த பத்திரர் தம் ஊர் உர்காபுரம் எனப்படும் ஒரு குறிப்பும் இங்கே நினைக்கத் தக்கது. இவ்வூர் சோழ மண்டல உறையூரா, அல்லது தொண்டை மண்டலத்தைச் சார்ந்த ஓர் ஊரா என்பதும் மேலும் ஆராயத் தக்கது.[7]

---

7. காஞ்சி நகரத்தைச் சேர்ந்தவர் ஆகலாம் என திரு. சி. ஆர். ஜெயின் கருதுவதும் இங்கே நினைக்கத் தக்கது.

# நூல் அமைப்பு

## அறப்பாகுபாடு

- **நற்சாட்சி (3—56)**
  - இறைவன் (5-8)
  - நூல் (9-10)
  - முனி (11-12)
- **நல்ஞானம் (57—61)**
  - சரிதம்
  - புராணம்
  - அருந்தக் கியானம்
- **நல்லொழுக்கம் (62-153)**
  - இல்லறத்தார்க்கு
    - விரதம் 3
  - துறவறத்தார்க்கு
  - அணு விரதம் 5 (66-81)
    1. கொல்லாமை (67-68)
    2. பொய்யாமை (69-70)
    3. கள்ளாமை (71-73)
    4. காமமின்மை (74-76)
    5. பொருள் வரைதல் (77-78)
  - குண விரதம் 4 (85-108)
    1. திசைவிரதம் (85-88)
    2. பயனில செய்யாமை (89-97)
    3. ஐந்தன் சுவை அடக்கல் (98-106)
  - சிக்கா விரதம் 3 (107-142)
    1. சாமாயிகம் (107-121)
    2. உண்ணா விரதம் (122-125)
    3. இடம் வரைதல் (129-133)
    4. ஈகை (134-142)
  - பூசை (143-1 4)
  - வடக்கிருத்தல் (145-153)
  - [illegible] விரதம் (63-64)

### நற்சாட்சிக்கு வேண்டுபவை (13-28)

1. ஐயம் இன்மை,
2. அவா இன்மை
3. உவர்ப்பின்மை
4. மயக்கின்மை
5. அறப்பழி நீக்கல்
6. அழிந்தாரைத் தாங்கல்
7. அறத்துக்கு அளவளாவல்
8. அறத்தை விளக்கல்

### நற்சாட்சிக்கு வேண்டாதவை

1. மூடம் 3: உலக மூடம், தேவ மூடம், பாசண்டி மூடம் (30-33)
2. மதம் 8: பிறப்பு, குலம், வலி, செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், உணர்வு (34-35)
3. அவிநயம் 6: மிச்சை இலிங் கியம், நூல், தெய்வம், அவா, அச்சம், உலோபிதம் (39-42)

(பிறைக்குறி எண்கள் பாடல்களைக் குறிப்பன)

**நூல் அமைப்பு :** இந்நூல் பழைய பாகுபலி நைனர் பதிப்பின் படி 179 பாக்களை உடையது; உட்பிரிவுகள் எதுவும் இல்லாதது. எனினும் முறையான நிரலான அமைப்பில் நூல் இயங்குகிறது. அறமே அனைத்திற்கும் அடிப்படை. அவ்வறத்திற்கு இரத்தினத் திரயங்கள் அடிப்படை. நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்பன இரத்தினத் திரயங்கள்—என விளக்கிப் பின்னர் அம்மூன்றையும் முறையே விரிவாக எடுத்துரைப்பர் (3—56). இப்பாடல்களுள், நற்காட்சியின் உறுப்புகள் அனைத்தையும் விளக்குவர். பின் நல்லறிவை (57—61) விளக்கித் தொடர்ந்து நல்லொழுக்கம் (62—153) பற்றி அதன் உறுப்புகளை விரிவாக்குவர். தொடர்ந்து அறப்பயன், இல்லறத்தார்தம் பதினொரு நிலைகள் என்பவற்றை எடுத்தோதி நூலை முடிப்பர். நூல் அறம்—இல்லறம் என்ற அடிப்படை பிறழாமல்—நிரல்படச் செல்வதை இந்நூலைக் கற்போர் நன்கு அறியலாம்.

**நூற்பொருள் :** நூலில் அடங்கியுள்ள பொருளழகைச் சுருங்க அறிந்து கொள்வது நூலைப் பயிலுதற்கு எளிமை ஆகும். ஆகவே, நூலின் உள்ளே பேசப்பட்ட பொருள், இங்கே தொகுக்கப் பெற்றுச் சுருக்கமாகத் தரப் பெறுகிறது.

**அறம் மூன்று :** நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்பன அறத்தின் கூறுகள். அவை மும்மணிகள் எனவும் படும்.

**நற்காட்சி :** நிலைத்த, நிலையற்ற அனைத்துப் பொருள்களையும் ஐயம் தெளிந்து தெரிந்து கொள்வது.

**நிலைத்த பொருள் :** இறைவன், நூல், முனிவன் ஆகியோர் நிலைபேற்றினை உடையவர்.

**இறைவன் :** குற்றம் குறை அற்றவன்; அறம் பெற்றவன்; அறிவு, ஆற்றல், இன்பம், காட்சி உடையவன்; விருப்பு வெறுப்பு இல்லாதவன்.

**நூல் :** இறைவனால் வெளிப்படுத்தப்படுவது; நிலையானது; மெய்ப்பொருள் காட்டுவது; உயிர்கட்கு அரண் ஆவது; துக்கம் கெடுப்பது.

**முனி :** இந்திரியங்களை வென்றவன்; பற்று உறவுத் தொடர்புகளை அறுத்தவன்; உலகியல் தொழில்களை வெறுத்தவன்; தத்துவ நினைவினன்; நற்சிந்தனையில் திளைப்பவன்,

நற்காட்சி உடையார்க்கு வேண்டியவை: ஐயமின்மை, அவா இன்மை, உவர்ப்பின்மை, மயக்கின்மை, அறப்பழி நீக்கல், அழிந்தாரைத் தாங்கல், அறத்துக்கு அளவளாவல், அறத்தை விளக்கல் என்ற எட்டும் வேண்டிய குணங்கள். இவற்றிற்கு அஞ்சன சோரன், அனந்தமதி, ஒத்தாயணன், இரேவதை, சிநேந்திர பத்தர், பாரிசர், வச்சிரமாமுனி, விண்ணு ஆகியோர் புராண வரலாறுகள் எடுத்துக்காட்டுகள்.

நற்காட்சி உடையார்க்கு இருக்க வேண்டாதவை: உலக மூடம், தேவ மூடம், பாசண்டி மூடம் என்ற மும்மூடங்களும், பிறப்பு, குலம், வலி, செல்வம், அழகு, சிறப்பு, தவம், உணர்வு என்பவற்றால் வரும் செருக்குகளும் இருக்கக் கூடாதவை.

நற்காட்சியின் பயன்கள்: இழிகுலத்தவன் ஆயினும், பழி குலத்தவன் ஆயினும் நற்காட்சி உடையவன் ஆனால் அவனே இறைவன்; நற்காட்சி உடையது நாய் எனினும் தேவனாகும்; தேவன் தீக்காட்சி உடையன் எனின், அவன் நாய் ஆவன்.

நற்காட்சியில் நீக்கத் தக்கவை: மிச்சை இலிங்கியர், பிற சமய நூல், பிற சமய தெய்வம், இவற்றை அச்சத்தாலோ, ஆசை அல்லது கருமித்தனத்தாலோ வணங்குதல் நீக்கத்தக்கன, இவற்றை வணங்கலும், போற்றலும் அவிநயம் ஆகும்.

நற்காட்சி இன்மையால் தீமை: நற்காட்சி இல்லாமல், ஏனைய நல்லறிவும் நல்லொழுக்கமும் இருப்பதால் எப்பயனும் இல்லை. வண்டிக்கு அச்சும், ஓவியத்திற்குச் சுவரும் போன்று, நற்காட்சி மிக இன்றியமையாத ஒன்றாகும்.

நற்காட்சியால் பெறத் தகும் நன்மைகள்: நற்காட்சி உடைமைக்கு நிகரான நன்மை உலகில் உயிர்களுக்குப் பிறிதொன்று இல்லை. அவர்க்கு நரகத் துன்பம் இல்லை. விலங்குப் பிறப்பு இல்லை; பெண் பிறப்பு இல்லை; அலிப் பிறப்பில்லை; இழிகுலப் பிறப்பு இல்லை; முடமாகப் பிறத்தல் இல்லை; நோய் இல்லை; வறுமை இல்லை; மாறாக அவர் அரசர் ஆவர்; இளவரசர் ஆவர்; வணிகக் கோமான் ஆவர்; தேவர் ஆவர்; விச்சாதரர் ஆவர்; தேவேந்திர சக்கரம் நரேந்திர சக்கரம், தர்ம சக்கரம் என்ற போகங்களை உடையவர் ஆவர்; வீடு பேறு உடையவராவர்.

நன் ஞானம் : வரலாறு, புராணம், விரத ஒழுக்கம் என்பவற்றை விளக்குவனவாய், உலகத்தின் நிலை பேற்றையும், கால நிலைமையையும் மயக்கம் இன்றி உரைப்பனவாய், இல்லற, துறவற நெறிகளைக் காட்டுவனவாய், ஊழின் தொடர்பையும், வீடு பேற்றையும், உயிரின் இயல்பையும், பிற பொருள்களின் இயல்பையும் துலக்குவனவாய் அமைவனவே நூல்களாம். அவற்றைக் கசடறக் கற்பதே நன் ஞானமாம்.

நல்லொழுக்கம் : நற்காட்சி உடையவர்களை வினைகள் நெருங்காதவாறு மீட்பது - காப்பது நல்லொழுக்கத்தின் இயல்பாம்.

நல்லொழுக்கத்தின் வகை : அது அணு விரதம்; மகா விரதம் என்று இருவகை. அணுவிரதம் இல்லறத் தார்க்கு உரியது; மகா விரதம் துறவறத்தார்க்கு உரியது.

இல்லறத்தார்க்குரிய நல்லொழுக்கங்கள் : இல்லறத்தார்க்கு ஐந்து அணுவிரதங்களும், மூன்று குண விரதங்களும், நான்கு சிக்கா விரதங்களும் உரியனவாம்.

நல்லொழுக்கத்தினுள் ஒன்றுகிய அணுவிரதம் : பெரிய கொலை செய்தல், பொய் சொல்லுதல், களவாடுதல், பிறன் மனைவியை விரும்புதல், பொருள் ஆசை கொள்ளுதல் என்ற ஐந்தினையும் அகற்றுதல் அணு விரதங்களாம்.

கொலை செய்யாமை : அசையும் உயிர்களைக் கொல்லாதிருத்தலும், கொல்ல ஏவாது இருத்தலும் வேண்டும். விலங்குகளின் காது முதலான உறுப்புகளை அறுத்தல், விலங்குகளை அடித்தல், அவற்றை ஓரிடத்தில் அடைத்து வைத்திருத்தல், கட்டி வைத்தல், அவற்றின் மீது அளவிறந்த சுமையை ஏற்றி வைத்தல் - என்பன வேண்டாதன.

பொய் சொல்லாமை : தீமை பயக்கும் சொற்களைச் சொல்லாதிருத்தலும், பிறரைச் சொல்ல வற்புறுத்தாது இருத்தலும் வேண்டும். வஞ்சம், பழிதூற்றல், பிறர் பொருளைக் கவர்தல், கோள் சொல்லுதல், பொய்க் குற்றச் சாட்டைப் பிறர் மேல் எழுதிப் போடுதல் ஆகியன வேண்டாதன.

திருடாமை : பிறரால் கொடுக்காதவற்றைத் திருடுதலும் திருட ஏவுதலும் ஆகாதவை. கொடுக்கும் போது குறையக் கொடுப்பதும், வாங்கும் போது நிறையப் பெறுவதும், திருட்டுப் பொருள்களை வாங்குவதும், நல்ல பொருள்களுடன் அல்லாத பொருள்களைக் கலப்படம் செய்வதும், திருடர்களுடன் உறவாடுவதும், வேண்டாதன.

காமமின்மை : தன் மனைவி வழி அன்றிப் பிறர் வழி காமம் நுகராதிருத்தல் வேண்டும். காம ஆசை, வேசை உறவு, பிறன் மனைவி மேல் மோகம், ஆகியன வேண்டாதன.

பொருளாசை இன்மை: பொருளை அளவோடு சேர்த்தல், பிறரைப் பொருள் சேர்க்குமாறு தூண்டாது இருத்தல் வேண்டியவை. அளவு கடந்து ஆடுமாடுகளைப் பெருக்கிக் கொள்வது, கஞ்சத்தனம், ஆகியன வேண்டாதன.

அணுவிரதச் சிறப்பிற்குச் சான்றுகள்: இல்லறத்தார் மேற்கூறிய அணு விரதங்களைப் பின்பற்றினர் எனில் அது சுவர்க்கச் சுகத்தையே தரும். சட்டி, தனதேவன், பாரிசன், நீலி, சயன் என்போர், அணு விரதங்களைக் கடைப்பிடித்தமையால் சிறப்பு அடைந்தார்கள். விரதங்களைப் பின்பற்றாமையால் தனசிரி, சத்தியன், தாபதன், தளவரன், தாடி வெண்ணெய்க் காரன் ஆகியோர் துன்பம் அடைந்தார்கள்.

குணவிரதம்: வாழ்நாள் வரையிலும், செல்லும் திசைகளின் எல்லைகளை வரையறை செய்து கொள்ளுதல் வேண்டும். ஆறு, மலை, கடல், காடு என்பனவற்றை எல்லையாக வரையறுத்து வாழ்தல் வேண்டும். தானே வரையறுத்துக் கொண்ட எல்லைகளை மறந்தும் மீறு திருத்தல் வேண்டும்.

அனர்த்ததண்ட விரதம்: தான் வாழும் எல்லைக்குள்ளும் பயனற்றவற்றைச் செய்தல் கூடாது. ஆசையை, சினத்தை, மேற்கொள்ளுதல் கூடாது. கால் நடை, பணியாட்களை குறைந்த விலைக்குப் பெறுதலும், பெறுமாறு பிறரைத் தூண்டலும் ஆகாது. பயனின்றி மரத்தை வெட்டுவதும், மண்ணைத் தோண்டுவதும் கூடாது; நெருப்பு, அரிவாள், கத்தி, நஞ்சு, கயிறு, கம்பு, நார் முதலான உயிருக்கு ஊனம் தரும் பொருள்களைப் பிறர்க்குக் கொடுத்தல் கூடாது. பிறரைக் கிண்டல் செய்வது, தீயன நினைப்பது, கொடுஞ்சொற்களைக் கூறுவது, செறுக்குறுவது, நன்மை தீமை உணராது செய்வது ஆகியன வேண்டாதன.

போக - உபபோக பரிமாண விரதங்கள்: உணவு முதலாயின ஒருமுறை அனுபவிக்கத் தக்கன- அவை போகப் பொருள்கள், படுக்கை வீடு முதலாயின மீண்டும் மீண்டும் அனுபவிக்கத் தக்கன—அவை உபபோகப் பொருள்கள். இப்பொருள்களின் மீது பொறிகளை மேய விடாதிருத்தல் பரிமாண விரதமாம். அறிவை மயக்குவதால் கள்ளையும், கொலைக்குக் காரணம் ஆவதால் தேனையும் துறத்தல் வேண்டும். வேப்பம்பூ, இஞ்சி, வெண்ணெய், அத்திப்பழம் ஆகியன உயிர்களின் உறைவிடம் என்பதால் அவற்றை விலக்குதல் வேண்டும்.

இப்பொருள்களை முற்றும் துறத்தல் முடிநிலை, சற்றுத் துறத்தல் தாழ்நிலை. ஆடை, அணிகள், பூக்கள், சந்தனம், வாகனம், படுக்கை, நீராடல், வெற்றிலைப் பாக்கு என்பவற்றை இன்னின்ன காலங்களில் மட்டுமே பயன் படுத்துவேன் என்று வரையறுத்துக் கொள்ளல்

வேண்டும். வரையறுத்த பின்னர், அப்பொருள்களை நுகர எண்ணு வதோ, நுகர்வதோ முற்றும் கூடாது.

*சிக்கா விரதம்*: ஏற்றுக் கொண்ட விரதத்தின் காலம் முடிகிற அளவும், கொலை பொய் முதலான ஐந்து பாவங்களையும் விட்டு, வழிபாடு செய்தல் சாமாயிக விரதம் ஆகும். குறிப்பிட்ட காலம் வரை, ஆடை, முடி, முட்டி ஆகியவற்றை இறுகக்கட்டி நற்சிந்தை யிலேயே வீற்றிருத்தல் வேண்டும். இதுவே கட்டு எனப் பெறும். இதனை வீட்டின் ஒரு பக்கத்திலோ, பிற வெளியிடங்களிலோ செய்ய லாம். இறைவனை வணங்கும் காலங்களில், உண்ணு விரத நாட்களில் இவ் விரதத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். உயிரினின்றும் உடல் வேறானது உறவும் வேறானது என்பதை மனத்துள் போற்ற வேண்டும்; செய்த தவற்றிற்காக வருந்தவும், திருந்தவும் வேண்டும்; தீயன தீண்டேன்; வேண்டேன்; தூயன செய்வேன் என்று உறுதி கொள்ளுதல் வேண்டும்; நல்லனவற்றையே நினைத்தல் வேண்டும்; செய்தல் வேண்டும். பிறர்க்குத் துன்பமோ, சாக்காட்டையோ, கேட்டையோ மறந்தும் மனத்தால் நினைத்தல் ஆகாது. முறை கேடான வழிகளில் வரும் பொருளையும் முறைகேடர் தொடர்புகளையும் முற்ற விலக்கல் வேண்டும்; அறச் சார்வையும், வினைத்தீர்வையுமே மனத்தில் போற்றல் வேண்டும். நல்லவற்றை எண்ணுமை, கொல்லாமை, செய்யாமை, விரும்பாமை ஆகியன வேண்டாதன.

**உண்ணுவிரதம்**: சதுர்த்தசி, அட்டமி நாட்களில் உண்ணு நோன்பு இருத்தல் வேண்டும். நோன்பின் போது உயிர்க் கொலைக்குக் காரணமான எதனையும் செய்யாமை வேண்டும்; அறம் கேட்டல் வேண்டும், கிளத்தல் வேண்டும்.

உணவை முற்றும் துறத்தலும், ஒருவேளை துறத்தலும் வேண்டும். முன்னது உபவாசம்; பின்னது போசதம். முன் பின் நாட்களில் ஒரு வேளை உண்டு நடுநாள் முற்றும் உண்ணுதிருத்தல் போசத உபவாசம். இவ்விரத காலத்தில் பொருளைச் சரியாக நோக்காமல் கையாளுவது. மலம் சிறுநீர் ஆகியவற்றைக் கண்ட இடத்தில் கழிப்பது. படுக்கை யைச் சரியாகப் பாராமல் படுப்பது, வேலைகளைச் செய்து உழல்வது விரதங்களை முறைப்படி மேற்கொள்ளாதிருப்பது ஆகியன உண்ணு விரத காலங்களில் வேண்டாதன.

இடம் வரைதல்: குறிப்பிட்ட காலம் வரை, குறிப்பிட்ட நாட்டெல்லையைத் தாண்டிச் செல்வதில்லை என்று வரையறுத்துக் கொள்வது. வீடு, சேரி, ஊர், புலம், ஆறு, காடு, காதம் என முடிவு செய்து கொள்வது, இத்தனை மாதம் ஆண்டு வரை இன்ன எல்லையைக் கடக்க மாட்டேன் என்பது—தேசாவ காசிக விரத

இயல்புகள். தம் எல்லையைத் தாண்டி உள்ளவரிடம் உரையாடுதல், அங்கிருந்த பொருள்களை எடுத்து வருதல், ஏவலரை எல்லை கடந்து செல்லச் செய்தல், அங்குள்ளவர்க்குத் தெரியும்படி தன் உருவத்தைக் காட்டுதல், பொருள் எதையேனும் அங்கு வீசி எறிதல் என்பன வேண்டாதன.

ஈகை: உணவு, மருந்து, உறைவிடம், பிறபொருள்கள் என்பவற்றை எளியார்க்குக் கொடுத்தல் வேண்டும். துறவியர்க்கு ஈதல் வேண்டும். துறவியர்க்குத் துன்பம் ஏதேனும் நேர்ந்தால் அதனை அகற்றல் வேண்டும்; அவரை எதிர்கொண்டு அழைத்து, உயர்விடம் தந்து, இன்சொல் கூறி, நல்ல மனம் கொண்டு, செயல் தூயதாகி, கால்களைக் கழுவி, பூசித்து, வணங்குதல் வேண்டும். துறவியர்க்குச் செய்யும் கொடை வழி வரும் நல்வினைகளே, இல்லறத்தால் வரும் தீவினைகளைத் தீர்க்கும், தூர்க்கும். ஈதலே இன்பம், பேரின்பம். ஈதலைக் காலத்தே செய்யாமல் காலம் தாழ்த்திச் செய்தல், அன்பின்றிச் செய்தல் ஆகாதன.

உணவு அளித்தலுக்குச் சிரிசேனன், மருந்தளித்தலுக்கு விருடபேசன், இருப்பிடம் தந்தமைக்குப் பன்றி, நல்லறவுரை நல்கியதற்குக் குந்தகுந்தர் — சரியான எடுத்துக் காட்டுகளாம்.

பூசை: தேவாதி தேவனை இடைவிடாது உவந்து வணங்குதல் வேண்டும். அதனால் வரும் நன்மைக்குத் தவளை கதையே சான்று.

வடக்கிருத்தல்: துன்பம், நீங்காநோய், முதுமை, இவை வந்தால் எல்லாவற்றையும் துறந்து வடக்கிருத்தல் வேண்டும். இக்காலத்து மனம் மாசாற்று விளங்குதல் வேண்டும். ஆசை, சினம், சுற்றம், தொழில் நினைவுகள் என்ற அனைத்தையும் துறத்தல் வேண்டும். அறவுரை கேட்டல் வேண்டும்; பிறழாது ஒழுகல் வேண்டும்; மனத்திலிருந்து தளர்ச்சி, கலக்கம் இவற்றை அகற்றல் வேண்டும்: உணவு, நீர் ஆகியவவற்றைப் படிப்படியாக முறையே குறைந்து வரல் வேண்டும்; அவ்வாறு, செய்வோர் மந்திரங்களை முறையே ஓதி வரின் தேவர் தேவர்க்கு ஒப்பாவார்; தான் இவ்வாறு சாதித்தேன் என்ற இறுமாப்பு இன்றி, மாசு அகற்றி உயிர் நீப்பின் பிறவியை நீத்து உயர் நிலை அடைவர்.

அறன் வலியுறுத்தல்: அறத்தின் பயன்களை நல்ல நூல்களின் வழி கேட்டல் வேண்டும். பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு என்ற நான்கையும் அறுத்தல் அறத்தின் பயனாகும். பிறவி அறுத்தவர்க்கு விருப்பு, துன்பம், அச்சம் என்பன இல்லை. அவர் தூசும் களிம்பும் போக்கப்பட்ட பொன்னைப் போன்றவர். அவர்க்கு அளவற்ற

இன்பமும், அறிவும், வலிமையும். தெளிவும் உண்டாகும். அவர்க்கு அழிவு என்பது இல்லை. அவர் சூளாமணி போல நின்றிலங்குவர்.

**இல்லறத்தாரின் பதினொரு நிலைகள் :** இல்லறத்தார் அவரவர் பின்பற்றி ஒழுகும் விரதத்திற்குத் தக (1) காட்சி உடையார், (2) விரதம் உடையார், (3) நற்சிந்தையார், (4) உண்ணு நோன்பினர், (5) அழிவு செய்யார், (6) இரவு உண்ணார், (7) காமம் இல்லார் (8) தொழில் துறந்தார், (9) மிகு பொருள் விழையார், (10) உடன்பாடு இல்லார், (11) வினையறுப்பார் எனப் பதினொரு வகையினராம்.

**அருங்கலச் செப்பின் இலக்கிய அழகு:** மேலே கண்டவற்ருல் இல்லறத்தில் ஈடுபட்டவரைச் சரியான நெறியான பாதையில் அழைத்துச் செல்ல, அருங்கலச் செப்பு போட்டு வைத்திருக்கும் தடம் புலப்படும். நூல் முழுதும் கருத்துகளே. கருத்தைப் போற்றி மனத்தில் இறுத்த இலகுவாக இருப்பதற்காகவே, ஆசிரியரால் குறள் யாப்புப் பின்பற்றப்பட்டது போலும். தான் சொல்லும் கருத்துகள் சான்றுகளுடன் மக்கள் மனமேடையில் ஏறவேண்டும் என்பதற்காகப் புகழ்பெற்ற கதைகளைச் சான்று காட்டியுள்ளார். இம்முறை பிற சமய இலக்கியங்களில் இல்லாத புதுமுறை. இம்முறையை மனத்துள் கொண்டு, 'இந்திரனே சாலும் கரி' என்ற திருவள்ளுவனை ஒப்பிட்டு ஓர்தல் வேண்டும்.

திருவள்ளுவர், 'என் கருத்து' இது என்று தன்னை முந்துறுத்திக் குறள் எழுதும் இடங்கள், குழந்தைப் பேற்றைச் சொல்லும் போதும் (61) கயவரைச் சொல்லும்போதும் (107) ஆம். 'யாம் அறிவறிந்த' என்றும் 'யாம் கண்டது' என்றும் எழுதுவர். இந் நூலாசிரியர் ஒரே ஓர் இடத்தில் 'யாம்' என்று தன்னை முந்துறுத்திக் கூறுவர்.

*காட்சியோடு ஒப்பதுயாம் காணேம் வையத்து*
*மாட்சி உடையது உயிர்க்கு.* (46)

இதனுல் நற்காட்சியின் சிறப்பை ஆசிரியர் எத்துணை உயர்வாக மதித்தார் என்பது புலப்படும்.

**இவர் ஆளும் உவமைகள் :** பறை அடித்தலைப் போல (8), வண்டிக்கு அச்சினைப் போல (45), ஓவியத்திற்குச் சுவரைப்போல (45) என்பன இவர் ஆளும் உவமைகள்.

**பிறமொழிச் சொற்கள் :** இந்நூலில் கலைச் சொற்கள் பல சமற்கிருதத்தினின்று தமிழாக்கம் செய்யப் பெற்றுள. எனினும் சில அப்படியே சமற்கிருத அல்லது பிராகிருத வடிவிலேயே ஆளப்பட்டுள்ளன. சான்று: உவகூவனம் போன்றவை.

இந்திரியம்—இந்தியம், விரதம்—வதம் என்பன சிதைந்து வழங்கப்பெறும் பிறமொழி வடிவங்கள். இவை போன்ற பல சொற்களைப் பின்னே இணைக்கப் பெற்றிருக்கும் சொல்லடைவில் பார்க்க.

**நீலகேசி உரையில் எடுத்தாளப்படல்:** சைனக் காப்பியமாகிய நீலகேசிக்குச் சமய திவாகர வாமன முனிவர் உரை இயற்றினர். அவர் தம் உரையில் அருங்கலச் செப்புப் பாக்களை (29, 39) எடுத்தாளுகிறார் (நீலகேசி உரை 122). இவை அன்றி, இரத்தினக் கரண்டகப் பாக்களையும் இவ்வுரையாசிரியர் எடுத்தாளுவர் (122).

அறநெறிச் சாரம் என்ற முனைப்பாடியார் பிற்காலத்து எழுதிய நூலும், அருங்கலச் செப்பின் விரிவு என்று ஓரளவு கூறலாம்.

**இடைச் செருகல்:** பலராலும் பலமுறை ஒரு நூல் பயிலப்படும் போது பயிலப்படுவார் விரும்பியும், விரும்பாமலும் இடைச் செருகல்கள் வந்து சேருகின்றன. ஒரு நூலைப் பயில்வார், நூலைப் படிக்கும் போதும், படித்து முடிக்கும் போதும், தனக்குத் தோன்றும் எண்ணங்களை அங்கங்கே எழுதுவது இக்காலத்தும் வழக்கம்; அக்காலத்தும் வழக்கம். இக்காலத்து எழுதப்படும் குறிப்புகளைக் கண்டறிந்து வேறுபடுத்தி விடமுடியும். அச்செழுத்துக்களின் ஊடேயோ, பக்கங்களிலோ பயில்வார் எழுதும் குறிப்புகள் பென்சிலாலோ, பேனாவாலோ அமைவதால் வேறுபடுத்தி விடுதல் எளிது. முற்காலத்தோ ஓலைச் சுவடிகளே எங்கும் எழுதப் பயன்பட்டன. எழுத்தாணியால் எழுதப் பட்டுள்ள சுவடிகளைப் பயிலும்போது, மாணாக்கர், தமக்கு ஆசிரியர் கூறுவனவற்றையும், தமக்கே தோன்றுவனவற்றையும் சுவடிகளின் பக்கவாட்டில் எழுத்தாணியால் எழுதிப் போற்றுதல் இயல்பு. பல ஆண்டுகட்குப் பிறகு, இந்தச் சுவடிகளில் இடம் பெற்ற மூலநூலும் பயிலுவார் எழுதிய குறிப்புகளும் பிற்காலத்தார்க்கு ஒன்று போலத் தோன்றுகின்றன. அவர், முன்னோர் எழுதி இருந்த குறிப்புகளையும் மூல நூலாசிரியர்தம் கருத்து அல்லது உரையாசிரியர் குறிப்பு எனப் பிறழ உணர வாய்ப்பு ஏற்படுகின்றது. பின்னர் அவர் படிக்கும் போதும், பிறருக்குப் படிப்பிக்கும்போதும், பின்னே சேர்ந்த குறிப்புகளையும் வேறு பிரித்தறியாமல் மூலநூலாசிரியர் உடைமை என்றே கற்கிறார்; கற்பிக்கிறார். இப்படி இடைச் செருகல் பெரும்பான்மை. இவ்வாறு அன்றிச் சிலர், புகழ்பெற்ற நூலின் ஊடே, தாம் சில பாக்களைப் புனைந்து இணைத்துவிடின் தம் பாக்கள் மூலநூலோடு காலம் எல்லாம் வாழும் என்று விரும்புதல் உண்டு. இவ்வுணர்வும் நூல் மேல் நேரும் பெருமதிப்பால் ஏற்படுவதே. அவ்வாறு விரும்புவார், நூலின் ஊடே ஊடே தம் கைவண்ணத்தைக் காட்டிவிடுவர். காலப் போக்கில்

பிற் சேர்க்கையும் மூல நூலாகப் பிறழ்படக் கருத இடம் ஏற்பட்டு விடுகிறது.

இவ்வாறு ஏற்படும் இடைச் செருகல்கள், பாட பேதங்கள் புகழ் பெற்ற நூல்களுக்கு ஏற்படுதலே பெரும்பான்மை. கம்பராமாயணமும், சிந்தாமணியும் இதற்கு இலக்காகி இருப்பது சான்று. அருங்கலச் செப்பும் இவ்வாறு இலக்காகி இருக்கிறது. இடைச் செருகல்கள் நூலில் ஏறியுள்ளன; அவை ஏட்டுச் சுவடிகளில் எழுதி வைக்கப் பெற்றிருந்தன என்ற ஒரு காரணத்தினுலேயே மூலநூல் பகுதிகளாகக் கருதப்பட்டு அச்சேற்றப்பட்டுவிட்டன. இவ்வாறு இந்நூலில் இடம் பெற்றுள்ள சில பாக்கள், பிற்காலத்தார் வேண்டும் என்றே எழுதிச் சேர்த்தனவாகத் தெரியவில்லை. நூலின் சிறப்பில் ஆழ்ந்து ஈடுபட்ட சில சுவைஞர்கள் அந்நூலைப் பற்றித் தாம் எழுதிய பாராட்டுகளே. காலப் பின்னடைவில், நூற்பகுதியாகக் கருதப்பெற்றுப் போற்றப் பட்டிருக்கிறது. அவ்வாறு கருதிப் பின் சேர்க்கப் பெற்றனவே என்று எவ்வாறு உறுதி செய்வது? இதற்குச் சில அடிப்படைகள் பின்பற்றப் பெற்றுள்ளன.

1. எல்லாப் பிரதிகளிலும் சில பாடல்கள் இடம் பெருமல் சில பிரதிகளில் மட்டும் இடம் பெற்றிருத்தல்.
2. நூலின் பொதுப் போக்கிற்கு முரணுக இருத்தல்.
3. கூறுவது கூறலாக இருத்தல்.
4. நூலில் பின்பற்றப் பட்டிருக்கும் யாப்பிற்குப் பொருந்தாது இருத்தல்.
5. மூல நூலாசிரியன் கருத்திற்கோ, பெருமைக்கோ பொருந்தி வராமல் இருத்தல்.
6. பா யாப்பே பிழையாக இருத்தல்.
7. வேறு நூல் பகுதிகள் முழுதுமாகத் தேவையின்றி இடம் பெறுதல்.

இவ்வடிப் படைகளை அளவுகோலாகக் கொண்டு அருங்கலச் செப்பை ஆராயின், 175 முதல் 180 வரை இடம் பெற்றுள்ள ஆறு வெண்பாக்களும், 'நச்சரவு அணிநிழல்...' எனத் தொடங்கும் கடைசிப் பாட்டும், 'அணிமதிக் குடை' எனத் தொடங்கும் முதற் பாட்டும், ஆக இவ் எட்டுப் பாடல்களும் இடைச் செருகல்கள் என்று உய்த்துணர இடமிருக்கிறது. இவை இடைச் செருகல்களே என்பதைப் பின்வரும் காரணங்களால் உறுதி செய்து கொள்ளலாம்,

> 1. அணி மதிக் குடை அருகனைத் தொழ
> அருவினைப் பயன் அகலுமே

என்ற முதற்பாடல் எல்லா ஏட்டுப் பிரதிகளிலும் காணப் பெறவில்லை. சுபானு ஆண்டு கி.பி. 1883இல், பாகுபலி நயினரால் முதன் முதல் அருங்கலச்செப்பு அச்சேறியது. அவ்வச்சுப் பிரதியில் இப்பாடல் இடம் பெறவில்லை. டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்களின் எழுத்துப் பிரதியில் மட்டுமே உள்ள பாடல் இது. இதனை, கி. பி. 1941இல் அருங்கலச் செப்பை உரையுடன் வெளியிடும் போது, வீடூர் தர்ம சாம்ராஜ்ய சாஸ்திரியார் அச்சிட்டு விட்டார். அதிலிருந்து தொடர்ந்து இப்பாடல் அருங்கலச் செப்பு அச்சு நூல்களில் இடம்பெற்று வருகிறது. இப்பாடல் தமிழக அரசாங்க ஓலைச் சுவடி நூலகப் பிரதியிலும் இல்லை. இச் செய்தி அவர்கள் வெளியிட்ட அருங்கலச் செப்புப் பதிப்பால் உறுதியாகிறது. அன்றியும், இப்பாடல், யாப்பு வழியிலும் நூற் போக்கோடு சற்றும் பொருந்தவில்லை. அருங்கலச் செப்பு முழுதும் குறள் வெண்பாக்களால் இயற்றப் பட்டது. இப்பாடலோ குறள் யாப்பில் அமையவில்லை. அன்றியும் எந்த பா யாப்பும் இப்பாட லுக்குப் பொருந்தி வரவில்லை. யாப்புப் பிழைபட்ட பாடலை, அருங்கலச் செப்பு ஆசிரியர், எடுத்த எடுப்பில் முதற் பாடலாக எழுதி இருக்கவே மாட்டார். இது மட்டும் அல்லாமல், இப்பாடல் இல்லை என்ருல் அருக துதி இல்லாமல் போய்விடுமே என்று கலங்க வேண்டா.

> முற்ற உணர்ந்தானை ஏத்தி மொழிகுவன்
> குற்றம் ஒன்று இல்லா அறம்

என்ற பா அழகான அருக துதி. நுதலிப்புகுதல் என்ற உத்தி யமைந்த பாடல். பவணந்தி முதலான சான்ரோர் பின்பற்றிய நெறி. அன்றியும், 'முற்ற உணர்ந்தானை ஏத்தி' என்று இப்பாடலில் வணங்கியவர், 'அணிமதிக்குடை அருகனைத் தொழ' என்றும் எழுதினர் என்பது மூல நூலாசிரியர், கூறியது கூறிய குற்றம் செய்தவர் என்று ஆக்கி விடும். ஆதலால் இப்பாவை, இடைச் செருகல் எனக் கருதுதலே தக்கது.

> 2. நச்சரவு அணிநிழல் பச்சை மாமலைதனை
> நிச்சலும் நினைப்பவர்க்கு அச்சம் இல்லையே.

என்ற பாடல் எண் கொடுக்கப் பெருமலேயே, கி.பி. 1883இல் வெளியான பாகுபலி நயினர் பதிப்பில் தனியாக அச்சிடப் பெற்றுள்ளது. இப்பாடல் யாப்பு அமைப்பில் ஆசிரிய யாப்பில் அமைந்துள்ளது. மற்றப் பாக்கள் அனைத்தும் குறள் வெண்பாவாக அமைய, இது மட்டும் ஆசிரிய யாப்பில் அமைந்திருப்பதே இது

இடைச் செருகல் என்பதை உணர்த்துகிறது. பாட்டு வடிவம் மட்டும் அன்றி, பாட்டின் பொருளும் இந்த இடத்திற்குப் பொருந்துவதாக இல்லை. பார்சுவநாத வழிபாட்டை வற்புறுத்துகிறது பாட்டு. அருங்கலச் செப்பின் நூல் இறுதியில், திடும் என்று பார்சுவநாதர் துதி தேவைதானா? இறை வணக்கம் என்று கொண்டாலும் நூல் முதலில் இடம் பெறுதலே முறை. அவ்வாறு இடம் பெறவும் தேவை நேரவில்லை. ஏனெனில், 'முற்ற உணர்ந்தானை' ஏத்தும் பாட்டு முன்பே அங்கே உள்ளது. ஆதலால், பாவின் யாப்பினாலும் பாவின் பொருளாலும் இப்பாட்டுப் பின்னோர் சேர்க்கை என்பது தெளிவாகிறது

3. *காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய்*

என்ற திருக்குறள், அருங்கலச் செப்பில் 178ஆம் பாவாகக் காரணம் இன்றி இடம் பெற்றிருக்கிறது. காமம் வெகுளி மயக்கம் ஆகியன வேண்டா என்பது, அணுவிரதம் பற்றி நூலாசிரியர் பேசும்போது விரிவாக விளக்கி இருக்கிறார். மீண்டும், நூல் முடிவில், திருக்குறளிலிருந்து மேற்கோளாக எடுத்துக் காட்ட வேண்டிய தேவையில்லை. அத்தகு பழக்கம் இந்நூலாசிரியருக்கு இருப்பதாக நூலில் வேறு சான்றும் இல்லை. அணுவிரதம் பற்றிய பாடல்களில் ஈடுபட்டவர் ஒருவர், ஓலையில் ஒத்த கருத்துடைய (காமம் வெகுளி... என்ற) திருக்குறளை எழுதி வைத்துள்ளனர். பின்னே வந்தவர் தனி ஓலையில் இருந்த அத் திருக்குறளையும், நூற்பகுதியாகக் கருதி இருத்தல் கூடும்.

4. பா எண்கள் 175, 176, 177, 178, 179, 180 என்ற ஐந்து பாக்களும் அருங்கலச் செப்பு என்ற நூலின் பெருமையையும், அதனைப் படிப்பார் எய்தும் அரிய நற்பலன்களையும் பேசுகிறது.

*முத்தி நெறி காட்டும், முன் அறியாதார்க்கு எல்லாம்*
*சித்தி அருங்கலச் செப்பு* (179)

*தீரா வினை தீர்க்கும், சித்தி பதம் உண்டாக்கும்*
*பாராய் அருங்கலச் செப்பு* (180)

நூலாசிரியரே, தம் நூலைப் பற்றி இவ்வாறு எழுதினர் என்பது அவர் தற் செருக்கு உடையவர் என்று காட்டாதா? அதுவும், தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளும் தற்புகழ்ச்சி சற்றும் கூடாது என்று வற்புறுத்தி எழுதுகிற (பார்க்க பா எண்கள், 34, 35, 152) நூலாசிரியர்

*இவற்றால் பெரியேம்யாம் என்றே, எழுந்தே*
*இகழ்க்கில் இறக்கும் அறம்* (35)

என்று எழுதியவர், உலகிலேயே கடும் நோன்பாகிய தானே உண்ணு நோன்பு இருந்து உயிர் விடும் போது தற்புகழ்ச்சி கூடாது (152) என்று கருதுகிறவர். மேற்கண்டவாறு தம் நூலைப் பற்றித் தாமே இவ்வாறு புகழ்ந்திருப்பர் என்று நம்ப முடியவில்லை. அம்மட்டும் அன்றி இப்பாட்டைக் கூர்ந்து கவனித்தால் ஒரு சில செய்திகளே மீட்டும் மீட்டும் மாற்றிய சொல்வடிவங்களில் கூறப்பட்டிருக்கின்றன என்பது துலங்கும்.

அதிசாரம் என்பது தோஷம்—குற்றம் என்ற பொருள் உடையது. நல்லொழுக்கம் நிறைவேருமல் கெடுப்பது; மீறிய செயல் என்றெல்லாம் கூறலாம். இந்நூலில், இவ்வாசிரியர், அதிசாரம் என்பதற்கு இறப்பு என்ற சொல்லையே எங்கும் பயன்படுத்தியுள்ளார். பார்க்க பா. எண்: 68, 72, 79, 88, 97, 106, 121, 127, 128, 153. இவ்வாறு பயன்படுத்தியவர் 177ஆம் பாவில் மட்டும் 'தப்பு' என்ற சொல்லை அதிசாரம் என்ற பொருளில் பயன்படுத்தினர் என்பது பொருத்தமாக இல்லை. தப்பு என்பது பிற்கால வழக்கு. (திவ்விய பிரபந்த வியாக்கியானம். ப. 244 தன் கையால் தப்புச் செய்தது என்று பொடிய') இவ்வழக்கு இக்காலப் பொருளில், பன்னூறு ஆண்டுகட்கு முன் வழங்கி இருக்கும் என்று கருத இடமில்லை. இரத்ன கரண்ட சிராவகாசாரத்தில் இத்தகைய பாடல்கள் இல்லை என்பதும் இங்கே கருதத் தக்கது. ஆதலால், இச் சொல்லும், பாட்டின் பொருளும் 177ஆம் பாடல் இடைச் செருகல் என்பதை உறுதி செய்கின்றன.

நூலாசிரியர் இப்பாடல்களை எழுதவில்லை எனில், பின் யார்தான் எழுதிச் சேர்த்தார் என்ற ஐயம் எழுதல் இயல்பு. ஆழ்ந்து நோக்கினுல், இப்பாடல்கள் எல்லாம், அருங்கலச் செப்பைப் படித்துத் துய்த்த சுவைஞர், அருங்கலச் செப்புப் பற்றித் தாம் எண்ணிய எண்ணங்களைத் தம் ஓலைச் சுவடியில் அழகான பாடல்களாக எழுதி வைத்துள்ளனர் என்பது விளங்கும். நூலாசிரியர் எழுதினர் என்பதை விட, அருங்கலச் செப்பின் கருத்தழகில், வெண்பா அழகில் ஈடுபட்ட அறிஞர் பலர் எழுதி வைத்த 'பாராட்டுப் பத்திரம்' என்ற பார்வையில் சற்று நினைத்து அப்பாடல்களை மீண்டும் ஒருமுறைப் பார்க்க. இப்பாக்களை ஆசிரியர் எழுதவில்லை என்பது தெளிவாகி விடும்.

சிலர் இவ்வமைப்பிற்கு ஓரமைதி கூறுதல் கூடும். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் தேவாரத்திலும் பதிக முடிவில், அதிகார முடிவில் நூல் அல்லது பாவின் சிறப்பைக் கூறினது போன்று, இவரும் கூறினர் என்ருல் என்ன என வினவலாம். ஆழ்வார்கள் நாயன்மார்கள் பாசுரங்களின் ஈற்றில் அவ்வாறு காணப்படுதல் உண்மையே. அவற்றை நூலாசிரியர் இயற்றினர் என்பதை விட, தொகுப்பாசிரியர் கூறினர் எனக்கொள்ளலே அவருக்குப் பெருமை தருவதாம்; மாருக

அவரே எழுதினர் என்பதற்குச் சான்று எதுவும் இல்லை. அப்படியே அவரே எழுதினர் என்றாலும் கூட, 'தற்புகழ்ச்சி கூடாது' என்று வரையறுத்து, வற்புறுத்திக் கூறும் அருங்கலச் செப்பு நூலாசிரியரே தம் நூற் பெருமையைப் பறை சாற்றிக் கொண்டார் என்பது நூலாசிரியர் தம்முள் முரணுகிறார் என்று காட்டுவதாகும். தன் பெயரைக் கூட நமக்கு வைத்துப் போகாத, அப் பெரும் புலவர், இவ்வாறு பெருமை அடித்திருப்பார் என்று கருதக் கூடவில்லை. ஆதலால், இப் பாடல்கள், அருங்கலச் செப்பு நூல் விரும்பிகள் சிலர், காலந்தோறும் எழுதி வைத்துச் சென்ற 'அருங்கலச் செப்புப் பாராட்டுப் பாமாலை' என்று கொள்வதே பொருத்தம்.

மேற்கண்ட எட்டுப் பாடல்களும் இடைச் செருகல் என்று கொண்டாலும், அவற்றையும் அருங்கலச் செப்பின் நூற் பகுதிகளாகப் படித்துப் பழகியவர்கள் ஏமாறுதல் கூடாது என்பதற்காக அப்பாடல்களும் கொடுக்கப் பெற்று, உரையும் நல்கப் பெற்றுள்ளது.

**பதிப்பு வரலாறு :** அருங்கலச் செப்பு மிகச் செல்வாக்குப் பெற்ற நூலாயினும் மிகக் காலம் தாழ்ந்தே அச்சாகி இருக்கிறது. கி.பி. 1812-இல் ஐரோப்பிய அறிஞர் எல்லீஸ் தம் 'Tirukkural on Virtue' என்ற நூல் மூலமாக ஏழு (30, 32, 33, 66, 87, 134, 147) பாக்களைத் தம் நூலில் எடுத்துக் காட்டுவதன் மூலம், முதன் முதல் அச்சுலகில் அருங்கலச் செப்பை அறிமுகப்படுத்தினர். அன்றியும், 'இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை' என்ற குறளிற்கு 'On Domestic virtue' எனும் தலைப்பில் விளக்கம் எழுதும்போது' 'The observations of the Sraavaca' என்ற தலைப்பில், அருங்கலச் செப்பில் கூறப்பெற்ற செய்திகளை ஆங்கில மொழிவழி சுருக்கித் தருகிறார்.

The Sravacah is of three grades; the Jaghanyam, the Maddiyamam and the Uttamam. The first are the worldly sort who though professing the religion are scarcely considered as belonging to this community; the second are more strict in diet and correct in religious observance; the third, though still continuing in the marriage state, practise merely the same austrities as the Yeti. The second of these comprehends the great body of the Jaina Laity, and by them the following rules in addition to those already stated, should be observed. They are collected from Retnacardacam, the cabinet of jewels, the original of the Tamil abridgement quoted under the similar title of Arungala-Cheppu—அருங்கலச் செப்பு. Those things which a Madhyama

Srâvaca should observe are as follows :—He should have a firmfaith in Jineswara, the Lord of the three worlds, who is crowned by a triple Umbrella, and whose appearance is most glorious, placing, as it were, his feet on the core of the heart; he should be zealous for the truth; should consider virtue as the friend and sin as the enemy of life; should clearly comprehend the difference between heaven and final beatitude; when repeating his daily prayers and performing his devotion in the morning, noon and evening, he should offer libations of water, Arghyam, to the Divine Being only, who is worshipped by all living; he should practise four kinds of dicipline, by never passing the bounds of the country in which he resides, by vowing the performance of good works, by fasting on alternate days and by honoring religious persons; on the four Parvams, namely on the eighth, and fourteenth day of the moon and on the day of the new and full moon, he should observe a fast as strict as his strength will allow.

Those things he should avoid are: inordinate care for worldly wealth; the several kinds of fear, namely the dread of this world and of the other, the dread of inability and of the discovery of thoughts, the dread of death, of destiny and of disease; the desire either of living longer or of dying sooner; gambling, eating flesh-meat, drinking spirits, frequenting the company of harlots, hunting, seducing the wives of others and theft, which are the seven causes of affection; the offering of Libations of water to the sun; bathing during eclipses; worshipping the fire with various rites as a deity; prostration behind a cow; the consecration of precious stones, vehicles and weapons; bathing in the sea and in rivers as a purification from sin; the dedication of mounds of earth and stones; suicide by falling from a mountain or into the fire, these and all similar worldly follies; also the superstitous folly of worshipping Gods, influenced by affection or aversion, for the purpose of obtaining special endowments; and the heretical folly of believing that to be the true path in which those walk, who are involved in the whirlpool of life, and debased by avarice and the destruction of creatures; eating of the fruit of the Fig-tree, the Arasu, the All, the caltal or the Elandai, which all contain animal culex, or of honey. Moreover he must not receive as Gods those that are not Gods, as Gurus those who are not Gurus, or as the principles of nature (tatva) those which are

not such; and he must abstain from three things, namely, from quitting his native place, from giving to others either weapons or tools by which life may be destroyed, and from excess in gratifying the senses, either in minor pleasures, as in smelling perfumes or listening to music, or in higher gratifications, as in eating delicious meats, or enjoying the society of beautiful women.

New Edition p 173-175, 1955
Old Edition p. 134-135, 1812

அச்சு உலகில், அருங்கலச் செப்பின் சில பகுதிகளை முதன் முதலில் அறிமுகப்படுத்தியவர் எல்லீஸ் அவர்களே ஆவார். அதனுடன் அன்றி, ஆங்கில மொழி வழி இவரே இந்நூலின் கருத்துகளை முதலில் தந்தார்.

இவருக்குப் பின் அருங்கலச் செப்பு மூலம் முழுதும், ஏட்டில் பலவாருக இருப்பதை நரியம் புதூர் குந்தியப்ப நயினர் குமாரர் பாகுபலி நயினுரால், புதுக்கோட்டை சமஸ்தான வித்துவான் பா. முருகேச கவிராயர் சகோதரராகிய, பா. அரங்கசாமி உபாத்தியா யரைக் கொண்டு, பிழையறத் திருத்தி, தனது குமாரத்தி அம்மணி யம்மாள் பொருட்டு காஞ்சிபுரம் வீராசாமி முதலியார் குமாரர் திருவேங்கட முதலியார் இயற்றமிழ் விளக்க அச்சுக் கூடத்தில் சுபானு வருஷம் ஆனி மாதம் (கி.பி. 1883) ஆறு அணு விலையில் அச்சிடப் பட்டது. இதுவே மூலம் முழுதுமாக முதலில் அச்சான அருங்கலச் செப்பு ஆகும்.

இப்பதிப்பில் 'அணிமதிக்குடை'—என்ற பாட்டுக் கிடையாது. மொத்தம் 179 பாடல்களே உள்ளன. 'நச்சரவு அணி நிழல்' என்ற கடைசிப் பாடலும் எண் கொடுக்கப்படாமல் தனியே இறுதியில் அச்சிடப் பெற்றுள்ளது.

கி.பி. 1941 இல், விழுப்புரம் தாலூகா, வீடூர் ஸ்ரீ A. தர்மஸாம் ராஜ்ய சாஸ்திரியார் அவர்களால் திருத்தி எழுதி அமைக்கப்பட்டு, கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் உபாத்தியாயர் ஸ்ரீ S. ஜயராமையா அவர்களால் ரூ. 1-4-0 விலையில் உரையுடன் பதிப்பிக்கப்பட்டது. உரையுடன் வெளிவந்த முதல் பதிப்பு இதுவே. இப்பதிப்பில்தான் முதன் முதலாக, 'அணிமதிக் குடை' என்ற பாடல் கடவுள் வாழ்த்திற்கு முன்பாகச் சேர்க்கப்பட்டது. எனினும் எண் கொடுக்கப்படவில்லை.

1959 இல், மர்ரே எஸ். ராஜம் கம்பெனியார், அருங்கலச் செப்பின் மூலத்தை மட்டும், அறநெறிச்சாரத்துடன் சேர்த்துப் பதித்து

வெளியிட்டனர். இப்பதிப்பு முற்றிலும் முன்னைய வீடூரார் பதிப்பைப் பின்பற்றிப் பதிக்கப்பட்டுள்ளது.

1960 இல் திரு. அ. சுகுமாரன் என்பார் அருங்கலச் செப்பிற்கு எளிய இனிய தெளிவுரையுடன் கூடிய பதிப்பைக் கொணர்ந்தார். இப்பதிப்பில் நூல் ஆராய்ச்சி எனும் தலைப்பில் அழகிய ஆழமான முன்னுரை ஒன்று அமைந்துள்ளது.

1972 தொடங்கி 1973 வரை, தமிழக அரசு ஓலைச் சுவடி நூலகத்தார், தம்மிடமிருந்த மணிப்பிரவாள உரையுடன் கூடிய மூலத்தை Government Oriental Manuscripts Library Bulltin வழி வெளியிட்டனர். பல பாட பேதங்கள் உடைய இப்பதிப்பு வெளி வரக் காரணம், இக்காலத்து இங்கு மேலாளாராகப் (Caurtor) பணி யாற்றிய திரு. ர. ந. சம்பத் ஆவார். இப்பதிப்பில், வித்துவான், பூ. சுப்பிரமணியம் பி. ஏ. எல்லாப் பாக்கட்கும் தமிழில் பொழிப்புரை ஒன்று எழுதிச் சேர்த்துள்ளார். 'நச்சரவு' என்று தொடங்கும் இறுதிப் பாடலும், 'அணிமதிக்குடை' எனத் தொடங்கும் பாடலும், இப்பதிப் பில் இல்லை என்பது குறிப்பிடத் தக்கது.

**இப்பதிப்பின் சிறப்பு :** அதன் பின் வரும் பதிப்பு இதுவே. இப் பதிப்பிலுள்ள சிறப்பு இயல்புகளாவன :

1. பாக்கள் அனைத்தும் பதவுரை, கருத்துரை விரிவுரை பெறு கின்றன.

2. இதற்கு முன் வந்த அச்சுப் பிரதிகளையும், ஓலைச் சுவடிகளை யும் கொண்டு மூலம் சரி பார்க்கப் பெற்றுப் பதிப்பிக்கப் பெற்றிருக் கிறது.

3. அருங்கலச் செப்பு பாக்கள் அனைத்தும் (180+1) சொல் வாரியாகப் பிரிக்கப் பெற்று அகர நிரலில் சொல்லடைவாகத் தரப் பெற்றுள்ளன. ஒவ்வொரு சொல்லிற்குரிய பொருளும், இலக்கணக் குறிப்பும், வரும் இடங்களும் நல்கப் பட்டுள்ளன. இவ் அகராதி, அருங்கலச் செப்பில் ஆளப் பட்டுள்ள சொற்களை கண்டறிதற்கும், பொருளை உடன் பார்த்து அறிதற்கும் மிகப் பயன் படும்.

4. அருங்கலச்செப்பை முதலில் சில பாடல்களை அச்சில் ஏற்றிய வரும், ஆங்கிலத்தில் பெயர்த்து அயல் உலகிற்கு அறிமுகப்படுத்திய வரும் ஆகிய எல்லீஸ், அருங்கலச் செப்புப் பாடல்கள் சிலவற்றிற்கு எழுதிய ஆங்கில ஆக்கம் அங்கங்கே தரப் பெற்றுள்ளது.

5. நூலாசிரியர், நூல், பல பாடல்கள் இதற்கு முன் பெருத சில விளக்கங்களை இப்பதிப்பின் மூலம் பெறுகிருர்கள்/பெறுகின்றன.

*க. ப. அறவாணன்*

# அருங்கலச் செப்பு

## அருகன் வாழ்த்து

*அணிமதிக் குடை அருகனைத் தொழ*
*அருவினைப்பயன் அகலுமே*

**இதன் பொருள் :** அணி-அழகானவனும், மதி-முழுநிலவைப் போன்ற (வடிவும் வண்ணமும் பெற்ற), குடை-சந்திராதித்யம் சகல பாசனம் நித்திய விநோதம் என்ற முக்குடை உடையவனும் ஆகிய அருகனை-அருகப் பெருமானை, தொழ-வணங்க, அருவினை-நீங்குதற்கு அரிதான வினைகளின், பயன்-பலன், அகலும்-விலகும்.

**கருத்துரை :** அருகனை வணங்கினால் தொடர்ந்துவரும் வினைப் பயன் அகலும்.

**விளக்கவுரை :** அணி என்பது மதிக்கு ஏற்றாமல், 'அணி அருகன்' என்று ஏற்றிப் பொருள் உரைக்கப் பட்டது. அணியாத அழகிய அண்ணல் (திருநூற்.87) எனப் பாராட்டப் படுதல் காண்க. மதி போன்ற குடை-மதிக்குடை உவமைத் தொகை.

*முயல்கொண்ட கறைதுடைத்த முத்தணிந்த*
*மும்மதி முக்குடையாய்* —திருக்கலம்-5

*மதி மூன்றில் குடை மூன்றும் உடன் நிழற்ற*
—திருக்கலம்பகம்-1

*முக்குடையின் கீழ் அமர்ந்த முதல்வன் நீயே*
—நாககுமார காவியம்-19

*திங்கள் மூன்று அடுக்கிய திரு முக்குடை*
—சிலப்பதிகாரம்-11-1

*இலங்கொளி முக்குடை எந்திரத்து இயங்க*
—பெருங்கதை கடிக்கம்பலை-133

*கதிர்மா மதிபோல் தண்ணிய வான்குடை*
*மூன்றுடை யான தாமரையே* —திருநூற்றந்தாதி-6

அருகப் பெருமானுக்கு எட்டு வகைச் சிறப்புகள் உள்ளன. அவற்றுள் முக்குடைப் பேறும் ஒன்று. நில உலகாளும் வேந்தனுக்கு வெண் கொற்றக் குடை ஒன்று உண்டு. அருகனே மேலுலகம், கீழுலகம், நடுஉலகம் (அதோ லோகம், ஊர்த்வ லோகம், மத்யம லோகம்) என்ற மூவுலகையும் ஆள்பவன் ஆதலின் மூவுலக நாதன் (திரை லோக்ய நாதன்) எனவும், முக்குடை நாதன் எனவும் அழைக்கப்பட்டார். 'முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை அச்சுதன்' என்று பவணந்தி பரவுதல் (நன்னூல் 258) காண்க. 'புவனங்கள் மூன்றையும் ஆட்கொள்கை புண்ணியனே' என்பது திருநூற்றந்தாதி (5)

**சந்தராதித்தியக் குடை:** சந்திரனாகிய முழுமதி தோன்றின வுடன் உலகிலுள்ள உயிரினங்கள் அவன் தரும் குளிர்ச்சியினால் இன்பம் பெறுகின்றன. அதுபோலவே அருகன் தோன்றினவுடன், மூவுலகில் உள்ள நரகர், விலங்குகள், மனிதர், தேவர் அனைவரும் இன்பம் எய்துவர். அவர் தோன்றிய பொழுது, நரகரும் துன்பம் உணரார் என்பது கருத்து.

பாயிருள் கிழித்துப் பகல் கான்று சூரியன் எழும்போது இருள் விலகுகிறது; ஒளி பரவுகிறது. அதனைப் போலவே அருகன் அறி வுரையால் மக்கள் அனைவரும் அறியாமை இருள் நீங்கி, அறிவொளி பெறுவர். இவற்றைக் குறிப்பதால் முதல் குடை சந்திராதித்தியம் எனப் பட்டது.

**நித்திய விநோதம்:** மத்யம லோக மாகிய நிலவுலகில் வாழும் மக்கள் தாம் தவம் செய்து முத்தியை அடையும் வாய்ப்பினர். முத்தி பெற்ற ஆன்மாக்கள் அழிவு இல்லாமல் விளங்கும் நித்யானந்த மய மாகிய ஆத்ம மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கும். அருகனின் அருளாட்சியில் நடுவுலக ஆத்மாக்கள் அடையும் ஆத்ம மகிழ்ச்சியை நித்திய விநோதம் குறிக்கிறது.

**சகல பாசனம்:** கீழுலகில், ஏழ் நரகங்கள் உள்ளன. அவற்றில் எல்லை அற்ற உயிர்கள் உள்ளன. அவற்றின் கீழே 'ஆவாசத்தில்' தாவர உயிர்கள் பல உள்ளன. இவை துன்பத்தினின்று விடுதலை பெறுதலுங் கூடும். அவ்வுயிர்கட்கும் அருகனின் குடை நிழற்று கிறது. இந்த உயிர்கட்கும் குளுமை நல்கும் மூன்றாம் குடை 'சகல பாசனம்' எனப் பட்டது.[1]

---

[1] முக்குடை விளக்கம் வேண்டுவோர் பார்க்க: அறந்தரு ஜினகாஞ்சி மட சிம்மனகத்தை அடிகளார் அருளுரை. முக்குடை ஆனி இதழ் 1974.

வினைப்பயம், வினைப்பயன் என்று கடைப் போலி ஆக்கி, வினையால் வரும் அச்சம் அகல அருகனைத் தொழுக என்றும் கூறலாம். அதனை மனிதன் அருக வழிபாடு இன்றி அகற்றுவது அருமை என்பதை 'அருவினை' என்ற தொடர் குறிக்கிறது.

1. முற்ற உணர்ந்தானை ஏத்தி, மொழிகுவன்
   குற்றம்ஒன்று இல்லா அறம்

(இ-ள்) முற்ற உணர்ந்தானை-அனைத்து உலகங்களையும்[2], கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் என்ற அனைத்துக் காலங்களையும் ஒருங்கே அறியும் அருக பெருமானை, ஏத்தி - வழிபட்டுப் போற்றி, குற்றம் ஒன்று இல்லா அறம் - (அவனால் அருளப்பெற்ற) மாசு மறுவற்ற அறத்தை மொழிகுவன்-யான் சொல்லுவேன்-என்றவாறு.

(க-ரை) அனைத்தையும் ஒருங்கே அறியும் அறிவனைத் தொழுது, அறத்தை நான் சொல்லுவேன்.

(வி-ரை) அனைத்தையும் ஒருங்கே அறியும் அருகனைப் போற்றித் தொடங்கலான் அறம் மொழிகுவன் என்றனர். அறம் என்று சொல்லவே குற்றம் இல்லாமை அடங்கும். எனின் 'குற்றம் ஒன்று இல்லா' என்றது பிறராலும் ஆய்ந்து அறியப்பட்ட அறம் என்றற்கு என்க. சைனர் அறம் கொல்லாமையை அடிப்படையாகக் கொண்டது. அறம் என்றது இருபத்தைந்து குற்றமும் நீங்கிய நற்காட்சி நல் ஞானம் நல்லொழுக்கமாகிற மூன்று தர்மத்தை அல்லது சிநதர் மத்தை என்பர். 'பதினெட்டு குற்றமும் நீங்கின தருமசொரூபத்தினை' என்பது பழைய உரை. அறம் என்பது குற்றங்கள் நீங்கிய நிலை.

மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்துஅறன்
 ஆகுல நீர பிற
அழுக்காறு அவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
 இழுக்கா இயன்றது அறம்

எனக் குறளாசிரியர் அமைத்தல் (அறன் வலியுறுத்தல். 4, 5) காண்க.

பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகன் தொழுது நன்கு இயம்புவன் எழுத்தே
மூச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே

---

2 உலகங்கள் என்றது உயிர், புத்கலம், தருமம், அதருமம், ஆகாயம், காலம் என்னும் ஆறு பொருள்களின் சேர்க்கையான லோகத்தையும் அதற்குப் புறமான அலோகத்தையும் என்க.

எனப் **பவணந்தி**, தம் **நன்னூலில்** அமைத்தல் காண்க (56,258). இயம்புவன், அறைகுவன் என்பனவற்றுடன் மொழிகுவன் என்பதனை இணைத்துக் காண்க.

## அருங்கல மும்மை

**2. நற்காட்சி நன்ஞானம் நல்லொழுக்கம் இம்மூன்றும்
தொக்க அறச்சொல் பொருள்.**

(இ-ள்) நற்காட்சி - 'சம்மியக் தரிசனம்' என்ற நற்காட்சி, நன்ஞானம் - 'சம்மியக் ஞானம்' என்ற நல்லறிவு, நல்லொழுக்கம் - 'சம்மியக் சாரித்திரம்' என்ற நன்னடக்கை, இம் மூன்றும் (ஆகிய) இவை மூன்றும், தொக்க அறம்பொருள் - சேர்ந்த தொகுதியே அறம் எனப்பட்ட பொருள், சொல்-(என்று) சொல்லப்பெறும், எ.று.

(க-ரை) நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்ற மூன்றும் ஒருங்குகூடியது அறம் எனப் பெறும்.

(வி-ரை) இம் மூன்றும் அருங்கலமும்மை, மும்மணி என்றும், இரத்தினத்திரயம் என்றும் குறிக்கப்பெறும். மாணிக்கத்திற்கு இணையாக ஓம்பத்தக்க முப்பொருள் என்பது கருத்து. 'அரதனத் திரயம் என்னும் பெறுதலுக் கரிய செல்வம்' என்று வரும் **யசோதர காவியம்** (51) இதே கருத்தினது. திரயம் எனில் மூன்று எனப் பொருள்.

**மெய்வகை தெரிதல் ஞானம்; விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகை இன்றித் தேறல் காட்சி; ஐம்பொறியும் வாட்டி
உய்வகை உயிரைத் தேயா தொழுகுதல் ஒழுக்கம்; மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியும் என்றான்**

என்பது **சீவக சிந்தாமணி** (1436).

**மெய்ப்பொருள் தெரிதல் மற்றப்
பொருள்மிசை விரிந்த ஞானம்
அப்பொருள் வழாத நூலின்
அருந்தகை ஒழுக்கம் தாங்கல்
இப்பொருள் இவைகள் கண்டாய்!
இறைவனால் விரிக்கப் பட்ட
கைப்பொருள் ஆகக் கொண்டு
கடைப்பிடி கனபொன் தேராய்**

என்பது **சூளாமணி** (201).

பேர்தற்கு அரும்பிணி தாமிவை அப்பிணி
தீர்தற்கு உரிய திரியோக மருந்திவை
ஓர்தல் தெளிவொடு ஒழுக்கம் இவையுண்டார்
பேர்த்தப்பிணி யுள்பிறவார் பெரிதின்ப முற்றே

என்பது நீலகேசி (116).

---

தத்துவார்த்த சூத்திரத்திற்கு உரை வகுத்தருளிய ஆச்சாரியார் **பூச்சியபாதர்**, 'சம்யக் தர்சன ஞான சாரித் ராணி மோட்ச மார்க்க:' என்ற சூத்திரத்தின் உரையில் நற்காட்சி நல்ஞான நல்லொழுக்க வைப்பு முறைக்குத் தரும் விளக்கம் வருமாறு:[3]

சூத்திரத்தில், இரண்டு காரணங்களால், காட்சிக்கு முன்னே ஞானத்தை வைத்தல் பொருத்தம் உடையதாகும். 1. ஞானத்தின் அடிப்படையிலேயே காட்சி தோன்றுகிறது. 2. சமற்கிருதத்தில் ஞானம் என்ற சொல் தர்சன் என்ற சொல்லைக் காட்டிலும் குறைந்த எழுத்துக்களைப் பெற்றிருக் கிறது.[4] இக்கூற்று ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. ஏனெனில், ஆன்மாவில் காட்சியும் ஞானமும் ஒரே நேரத்திலேயே நிகழ் கின்றன. எடுத்துக் காட்டாக, மேகம் விலகுகின்றபோது பகலவனின் வெப்பமும் ஒளியும் ஒருங்கே நிகழ்தலை அறிதல். அதேபோன்று, ஆன்மா, ஞானாவர்ணீய கர்மங்கள் தணி தல், அழிதல் அல்லது தணிந்து அழிதலால் நற்காட்சியை அடையும்பொழுதே, மறைப்புடைய மதி, சுருத ஞானங்கள் நீங்கி மெய்யான மதி, சுருத ஞானங்களையும் அடைகின்றது. இரண்டாவது, குறைந்த எழுத்துகளை உடையது என் பதைக் காட்டிலும் எது முதன்மைக்குரியதோ அது முதலில் வைக்கப் பெற்றது. நற்காட்சி எப்படி முதன்மையான சிறப்புக் குரியதாகும்? நற்காட்சியின் அடிப்படையிலேயே ஞானம் 'நல்' என்ற அடையைப் பெறுகின்றது. நடக் கைக்கு முன்னே ஞானம் வைக்கப்பெற்றது, நடக்கை ஞானத்தின் விளைவாதலால்!

எல்லா வினைக்கட்டுகளிலிருந்தும் விடுதலை பெறுதலே வீடு பேறாகும். வீடு பேற்றிற்குரிய வழி என்பது வீடு பேற்றை அடைய மேற்கொள்ளும் முறையேயாகும். மூன்றும் ஒருங்கிணைந்தால்தான் முக்திக்கு வழியாகும் என்

---

3 திரு. S. A. Jain ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள REALITY என்ற நூலிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

## நற்காட்சி

**3. மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சி என்றுரைப்பர்
எப்பொருளும் கண்டுணர்ந் தார்.**

(இ-ள்) எப்பொருளும் கண்டு உணர்ந்தார்—அனைத்துப் பொருள்களையும் அறிந்து உணர்ந்த ஆன்றோர், மெய்ப்பொருள்-இறைவன், நூல், முனிவன், உயிர் முதலான உண்மைப் பொருள் களை, தேறுதல் - பிறழ்ச்சியோ ஐயமோ இன்றித் தெளிந்து நம்பிக்கை கொள்ளுதலை, நற்காட்சி-சம்மியக் தரிசனம், என்றுரைப்பர்-என்று கூறுவர்-எ. று.

(க-ரை) உண்மைப் பொருள்களைக் கண்டு அறிந்து தெளிவு அடைதலை, நற்காட்சி என்பர் அனைத்தையும் அறிந்தவர்.

(வி-ரை) அருங்கல மும்மை இவை என்று முதற்பாட்டில் சுட்டியவர், இப்பாடல் வழி, அவற்றுள் முதலாவதான நற்காட்சியின் இலக்கணத்தை வரையறுக்கிறார். இறைவனையும், அவனால் அருளப் பட்ட நூல்களையும், நூல் வழி நிற்கும் முனிவர்களையும் தெரிந்து தெளிதல் நற்காட்சி ஆம்.

**இறை வனும் முனியும் நூலும் யாதுமோர் குற்றமில்லா
நெறியினைத் தெளிதல் காட்சியாம்**

என வரும் **மேருமந்தர புராணம்** (355). நிலையற்ற பொருள் பொய்ப்பொருள்; நிலையானவை மெய்ப்பொருள்கள். இறைவன், நூல், முனி என்ற மூன்றும் நிலையானவை என்பதும், உண்மைப் பொருள்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப் பெற்றன.

இனிவரும் பாட்டில் மெய்ப்பொருள் என இங்கே சுட்டியதை விரித்துக் கூறுவர்.

---

பதைச் சுட்டவே வழி (மார்க்:) என ஒருமையில் குறிக்கப் பட்டுள்ளது. மூன்றும் தனித்தனியே வழியாகும் எனப் பேசப் பெறும் கருத்துகளை இது மறுக்கின்றது. எனவே, முக்திக்கு நேரான நெறி என்பது நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் இம் மூன்றும் இணைந்தது என்பதை அறிதல் வேண்டும்.

---

4 எண்ணிக்கை குறைந்த எழுத்துகளை உடைய சொற்கள் எண்ணிக்கை மிகுந்த எழுத்துகள் உடைய சொற்களுக்கு முன்னே வைத்தல் வேண்டும் என்பது சூத்திர யாப்பமைப்பில் ஒரு விதி.

## நிலையான மெய்ப்பொருள்கள்

**4. தலைமகனும், நூலும், முனியும்இம் மூன்றும்**
**நிலைமைய[5] ஆகும் பொருள்**

(இ-ள்) தலைமகனும்—இறைவனும், நூலும்—இறைவனால் அருளப்பட்ட நூல்களும், முனியும்—நூல் வழி நடக்கும் முனிவர்களும், நிலைமையபொருள் ஆகும்-நிலைபெற்ற பொருள்கள் ஆம்-எ. று.

(க-ரை) இறை, நூல், முனிவர் ஆகிய மூன்றும் நிலைபெற்ற மெய்ப்பொருள்கள் ஆகும்.

(வி-ரை) நிலைமையது என்ற பாடத்தை விட, நிலைமைா என்ற பாடமே பொருந்தும். தலைமகன், நூல், முனி என்ற பன்மைக்கு, நிலைமைய என்ற பன்மைக் குறிப்புவினையே பொருந்துவது. மூன்றில், இறையே முதன்மை வாய்ந்தது என்பதனால் முறையே முதலில் வைக்கப்பட்டது. தலைமகன் என்ற பெயரும் அதற்குத் தக அமைதல் காண்க.

> *தலைமகனும், நூலும், முனியும் பொருளும்*
> *தொலைவின் துணிவொடு பக்கம்—மலைவின்றி*
> *நாட்டிஇவ் ஆறும் உரைப்பரே நன்னெறியைக்*
> *காட்டி அறமுரைப் பார்.*

என்பது அற நெறிச் சாரம்(30).

இனி, 5 முதல் 8ஆம் பாடல் வரை, இப்பாடலில் கூறப்பட்ட தலைமகனின் இயல்புகள் முறையே விரிவாகக் கூறப் பெறுகின்றன.

## இறைவன் இயல்பு

**5. குற்றம்ஒன்(று) இன்றி, குறைஇன்(று) உணர்ந்து,அறம்**
**பற்ற உரைத்தான் இறை**

(இ-ள்) குற்றம் ஒன்று இன்றி—பதினெட்டுக் குற்றங்களுள் எக்குற்றமும் இல்லாமல் விளங்கி, குறை இன்றி—யாதொரு குறையும் இல்லாமல், உணர்ந்து—அனைத்தையும் அறிந்து, அறம்—இல்லறம், துறவறம் என்ற இருவகை அறங்களையும், பற்ற—உயிர்கள் பற்றி நிற்க, உரைத்தான்—விளங்குமாறு எடுத்துக் கூறியவன், இறை—தலைமகன் ஆவான்-எ. று.

---

5 நிலைமைய தாகும் என்றும் பாடம்

(க-ரை) குற்றம் எதுவும் இல்லாமல், குறைவு எதுவும் இல்லாமல், முழுமையாக உணர்ந்து அறத்தைக் கூறுபவனே தலைமகன்.

(வி-ரை) பதினெட்டுக் குற்றங்கள் எவை என அடுத்தப் பாட்டில் உரைக்கப் படுகின்றன. குற்றம் நீங்கிய நிலை இறைவன் நிலை; குறை நீங்கிய நிலை அவன் உணர்வு நிலை. முன்னது விலக பின்னது விளையும் என்பது குறிப்பால் பெறப்படும்.

## இறைவனிடம் இருக்கத் தகாதவை

**6. பசிவேர்ப்பு, நீர் வேட்கை, பற்று, ஆர்வம், செற்றம்,**
**கசி வினோடு இல்லான் இறை**

(இ-ள்) பசி—பசியும், வேர்ப்பு—வியர்வையும், நீர்வேட்கை—தண்ணீர்த் தாகமும், பற்று—உள்ளதன்மேல் பற்றும், ஆர்வம்—ஆசையும், செற்றம்—பகைமையும், கசிவினோடு—கலக்கம் முதலான பதினெட்டுக் குற்றங்களும், இல்லான்—இல்லாதவனே, இறை—இறைவன் ஆவான்—எ.று.

(க-ரை) பசி, வேர்ப்பு, நீர்வேட்கை, பற்று, ஆர்வம், செற்றம், கசிவு முதலான குற்றங்கள் இல்லாதவன் இறைவன் ஆவான்,

(வி-ரை) இப்பாவில், ஏழு குற்றங்கள் மட்டுமே கூறப்பெற்றுள்ளன. இவற்றையும் சேர்த்துப் பதினெட்டுக் குற்றங்களாவன: 1. பசி, 2. நீர்வேட்கை, 3. அச்சம், 4. ஆசை, 5. கோபம், 6. மயக்கம், 7. வெகுசிந்தனை, 8. மூப்பு, 9. நோய், 10. சாவு, 11. வியர்வை, 12. இளைப்பு, 13. செருக்கு, 14. வெறுப்பு, 15. வியத்தல், 16. பிறப்பு, 17. தூக்கம், 18. வருத்தம். கசிவினொடு பிற என்று வருவித்து எஞ்சியவற்றையும் கொள்ளலாம். பற்று—உள்ளதன் மேல் பற்று, ஆர்வம்—பெறக்கடவதன் மேல் பற்று என்பர்.

## இறைவனிடம் இருக்கத் தக்கவை

**7. கடைஇல்அறிவு, இன்பம், வீரியம், காட்சி**
**உடையான் உலகுக்(கு) இறை.**

(இ-ள்) கடை இல்—முடிவற்ற எல்லை இல்லா, அறிவு—அறிவும் இன்பம்—இன்பமும், வீரியம்—வீரியமும், காட்சி—தரிசனமும் உடையான்—உடையவன், உலகுக்கு—உலகத்திற்கு, இறை—இறைவன் ஆவான்—எ.று.

(க-ரை) அளவற்ற அறிவு, அளவற்ற இன்பம், அளவற்ற வீரியம், அளவற்ற காட்சி ஆகியவற்றை உடையவனே இறைவன்.

(வி–ரை) அனந்த ஞானம், அனந்த சுகம், அனந்த வீரியம், அனந்த தரிசனம் என்ற இந்நான்கும் அனந்த சதுஷ்டயம் அல்லது 'அனந்த நான்மை' எனப்பெறும். கடையில் என்பதனை முதனிலைத் தீபகமாகக் கொண்டு, இன்பம், வீரியம், காட்சி என்பவற்றொடும் கூட்டுக.

## இறைவன் அறத்தினை உரைத்தல்

8. தெறித்த பறையின் இராகாதி இன்றி
உரைத்தான் இறைவன் அறம்

(இ-ள்) தெறித்த-அடிக்கப் பெற்ற, பறை இன்-பேரிகையினைப் போன்று, இராக ஆதி இன்றி–விருப்பு, வெறுப்பு, பெருமை, செருக்கு, வியப்பு முதலான ஒன்றும் இல்லாமல், அறம்-இல்லறம், துறவறம் என்னும் இரண்டு அறங்களையும், உரைத்தான்-கூறி அருளினிவன், இறைவன்-இறைமகன்—எ.று.

(க-ரை) விருப்பு, வெறுப்பு முதலான எதுவும் இல்லாமல் பறை ஒலித்தலைப் போல, விருப்பு, வெறுப்பு முதலான எதுவும் இல்லாமல் அறம் உரைத்தவன் இறைவன்.

(வி-ரை) பறை இன் - 'இன்' என்பது உவம உருபு. இராக ஆதி-இராக, துவேஷ, மோக, மத மாத்சர்யம் என்பவற்றைக் குறித்தது. பறை ஒலிப்பேன் என்னும் இச்சை இன்றி, கேட்பவர்க்கெல்லாம் வேற்றுமை இன்றி ஒரு தன்மையாய் ஒலிக்கு மாறு போல சொல்லுவேன் என்னும் இச்சை இன்றி கேட்போரிடத்து, விருப்பு, வெறுப்பு எதுவுமின்றி அறம் உரைத்தல் இறைவன் இயல்பு என்பது கருத்து.

நீலகேசி இறை வணக்கப் பாடலின் உரையையும் இங்கு நினைத்துப் பொருத்திப் போற்றுக.

நிலையான மெய்ப் பொருள்களான, இறைவன், நூல், முனி மூன்றையும் தொகுத்துச் சுட்டி(4), தொடர்ந்து முறையே இறைவனைப் பற்றி 5-8ஆம் பாக்களில் வகுத்து, விரித்து உணர்த்தினர். அடுத்து, நூலின் இயல்பை இரண்டு பாக்களில் விளக்குகிறார்.

## நூல்

9. என்றும் உண்டாகி, இறையால் வெளிப்பட்டு
நின்றது நூல்என்(று) உணர்

(இ-ள்) என்றும் உண்டாகி - எந்நாளும் (அநாதியாய்த்) தோன்றி, (சில காலங்கள் இடையே மறைபட்டு), இறையால்-

பிறகு அவ்வப்போது தோன்றும் இறைவனது திவ்வியத் தொனியால் வெளிப்பட்டு-அருளப்பட்டு, நின்றது-நிலைபெற்று நின்று இலங்குவது, நூல்-பரமாகமம், என்று உணர்-என அறிவாயாக. —எ.று.

(க-ரை) அநாதியாய்த் தோன்றி, சில காலங்கள் இடையே மறைபட்டு, அவ்வப் போது தோன்றும் இறையால் அருளப்பட்டு நிலை பெறுவதே நூல் என்று கூறப்பெறும்.

(வி-ரை) காலம், ஏறுகாலம் (உத்சர்ப்பிணி) இறங்குகாலம் (அவசர்ப்பிணி) என்று இரண்டு பிரிவு. அவை ஒவ்வொன்றும் ஆறு உட்பிரிவின. நன்னற்காலம், நற்காலம், நற்றீக்காலம், தீநற்காலம், தீக்காலம், தீத்தீக்காலம் என்பன இறங்கு காலத்தின் பிரிவுகள். ஏறுகாலம், தீத்தீக்காலம் தொடங்கிப் பின்னிருந்து வரிசையாக நிகழும். உத்சர்ப்பிணி, அவசர்ப்பிணி காலங்கள் இரண்டும் சேர்ந்தது ஒரு கல்ப காலம் எனப்பெறும். ஒரு கல்ப காலம் என்பது இருபது கோடாகோடி கடற்காலங்கள் ஆகும். அவசர்ப்பிணி காலம் பத்து கோடாகோடி கடற்காலங்களாம். உத்சர்ப்பிணி காலமும் பத்துக் கோடாகோடி கடற்காலங்களை உடையது. அவற்றுள் நன்னற்காலம் நான்கு கோடாகோடி கடற்காலம் உடையது. நற்காலம்-மூன்று கோடாகோடி கடற்காலம், நற்றீக் காலம்-இரண்டு கோடாகோடி கடற்காலம்; தீநற்காலம்-42000 ஆண்டுகள் குறைந்த கோடாகோடி கடற்காலம். தீக்காலம்-21000 ஆண்டுகள், தீத்தீக்காலம்-21000 ஆண்டுகள்; உத்சர்ப்பிணியில், இவை முறையே தீத்தீக்காலம் முதலாக நிகழும். அவசர்ப்பிணியில் உயிர்கள் நலம் குன்றிக் கொண்டே வரும். உத்சர்ப்பிணியில் அவற்றின் நலம் பெருகிக் கொண்டே போகும். இங்ஙனம் நிகழும் போது, நற்றீக் காலத்திலும், தீநற்காலத்திலும் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் தோன்றி, அறம் உரைப்பர். எண்ணிறந்த கல்ப காலங்கள் இவ்வாறு சுழன்று சுழன்று நிகழ்வதால் **'என்றும் உண்டாகி இறையால்** வெளிப்பட்டது நூல்' என்று குறித்தார்.[6]

> வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
> முனைவன் கண்டது முதல் நூல் ஆகும்

என்ற தொல்காப்பிய நூற்பாவையும் (1594) ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்க.

> 'இருசார் வினையும் தெளிந்தாரே
> இறைவன் நூலும் தெளிந்தாரே'

---

6 வீடூர், ஏ. தர்ம சாம்ராஜ்ய சாஸ்திரி, அருங்கலச் செப்பு-1941, ப. 7.

என்ற **சீவக சிந்தாமணிச்** செய்யுள் (2815) வரிக்கு 'இறைவனுடைய நாற்பத்திரண்டு பரமாகமத்தையும் தெளிந்தார் என்க' என்றெழுதுவர் நச்சினார்க்கினியர். அங்காகமம் 12; பூர்வாகமம் 14; பகுசுருதி ஆகமம் 16.

> **'ஆறிரண்டு அங்கமும் ஆய்ந்து ஈரேழ் பூர்வமும்**
> **கூறிரண்டெண் கேள்விகளில் குன்றாமல்—தேறி**
> **வரந்தரு நல் லோத்துரைக்கும் வாய்மையார் பாதம்**
> **நிரந்தர நான் வந்திப்பன் இன்று'**

எனக் குறிப்பிடும், **சீவ சம்போதனை** (4).

## துக்கம் கெடுப்பது நூல்

**10. மெய்ப்பொருள் காட்டி, உயிர்கட்கு அரண் ஆகி**
**துக்கம் கெடுப்பது நூல்**

(இ-ள்) மெய்ப் பொருள் காட்டி-பொருள்களின் உண்மை நிலையைக் (யதார்த்த நிலை) காட்டி, உயிர்கட்கு அரண் ஆகி-உயிர்கட்கு உறுதியான பாதுகாவல் ஆகி, துக்கம் கெடுப்பது-உயிர்களின் துன்பத்தை அழிப்பது, நூல்-பரமாகமம் ஆகும்—எ. று.

(க-ரை) பொருள்களின் உண்மை நிலையைக் காட்டி, உயிர்கட்குக் காவலாக விளங்கி, துன்பத்தை அழிப்பது நூலாம்.

(வி-ரை) நூலின் மூன்று நோக்கங்கள் மிக அழகாக இங்கே சுட்டப்பட்டுள்ளன. பல அறிஞரும், மாந்தரும் தம் துன்பத்தைத் தணிக்க, தவிர்க்க நூலிடம் அடைக்கலம் புகுகின்றனர். / மெய்ப்பொருள் என்பது பொருள் மெய் என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது.

முறையே இறைவன், நூல் என்ற முதல் இரண்டு மெய்ப்பொருள்களின் இயல்புகளை விளக்கியவர், தொடர்ந்து மூன்றாவதான முனிவர் இயல்பினை வரும் பாடலில் கூறுகிறார்.

## முனி இயல்பு

**11. இந்தியத்தை வென்றான் தொடர்ப்பாட்டோ(டு) ஆரம்பம்**
**முந்து துறந்தான் முனி**

(இ-ள்) இந்தியத்தை வென்றான் – ஐம்புலன்களையும் அடக்கி வென்றவனாய், தொடர்ப்பாட்டோடு-அக, புறப்பற்றுகளோடு ஆரம்பம் - உழவு செய்தல் முதலாயவற்றை, முந்து துறந்தான்-தானே முனைந்து துறந்தவனே, முனி-முனிவன் ஆவான்—எ.று.

(க-ரை) ஐம்புலன்களை வென்று, அகப் பற்று, புறப் பற்று வழி வரும் தொடர்புகளைத் தானே விரும்பித் துறந்தவனே முனிவன் ஆவான்.

(வி-ரை) மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பறுக்கல்
உற்ருர்க்கு உடம்பும் மிகை

என வரும் குறள் (355) இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

அகப்புறப் பற்றுகள்-'பாகியம், அப்யந்தரம் பரிக்கிரகம்' எனப் பெறும். பாகியம்-புறம்; அப்யந்தரம்-அகம்; பரிக்கிரகம்-பற்று.

அகப்பற்று பதினுன்கு; புறப்பற்று பத்து என்ப.

துவர்ப்பசை நான்கொடு தொடர்ந்த பத்துமாசு
உவர்ப்புநீ ரார்கழீஇ உள்ளம் தூயமா
தவத்தர் புறப்பத்து மாசு தன்னேயும்
உவத்தல்காய்வு இலாமையால் ஒருவி ஞர்களே

எனக் குறிப்பிடும் மேருமந்தரம் (1207).

ஆரம்பம்-செயலேச் செய்ய ஆரம்பித்தல்.

12. தத்துவ ஞான நிகழ்ச்சியும்[7], சிந்தையும்
உய்த்தல் இருடிகள் மாண்பு

(இ-ள்) தத்துவ ஞான நிகழ்ச்சியும்-மெய்ப் பொருள் அறிவையும், சிந்தையும்-நற்சிந்தனையையும், உய்த்தல்-அடைதல், இருடிகள்-முனிவர்தம், மாண்பு- மாட்சிமை ஆகும்—எ.று.

(க-ரை) மெய்ப்பொருள் அறிவையும், நற்சிந்தனையையும் அடையப் பெறுதல் முனிவர்தம் பெருமை மிக்க செயல்கள் ஆகும்.

(வி-ரை) பதார்த்தங்கள் ஒன்பது: உயிர், உயிர்அல்லன, புண்ணியம், பாவம், ஊற்று, செறிப்பு, உதிர்ப்பு, கட்டு, வீடு. இவற்றைச் சீவன், அசீவன், புண்ணியம், பாவம், ஆசிரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோட்சம் என்றும் வழங்குவர். இவற்றுள் கொள்ளத்தக்கன இவை, தள்ளத்தக்கன இவை என உயிர் அறிந்து கொள்ளுதலே 'தத்துவ ஞானம்' என்று குறிக்கப் பெற்றது.[8]

---

7 'நிகட்சி' என்பதும் பாடம்

8 "ஜீவ, அஜீவ, ஆஸ்வர, பந்த ஸம்வர, நிர்ஜ்ஜர, மோக்ஷ எனத் **தத்துவங்கள்** ஏழு. அவற்றுள் அஜீவ, ஆஸ்வர, பந்த தத்துவங்கள் ஹேயம். ஜீவதத்துவம் அசுத்தா பேக்ஷயினுல் ஹேயமும், சுத்தாபேக்ஷயினுல் உபாதேயமும் ஆகும். ஸம்வர, நிர்ஜ்ஜர மோக்ஷ தத்துவங்கள் உபாதேயம். ஹேயம்-நீக்கத் தகுவன. உபாதேயம்-ஸ்வீகரிக்கத்தகுவன.

அநித்தியம், அசரணம், ஸம்சாரம், ஏகத்வம், அன்யத்வம், அசுசீத்வம், ஆஸ்ரவம், ஸம்வரை, நிர்ஜ்ஜரை, லோகம், போதிர் துர்லபம், தர்மஸ்வாக்யானம் என **அனுபிரேக்ஷை** பன்னிரண்டு. அபாய விசயம், விபாக விசயம் ஆஜ்ஞா விசயம், ஸமஸ்தான விசயம் எனத் தர்மத்தியானம் நான்கு விதம். பிரதக்த்வவிதர்க்கவீசாரம், ஏகத்வவிதர்க்கவீசாரம், ஸூக்ஷ்மக்கிரியாப்ரதிபாதி, வயுபரதக்இரியர் சுக்கித்தியானம் நான்கு வகை" —A. தர்ம சாம்ராஜ்ய உரை விளக்கம், பு.8.

உயிரும், உயிரல்லதும், புண்ணியம், பாவம், ஊற்றும்
செயிர்தீர் செறிப்பும், உதிர்ப்பும், கட்டும், வீடும், உற்ற
துயர்தீர்க்கும் தூய நெறியும் சுருக்காய் உரைப்பன்;
மயல்தீர்ந்த காட்சி யுடையோய்! இதுகேள்; மதித்தே!

என வரும் **மேருமந்தர புராணம்** (68).

நற்சிந்தனை-உயிரை வீடு பேற்றிற்கு உய்க்கும் எண்ணங்களும் தவங்களுமாம்.

நற்காட்சி என்பது மெய்ப்பொருள் தெளிதல் (3) என்று கூறிய தற்கு இணங்க, மெய்ப் பொருள் எவை எனவும், அவற்றின் இயல்பு களும் 4-12ஆம் பாக்களில் விவரிக்கப்பட்டன. இனிவரும் பாடல் களில் நற்காட்சியின் எண் வகை உறுப்புகள் விவரிக்கப்படும்.

## நற்காட்சியின் எட்டு உறுப்புகள்

**13. எட்டு வகைஉறுப்பிற்று ஆகி இயன்றது**
**சுட்டிய நற்காட்சி தான்**

(இ-ள்) சுட்டிய நற்காட்சிதான்-பரமாகமத்துள் சுட்டப்பட்ட சம்யக்தரிசனம்தான், எட்டு வகை உறுப்பிற்று ஆகி இயன்றது-ஐய மின்மைமுதலான எட்டு வகை உறுப்புகளுடன் கூடினது ஆகும்-எ.று.

(க-ரை) ஐயம் இன்மை முதலாகக் கூறப்பெற்ற எட்டு உறுப்பு களுடன் கூடி விளங்குவதே, நூற்பொருள்களின் உண்மை அறிந்து தெளிதலாகும்.

(வி-ரை) 'நெறி விளக்கு உறுத்தல் ஆதி **எட்டங்கம்** நிறைந்த தென்றுன்' என்பது **மேருமந்தர புராணம்** (355).

சுட்டிய என்பதற்கு மேலே சுட்டப்பட்ட (குறள், 3) என்று பொருள் கூறினும் அமையும்.

**14. ஐயம், அவாவே, உவர்ப்பு மயக்குஇன்மை**
**மெய்பெற இன்னவை நான்கு**[9]

(இ-ள்) ஐயம் இன்மை-(இறைவன் எவனோ? அவனால் கூறப் பெற்ற நூற்பொருள் உண்மையோ? இல்லையோ? என்பன போன்ற) ஐயம் தோன்றாமை, அவா இன்மை-மோகபோகங்களில் விருப்பம் இல்லாமை, உவர்ப்பு இன்மை-அருவருப்பு இல்லாமை, மயக்கம் இன்மை-மருட்சி இல்லாமை, இன்னவை-ஆகிய இவை, மெய் பெற-உண்மையாக, நான்கு-நான்கு உறுப்புகளாம்—எ.று.

---

9 'இன்னன நான்கு' என்பதும் பாடம்.

(க-ரை) ஐயமின்மை, விருப்பம் இன்மை, அருவருப்பு இன்மை, மருட்சி இன்மை என்ற நான்கும் நற்காட்சியின் உறுப்புகளாம்.

(வி-ரை) இன்மை-என்ற சொல்லைத் தீபகமாகக் கொண்டு, ஐயம் முதலான நான்கிற்கும் கூட்டுக. இந்நான்கும், நிச்சங்கை (ஐய மின்மை), நிஷ்காங்ஷை (அவா இன்மை), நிர்விசிகித்சை (உவர்ப் பின்மை), அமூடதிருஷ்டித்வம் (மயக்கமின்மை) எனவும் அழைக்கப் பெறும்.

**15. அறப்பழி நீக்கல், அழிந்தாரைத் தாங்கல்**
**அறத்துக்கு அளவளா[10] மூன்று**

(இ-ள்) அறப்பழி நீக்கல் — அறவழி நடப் போரிடத்து ஏதேனும் இழுக்கு நேருமானல், அதனைப் பலரும் அறியச் செய்து தூற்றுமல் மறைக்கும் பண்பும், அழிந்தாரைத் தாங்கல்—நோன்பு பூண்டு பின் அதனைக் கைவிட்டவர்களை மீண்டும் அந்நோன்பினை மேற்கொண்டு நிறைவேற்றுமாறு நிலை நிறுத்துகிற பண்பும், அறத்துக்கு அளவு அளா—அறவழி நடப்போரைக் காணும் இடத்துக் கன்றைக் கண்ட பசுவைப் போல மிகுந்த அன்பு கொள்ளும் பண்பும், மூன்று—மூன்று உறுப்புகளாம்.—எ.று.

(க-ரை) பிறர்குறை தூற்ருப் பெருந்தன்மை, அறவழிப் பிறழ்ந் தோரை மீண்டும் நிலை நிறுத்தும் தன்மை, அறவோரைக் கண்டு அன்பொழுக அளவளாவுதல் மூன்று உறுப்புகளாம்.

(வி-ரை) அறப்பழி நீக்கல்-உபகூனம் (செய்பழி நீக்கல்) என்றும், அழிந்தாரைத் தாங்கல், ஸ்திதிகரணம் (திரிந்தாரை நிறுத்தல்) என்றும், அறத்துக்கு அளவளா-வாத்சல்யம் (அன் புடைமை) என்றும் குறிக்கப் பெறும். மேல் குறளில் கூறப்பட்ட நான்கு உறுப்புகளுடன் இக்குறளில் கூறப்பட்ட மூன்று உறுப்புகளும் சேர்ந்து ஏழு உறுப்புகள் ஆகின்றன.

**16. அறத்தை விளக்கலோடு, எட்டு ஆகும்[11] என்ப**
**திறம்பட உள்ள உறுப்பு**

(இ-ள்) அறத்தை விளக்கலோடு-(முன் கூறிய உறுப்பு ஏழினை யும், அற இயல்புகளை விளக்குதல் என்பதுடன் சேர்த்து, திறப்பட உள்ள உறுப்பு-நற்காட்சிக்குத் திறமாக உள்ள உறுப்புகள், எட்டு ஆகும் என்ப-எட்டு என்று சொல்லுவர் அறிஞர்-எ.று.

---

10 'அளவரை' என்பதும் பாடம்.

11 'இந்நான்கு' என்பதும் பாடம்.

(க-ரை) அறத்தினை விளக்குதல் என்பதுடன் சேர்த்து நற்காட்சியின் உறுப்புகள் எட்டாம்.

> **ஐயம் அவாவே உவர்ப்பு மயக்கின்மை**
> **செய்பழி நீக்கல் நிறுத்தல் - மெய்யாக**
> **அன்புடைமை ஆன்ற அறவிளக்கம் செய்தலோ(டு)**
> **என்றிவை எட்டாம் உறுப்பு**

என வரும் **அறநெறிச்சாரம்** (21) இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

(வி-ரை) அறத்தை விளக்கல் என்பது தர்மப்பிரபாவனை அல்லது மார்க்கப் பிரபாவனை என்று கூறப்பெறும்.

14, 15, 16ஆம் பாக்களில், நற்காட்சியின் எண் வகை உறுப்புகள் எவை எனத் தொகுத்துக் கூறினர். இனி 17-24ஆம் பாடல் வரை அவ் வெண் வகை உறுப்புகளின் இயல்புகளைத் தனித் தனி விளக்குகின்றார்.

## ஐயம் இன்மை

**17. மெய்ந்நெறிக்கண் உள்ளம் துளக்குஇன்மை காட்சிக்கண்**
**ஐயம் இலாத உறுப்பு**

(இ-ள்) மெய்ந்நெறிக்கண்-குற்றமில்லா அற வழியாகிய நெறியில், உள்ளம் துளக்கு இன்மை-மனம் நம்பிப் பின்பற்றி நடத்தல், காட்சிக்கண்-சம்யுக்தரிசனம் என்ற நற்காட்சிக்கு, ஐயம் இலாத-ஐயம், இன்மை என்ற; உறுப்பு-முதல் உறுப்பு ஆகும்-எ.று.

(க-ரை) குற்றமொன்றில்லா அறநெறியை நடுக்கம் இல்லாமல் நம்புதலே-நடத்தலே-ஐயமின்மை என்ற உறுப்பின் இலக்கணமாம்.

(வி-ரை) துளக்கம்-நடுக்கம், தடுமாற்றம்; காட்சி-நற்காட்சி, 'ஐயம் இலாத-ஐயமின்மை என்ற' எனப்பொருள் செய்யப்பட்டிருக்கிறது. நடுக்கம் அற்ற நம்பிக்கையே **ஐயத்திற்கு இடம் இல்லாத**, முதல் உறுப்பு என்றும் பொருள் செய்யலாம்.

மேலே, 'குற்றம் ஒன்றில்லா அறம்' என்றார் (குறள் 1). **அதுவே** மெய்ந்நெறி.

## அவா இன்மை

**18. தடுமாற்ற இன்பக்கு இவருமை ஆகும்**
**வடுமாற்(று) அவாஇன்மை நற்கு**

(இ-ள்) தடுமாற்ற இன்பக்கு-மனதைத் தடுமாறச் செய்யும் சிற்றின்பத்தை, இவருமை-விரும்பாமையே, வடு-குற்றத்தை,

மாற்று-மாற்றும், அவா இன்மை-விருப்பமின்மை, (நிஷ்காங்ஷை என்ற இரண்டாம் உறுப்பின் இலக்கணமாக) நற்கு-நன்கு, ஆகும்-ஆகும்-எ.று.

(க-ரை) மனத்தைத் தடுமாறச் செய்யும் சிற்றின்பத்தை விரும் பாமையே அவா இன்மை என்ற இரண்டாம் உறுப்பாகும்.

(வி-ரை) சிற்றின்ப ஈர்ப்பு எவரையும் தாக்க வல்லது, என்பதைத் 'தடுமாற்ற இன்பம்' என்ற தொடர் உணர்த்துகிறது. இல்லற வழி கிட்டும் சிற்றின்பம் கூட வீழ்த்த வல்லது என்பதற்குச் சச்சந்தன் வாழ்க்கை ஒரு பெரும் சான்று. தடுமாற்ற இன்பக்கு-என்பதை மாற்றி, இன்பக்குத் தடுமாற்ற இவருமை-இன்பத்திற்காக தடுமாற்றங்களை விரும்பாவை என்றும் கொள்ளலாம். தடுமாறும் அளவிற்கு இன்பம் விரும்பாமை என்றும் கூறலாம். இவருமை-விருப்பம் என்ற பொது அளவைக் குறிக்காது மிகு விருப்பத்தையே குறித்தது. திருக்குறள் ஆட்சியைக் காண்க.

## உவர்ப்பு இன்மை

19. பழிப்(பு)இல் அருங்கலம் பெய்த உடம்புஎன்று
இழிப்பு இன்மை மூன்றும் உறுப்பு

(இ-ள்) பழிப்பு இல்—பழிச் சொற்களுக்கு ஆளாகாத, அருங் கலம்—நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்ற இரத்தினத் திரயங்களால்—மும்மணிகளால், பெய்த—இடப்பட்டு நிரம்பிய, உடம்பு என்று—உடல் என்று கொண்டு, இழிப்பு இன்மை—புறத்தே அழுக்கு, நோய் பெற்ற துறவியரைப் பார்த்து இழிவாக நினைந்து அருவருக்காமை, மூன்றும் உறுப்பு—நற்காட்சியின் மூன்றுவது உறுப்பாம்—எ-று.

(க-ரை) துறவியர் முதலான சான்றோரின் புற உடல், நீராடைமையினாலோ, நோய் பிணிந்திருப்பதனாலோ அழுக்கு உற்றி ருந்தால், அருவருப்புக் கொள்ளாமல், பழிக்கு ஆளாகாத மும்மணி கள் இட்டு நிரம்பிய உடம்பென்று கொள்ளுதல்-போற்றுதல் உவர்ப் பின்மை என்பதன் இலக்கணமாம்.

(வி-ரை) இரத்தினத் திரயங்களை, நூல் உள்ளேயே ஆசிரியர் 'அருங்கலம்' என்று குறித்தல் காண்க. கொழ கொழ என்று தொடவும் தகுதி யற்றிருக்கும் சிப்பியின் புற உடலத்தைப் பார்த்து விட்டு விட்டு வருவார் யாரேனும் உண்டா? சிப்பியின் உள்ளிருக்கும், விலை மதிப்பற்ற முத்தை நினைந்து சிப்பியை அருவருத்து விட்டு வராமல், எடுத்துப் போற்றுவர் மாந்தர். அதனைப் போலவே,

அனைத்தையும் துறந்த ஆன்றோரின் புற உடலத்தைப் பார்த்துப் புறக்கணிக்காமல் போற்றுதல் வேண்டும். சமற்கிருதத்தில் உவர்ப் பின்மை, நிர்விசிகித்சை என வழங்கும்.*

---

*இங்கே, 'இரத்தின கரண்டக ஸ்ராவகாசாரம்' தரும் விளக்கம் கருதத்தக்கது :

'சைன முனிவர் தம் ஒழுக்க விதிகள், உடல் போற்றலை ஏற்பதில்லை. எனவே, அவர்தம் புறத் தோற்றத்தைக் காணுகின்ற பிறர் அருவருப்பைக் காட்டுகின்றனர். இந்த நூற்பா, நற்காட்சியுடையவனிடம் இருக்க வேண்டிய முறையான நிலையைச் சுட்டுகிறது. அவன், முனிவரை நற்குணத்திற்காகப் போற்றுதலையும் தன்னடகத்திற்காக விரும்புதலையும் செய்ய வேண்டும். ஆனால், அவருடைய தூய்மையில்லாத கழுவப்படாத புறத்தை-உடலைக்-கண்டு அருவருப்புக் கொள்ளல் கூடாது. சிறுநீர், மலம், உமிழ் நீர் முதலிய தூய்மையற்ற பொருள்கள் நிரம்பிய அருவருப் பான பெண் உறுப்பில் கருக்கொண்டு வளர்ந்த உடல் எப்படித் தூயதாக இருக்க முடியும் என்று ஆச்சாரியர் இங்கே வினவுகிறார். சைன முனிவருடைய அழுக்கடைந்த உடலைக் கண்டு நகைப்பவன், உண்மையில், தன் உடலே தோல் கொண்டு மூடப்பட்டு, கண்ணுக்குப் புலப்படாத முடைநாற்றமுடைய அருவருப்புப் பொருள்களை உள்ளே தாங்கி நிற்கும் ஒரு கூடையே என்பதை நினைவில் கொள்ள வேண்டும். மேலும் முனிவர் உடலுக்கும் அவனுடைய உடலுக்கும் ஒரு சிறப்பான வேறுபாடு உண்டு. அவன் உடலில், வரையறையற்ற புலன் நுகர்ச்சியின் விளைவால் அருவருப்புப் பொருள்கள் நிறைந்து வழியும். ஆனால், புலன் கட்டுப்பாட்டின் விளைவால் முனிவர் உடலில் அருவருப் புள்ளவை அளவிலும் தன்மையிலும் குறைந்த அளவே இருக்கும் என்பதாம். எனவே, வெளித் தோற்றத்தில் அவன் உடல் கவர்ச்சியாக தோன்றினாலும்கூட இரு வருடைய உடலுள்ளும் முனிவர் உடலே தூய்மையானது என்று கருத முடிகிறது. மேலும், ஆன்ம தூய்மையைப் பெறுத்தவரை, முனிவரை வெறுக்கின்றவன் ஆன்மநிலை, அவனால் வெறுக்கப்படும் முனிவர் ஆன்ம நிலையின் அருகே நெருங்க முடியாது. ஏனெனில், உண்மையான முனிவரை வெறுக்கும் போக்கே அவனது அறியாமையையும் பாவத் தையும் காட்டி நிற்கிறது. ஆன்மீக முன்னேற்றப் பாதை யில் கழுவப்படாத தூய்மையற்ற தோற்றம் தேவையான

## மயக்கு இன்மை

**20. பாவ நெறியாரைச் சேர்ந்த மதிப்பு இன்மை**
**மோவம் இலாத உறுப்பு**

(இ-ள்) பாவ நெறியாரை-தீ நெறி ஒழுகி, தீச்செயல்கள் புரியும் தவருன வழி ஒழுகுவாருடன், சேர்ந்த-சேர்ந்து பழகிய வரை, மதிப்பு இன்மை-மதித்தலைச் செய்யாமை, மோவம்-குற்றம், இலாத உறுப்பு-இல்லாத நற்காட்சியின் உறுப்பாகும்-எ.று.

---

ஒரு நிலையே, குறிப்பிட்ட ஒரு கட்டத்தில் அதனைத் தவிர்க்க முடியாது.

உண்மையில் நிர்வாணம் அடைதல் என்பது தன்னுடைய அன்மாவில் ஆழ்தலேயாகும். அது, வெளியுலகி லிருந்தும் உடலுணர்விலிருந்தும் அவனது நினைவை நீக்கு கிறது. அதனுல், தூய்மையைப் போற்றும் இல்லறத்தானும், உடல் என்ற சதையாலான சிறையைப் புறக்கணிக்கவும் தன் ஆன்மாவைப் பற்றி அறியவும் படிப்படியாக பயிற்சி பெறுகிருன். உலகப் பற்றைத் துறந்து குறுகிய கால கட்டத்தில் குறிக்கோளை அடைய விரும்பும் துறவி, இயல் பாக ஆன்மத் தோய்வில் ஆழ்கிருன். உடல் கவர்ச்சி முதலிய பயனற்ற-முன்னேற்றத்திற்குத் தடையான-செய்தி களை அறிவதில் காலத்தைப் பாழ் செய்ய அவரால் முடிவ தில்லை.

தொலை நோக்கில் பார்க்கும்போது இதனுல் அவர் இழப்பதும் ஏதும் இல்லை. ஏனெனில், காதிகர்மங்கள் அழிதலால் தெய்வ நிலைக்கு அவன் உயருகிருன். அப் பொழுது அவரை வெறுந்நவர்களே அவர் திருவடிகளில் பணிகின்றனர். சைன முனிவர்கள் தோற்றத்தைக் கண்டு வெறுப்பவர்கள் நிர்வாணம் அடைதல் அருமை என்பது இப்பொழுது விளக்கமாகிறது. ஏனெனில் ஆன்மப் பயணத் தில் உடலைப் புறக்கணித்தல் என்பது முழுதும் தவிர்க்க முடியாத தேவையாகும். மேலும், இந்தகைய வாழ்க்கை மீது வெறுப்பும் அருவருப்பும் தவிர வேருென்றையும் காட்டாதவர்களை நெறியான பாதையில் அடிவைக்க தூண்ட முடியாது. இந்த காரணத்திற்காகவே சைன முனிவரது நிர்வாண தோற்றத்தை எதிர்ப்பவர்கள் 'நிர் வாண நிலை' எய்துதலிலிருந்து தடுக்கப்படுகிருர்கள்.[12]

---

12 Ratna-Karanda-Sravakacharam, English translation by C.R. Jain, 1975, P. 5இலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது,

(க-ரை) தீ நெறி ஒழுகி, தீச் செயல்கள் புரியும் தவருன வழி ஒழுகுவாருடன் சேர்ந்தவரை மதிக்காதிருத்தல் மயக்கு இன்மை என்ற உறுப்பின் இலக்கணமாம்.

(வி-ரை) சேர்ந்த-சேர்ந்தவர் என்று வினையாலணையும் பெயராகக் கொள்ளுக. மோவம்-மயக்கம் என்பதினும், குற்றம் என்பதே வழங்கும் பொருள். இஃது அமூடதிருஷ்டித்வம்-மூடம் இன்றித் தெளிதல் எனப்பெறும்.

## அறப்பழி நீக்கல்

**21. அறத்துக்கு[13] அலர்களைதல் எவ்வகை யானும்**
**திறத்தின் உவகூ வனம்**

(இ-ள்) எவ்வகையானும்-எப்படி ஆயினும், அறத்துக்கு அலர் களைதல்-அறவோரிடத்து நேரும் இழுக்கினை ஊர் தெரியப் பழி தூற்ருது இருத்தல், திறத்தின்-நல் திறமாகிய, உவகூவனம்-'உப கூஹனம்' என்னும் நற்காட்சியின் ஐந்தாம் உறுப்பாம்—எ.று.

(க-ரை) அறவோரிடத்து நேரும் குறையினைப் பலரறியப் பழி தூற்ருது இருத்தல் அறப்பழி நீக்கலின் இலக்கணம் ஆகும்.

(வி-ரை) அலர்-பழி, எவ்வகையானும்-என்பது பிறர்பழி தூற்ருமையின் வலிமையைக் காட்டுவதாம். அறத்துக்கு-அறம் உடையார்க்கு என்று ஆகு பெயராய் நின்றது.

> பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
> மறவாமே நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
> சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
> யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்

என்ற நீதி நெறி விளக்கப் பாட்டு இங்கே நினையத் தக்கது.

## அழிந்தாரைத் தாங்கல்

**22. அறத்தின் தளர்ந்தாரை ஆற்றின் நிறுத்தல்[14]**
**சிறப்புடை ஆரும் உறுப்பு**

(இ-ள்) அறத்தில் தளர்ந்தாரை-அறவழி மேற்கொண்டு இடையூறு ஆதிகளால் இடையில் நெகிழ்ந்தவர்களை (மேலும் தொய் வடையச் செய்யாமல்), ஆற்றில் நிறுத்துதல்-பழையபடி அற வழி யில் நிலை நிறுத்துதல், சிறப்புடை-சிறப்பு வாய்ந்த, ஆரும் உறுப்பு-நற்காட்சியின் ஆரும் உறுப்பாகும்—எ.று.

---

13 'அறத்துக் கிளைகளைதல்' என்பதும் பாடம்.

14 'ஆற்றி நிறுத்துதல்' என்பதும் பாடம்.

(க-ரை) அறவழியில் சென்றவர், இயலாமையால், இடையூறு களால் இடையில் நெகிழ்ந்தால், அவரை ஊக்கப் படுத்தி, அறநெறி யில் நிலை நிறுத்துதல் 'ஸ்திதிகரணம்' எனப் பெறும்.

(வி-ரை) அறப்பிடிப்பு என்பது எளிதன்று. மனிதனுக்கே உரிய பலவீனங்கள் வழிமாற்ற முயலும். அதனுல் சிலர் நெகிழ லாம். அவ்வாறு நெகுழ்வாரை மேலும் ''அதெல்லாம் நிரம்பத் துன்பமுங்க. நம்மால் எல்லாம் பின்பற்ற முடியாது'' என்றெல் லாம் கூறி, அதைரியப் படுத்துவது மனித இயல்பு. அவ்வாறு செய் தல் கூடாது என்பது இப்பாவின் ஆணை.

## அறவோருடன் அளவளாவுதல்

**23. ஏற்ற வகையில் அறத்துளார்க் கண்டு உவத்தல்**
**சாற்றிய வச்சளத்தின் மாண்பு**

(இ-ள்) ஏற்ற வகையில்-இயன்ற அளவில், அறத்து உளார்-அறவோர்களை, கண்டு உவந்தல்-பார்த்து மகிழ்தல், சாற்றிய-நூல் களில் கூறப் பெற்ற, வச்சளத்தின்-வாத்சல்யம் என்னும் ஏழாம் உறுப்பினுடைய, மாண்பு-மாட்சிமை ஆகும்—எ.று.

(க-ரை) அறவோர்களைக் காணும் பொழுது, கன்றினைக் கண்ட பசுவைப் போல மகிழ்தல் வச்சளம் எனப்பெறும்.

(வி-ரை) 'உவப்பத் தலைக் கூடுதல்' என்ற குறள் தொடரைக் 'கண்டு உவந்தல்' என்பதனுடன் பொருத்தி நினைக. வாத்சல்யம் என்பது வச்சளம் என்று சிதைந்து வழங்குகிறது. கொண்டுயத்தல் என்பதும் பாட பேதம்.

## அறமுரைத்தல்

**24. அறத்தின் பெருமையை யார்க்கும் உரைத்தல்**
**அறத்தை விளக்குதல் நற்கு**

(இ-ள்) அறத்தின் பெருமையை-அறவழியின் சீர் சிறப்பை, யார்க்கும்-அனைவர்க்கும், நற்கு-நன்றாக, உரைத்தல்-விளக்கிச் சொல்லுதல், அறத்தை விளக்குதல்-அறத்தை விளக்கல் என்ற எட்டாம் உறுப்பாகும்—எ.று.

(க-ரை) அறத்தின் பெருமைகளை அனைவர்க்கும் எடுத்து விளக்குதல் நற்காட்சியின் எட்டாம் உறுப்பாம்.

(வி-ரை) இவ்வுறுப்பு மார்க்கப் பிரபாவனை எனப்படும். வேதத்தைச் சில சாதியார்க்கே ஓத வேண்டும் என்ற கருத்துப்

பிறந்த இந்த மண்ணில், **'அறத்தின் பெருமையை யார்க்கும் உரைத்தல்'** வேண்டும் என்று சைனம் வற்புறுத்துவது சைனத்தின் சீர்மையைப் புலப்படுத்துகிறது.

**வைப்பு முறை:** மும்மணிகள் எவை எனக் காட்டி (2), அவற்றுள் முதலாவதான நற்காட்சியின் இயல்பை விளக்கி (3), நற்காட்சிக்குத் துணையான இறைவன், நூல், முனி, என்பனவற்றை விரித்து (4-12), நற்காட்சியின் எட்டு உறுப்புகள் எவை எனச் சொல்லி (13-16), அவற்றின் இயல்புகளைத் (17-24) தெளிவு படுத்தினார். இனி, அவ்வெட்டுறுப்புகளுக்கும் பொருத்தமான கதைகளை மூன்று பாடல்களில் (25-27) எடுத்துக் காட்டுகிறார்.

## எடுத்துக்காட்டு கதைகள்

**25. அஞ்சன சோரன், அனந்தமதி, உலகில்**
**வஞ்சம்இல் ஒத்தா யணன்**

(இ-ள்) உலகில்-உலகிலே, அஞ்சன சோரன்-ஐயம் இன்மை என்ற உறுப்பிற்கு அஞ்சன சோரன் கதையும், அனந்தமதி-அவா இன்மை என்ற உறுப்பிற்கு அனந்த மதி கதையும், வஞ்சம் இல் ஒத்தாயணன்-உவர்ப்பின்மை என்ற உறுப்பிற்கும் கபடமில்லாத ஒத்தாயணன் கதையும் எடுத்துக்காட்டுகளாம்.

(க-ரை) அஞ்சன சோரன் கதை, ஐயமின்மைக்கும், அனந்த மதி கதை, அவா இன்மைக்கும், ஒத்தாயணன் கதை உவர்ப் பின்மைக்கும் எடுத்துக் காட்டுகளாம்.

**26. இரேவதை யாரும் சிநேந்திர பத்தரும்**
**தோவகையின் பாரிசரும், சொல்[15]**

(இ-ள்) இரேவதை யாரும்-மயக்கின்மை என்ற உறுப்பிற்கு இரேவதையார் கதையும், சிநேந்திர பத்தரும்-அறப்பழி நீக்கல் என்ற உறுப்பிற்குச் சிநேந்திர பத்தர் கதையும், தோவகையின் பாரிசரும்-அழிந்தாரைத் தாங்கல் என்ற உறுப்பிற்குக் குற்றமற்ற பாரிஷேண குமாரர் கதையும், சொல்-எடுத்துக்காட்டுகளாகச் சொல்லப் பெறும்—எ-று.

(க-ரை) இரேவதையார் கதை மயக்கின்மைக்கும், சிநேந்திர பத்தர் கதை அறப்பழி நீக்கலுக்கும், பாரிஷேண குமாரர் கதை அழிந்தாரைத் தாங்கலுக்கும் எடுத்துக்காட்டுகளாம்.

---

15 பாட வேறுபாடு: இரேவதை-தேவதை; சொல்-நற்கு. இவை சென்னை அரசாங்க ஓலைச்சுவடி நூலகப் பதிப்பிலுள்ள பாட வேறுபாடுகளாம்.

**27. வச்சிர மாமுனியும், வளர்பெரு விண்ணுவும்
நிச்சயம் எட்டும் உரை**

(இ-ள்) வச்சிரமாமுனியும்-அறத்தை விளக்குதல் என்ற உறுப்பிற்கு வச்சிரகுமார முனிவர் கதையும், வளர் பெரு விண்ணுவும்-அறவோருடன் அளாவுதலுக்கு வளர்ந்த பெருமைகளை யுடைய விட்ணு முனிவர் கதையும், எடுத்துக்காட்டுகள், நிச்சயம்-உறுதியாக, எட்டும் உரை-மேலே சொல்லப்பட்ட நாற்காட்சியின் எட்டு உறுப்புகளுக்கும் மேற்கண்ட எட்டுக் கதைகளும் எடுத்துரைகளாம்.

(க-ரை) வச்சிர முனிவர் கதை அறத்தை விளக்குதலுக்கும் விட்ணு முனிவர் கதை அறவோருடன் அளாவுதலுக்கும் எடுத்துரைகள் ஆகும்.

(வி-ரை) அரசாங்கப் பதிப்பிலுள்ள பாடல் வருமாறு:

**ஒத்தா யணனும் ஒருபொரு விஷ்ணுவும்
எய்த்தாக எட்டும் உரை**

ஒத்தாயணன் கதை முன்பே சொல்லப் பட்டது. ஆதலால் மீண்டும் இங்குச் சொல்லப் படுவதால் இப்பாடம் சரியற்றது என்பதைக் காட்டுகிறது. இரத்தின கரண்டகசிராவாகாசார நூலில், அறத்தை விளக்கல் என்ற மார்க்கப் பிரபாவனைக்கு வச்சிர குமார முனிவரின் கதையே காட்டப்படுவதால் மேற்கண்ட பாடமே சிறப்பாகத் தோன்றுகிறது.

## உறுப்பு குறைதல் கூடாது

**28. உறுப்பில் குறையின் பயன்இன்று; காட்சி
மறுப்பாட்டின் மந்திரமே போன்று**

(இ-ள்) மறுப்பாட்டின் - குற்றம்பட்ட, மந்திரம் - மந்திரம் (பயனற்றுப் போதலைப்), போன்று-போல, காட்சி-நற்காட்சி, உறுப்பில் குறையின்-மேலே கூறிய எட்டு உறுப்புகளில் குறையுமானல், பயன் இன்று-பயன் இல்லையாம்—எ-று.

(க-ரை) குற்றம் பட்ட தவருன மந்திரத்தால், பயன் இல்லா தொழிதலைப் போல, எட்டு உறுப்புகளில் ஒன்று குறைந்தாலும் நற்காட்சியின் பயன் இல்லாது ஒழியும்.

(வி-ரை) மறுப்பாடு-மாறுபாடு எனப் பொருள் உரைப்பர். மாறுபாடு என்பது மறுப்பாடு என்ருனதற்கு இலக்கணம் இல்லை. குறுக்கல் விகாரம் என்பர். மாறுபாடு-மறுபாடு என்று ஆகியிருந்

தால் அது சரியே. மறுப்பாடு என இடையே ஒற்று மிகுந்திருப்பதால் அது பொருந்தாது. மறு-குற்றம், மறுப்பாடு-குற்றம் பெற்ற நிலை. 'மறுப்பாடில் காட்சி யவர்' என்று இந்நூலாசிரியரே குற்றம் என்ற பொருளில் ஐம்பத்தோராம் பாட்டில் ஆண்டிருப்பதைக் காண்க.

இதுவரை நற்காட்சி உடையாரிடம் இருக்கவேண்டிய நற்குணங்களின் இயல்புகளை விளக்கினர். இனி, அவரிடம் இருக்கத் தகாதனவற்றின் இயல்புகளை விளக்குவர்.

## காட்சியார்க்குத் தகாதன

29. மூவகை மூடமும் எட்டு மயங்களும்
தோவகைஇல் காட்சியார்க்கு இல்

(இ-ள்) மூவகை மூடமும்-உலக மூடம், தேவமூடம், பாசண்டி மூடம் என்ற மூன்று மூடங்களும், எட்டு மயங்களும்-பிறப்பு, குலம், வலி, செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், உணர்வு என்ற எட்டு மதங்களும், தோவகை இல்-குற்றம் அற்ற, காட்சி யார்க்கு-நற்காட்சி உடையாரிடத்து, இல்-இல்லையாம்—எ-று.

(க-ரை) நற்காட்சி உடையாரிடத்து, மூவகை மூடங்களும், எட்டு மதங்களும் இல்லாது ஒழியும்.

## உலக மூடம்

30. வரைப்பாய்தல், தீப்புகுதல் ஆறுஆடல், இன்ன
உரைப்பின் உலக மயக்கு

(இ-ள்) வரைப்பாய்தல்-மலையின் மேல் ஏறி விழுவதும், தீப்புகுதல்-நெருப்பில் பாய்வதும், ஆறு ஆடல்-ஆறு கடல் ஆகியவற்றில் மூழ்குவதும், இன்ன-இவை முதலாயின, உரைப்பின்-சொல்லும் இடத்து, உலக மயக்கு-உலக மூடங்களாம்—எ-று.

(க-ரை) மலையின் மேல் ஏறி வீழ்ந்திறத்தல், தீக்குளித்து உடன்கட்டை ஏறி உயிர் துறத்தல், ஆறு, குளங்களில் குதித்து உயிர் நீத்தல் முதலாயின உலக மூடங்களாம்.

(வி-ரை) இவ்வாறு அன்றி, தீ மிதித்தல், புண்ணிய நதிகள் ஆடல் முதலானவற்றை உலக மூடம் என்று கூறலும் ஒன்று. அது பின்வரும் பாவாலும் உறுதி ஆகிறது.

> மாமாங்கம் ஆடல் மணல்குவித்தல் கல்லிடுதல்
> தாமோங் குயர்வரைமேல் சாவீழ்தல்-காமங்கொண்டு
> ஆடோடு எருமை அறுத்தல் இவையுலக
> மூடம் என்றுணரற் பாற்று

என்பது அறநெறிச்சாரம் (15).

மலை ஏறிக்குதித்து இறத்தல், உடன்கட்டை ஏறுதல், ஆழ நீரில் பாய்ந்து இறத்தல்—பழைய தமிழகத்தில் இருந்த பழக்கங் களாம். கணவனை இழந்த பெண் குரங்கு மலை ஏறிக் குதித்து மாய் வதைக் குறுந்தொகையும், பூதப்பாண்டியனின் மனைவி பெருங் கோப்பெண்டு, தீ வளர்த்து இறந்ததைப் புறநானூறும், கணவனை இழந்த பெண்டிர் நீரில் பாய்ந்து இறப்பதை மணிமேகலையும் காட்டு கின்றன.

எல்லீஸ் தரும் ஆங்கில மொழிபெயர்ப்பு: Throwing one self from a mountain or into a fire, and bathing in sacred rivers, these are called worldly delusions. (p. 170)

எல்லீஸ் பிறிதோர் இடத்தில் குறிப்பது: Suicide by falling from a mountain, or into the fire, these and all similar worldly follies. p. 174.

## தேவ மூடம்

> 31. வாழ்விப்பர் தேவர் எனமயங்கி வாழ்த்துதல்
> பாழ்பட்ட தெய்வ மயக்கு

(இ-ள்:) தேவர்-தேவர்கள், வாழ்விப்பர்-செல்வம் முதலாய வற்றைத் தந்து காப்பாற்றுவர், என-என்று மனத்துள் எண்ணிக் கொண்டு, மயங்கி-அறிவுதிரிந்து, வாழ்த்துதல்-அத்தேவரைத் துதித்தல், பாழ்பட்ட-பாழான, தெய்வ மயக்கு-தெய்வ மூடமாம் —எ-று.

(க-ரை) தேவர்கள் தம்மைச் செல்வம் முதலாயின தந்து காப்பாற்றுவர் என்று மயங்கி, அவரைப் போற்றுதல் தெய்வ மூடமாம்.

> 32. மயக்கார்வம் செற்றம் உடையாரை ஏத்தல்
> துயக்குஉடைத் தெய்வ மயக்கு

(இ-ள்) மயக்கு-மோகம், ஆர்வம்-ஆசை, செற்றம்-வெறுப்பு, உடையாரை-உடைய தேவர்களை, ஏத்தல்-வாழ்த்தி வழிபடுதல், துயக்குடை-மிகுதியான, தெய்வ மயக்கு-தெய்வ மூடமாகும்-எ-று.

(க-ரை) விருப்பு, வெறுப்புடைய தேவர்களை வழிபடுதல் தேவ மூடமாம்.

(வி-ரை) வேத சமயக் கடவுளர்கள் இருமனைவியர் உடையராய் இருப்பதும், வெறுப்பு கொண்டு தம்முள் போர் செய்து கொள்வதும் ஆக உள்ள கதைகளை மனத்துள் கொண்டு இத் தேவமூடம் கூறப் பட்டது போலும். 'தியக்கு' என்பது எல்லீஸ் காட்டும் பாடம்.

எல்லீஸ் தரும் ஆங்கில மொழிபெயர்ப்பு:

Worshipping Gods subject to delusion, partiality, or anger; this folly is delusion respecting the Deity. (ப. 170)

## பாசண்டி மூடம்

33. மாசுண்ட மார்க்கத்து நின்றுரைப் பூசித்தல்
பாசண்டி மூடம் எனல்

(இ-ள்) மாசு உண்ட – குற்றம் உடைய, மார்க்கத்து–சமய நெறியில், நின்றுரை-சென்று நின்றவரைப், பூசித்தல்-பூசை செய்தல், பாசண்டி மூடம்-பாசண்டி மூடம், எனல்-என்று கூறப் பெறும்—எ-று.

(க-ரை) குற்றம் உடையநெறியில் நின்றவரைப் பூசித்தல் பாசண்டி மூடமாம்,

(வி-ரை) பாசண்டி மூடங்கள் எவை எனப் பட்டியல் இட்டுக் காட்டும் அறநெறிச்சாரம் (17).

**தோல்காவி, சீரைத் துணிகீழ் விழஉடுத்தல்**
**கோல் காக் கரகம் குடைசெருப்பு-வேலொடு**
**பல்என்பு தாங்குதல் பாசண்டி மூடமாய்**
**நல்லவரால் நாட்டப் படும்**

சீரை - மரவுரி; கோல் - தண்டு; கா-வாவடி, என்பு-எலும்பு. 'பாசண்ட மூடம்' என்பது எல்லீஸ் காட்டும் பாடம். அவர் தரும் ஆங்கில ஆக்கமாவது :

Honoring these as saints who pursue a faulty path; this is heretical folly (p. 170).

நற்காட்சி உடையவரிடம் மூடங்களும், மதங்களும் இருக்கக் கூடாதவை என்று கூறினதற் (29) கிணங்க, 30-33ஆம் பாவரை

மூடங்கள் எவை என விளக்கினவர், இனி, மதங்கள் எவை என விளக்குவர் (34, 35).

## எண்வகை மதங்கள்

**34. பிறப்பு, குலம், வலி, செல்வம், வனப்பு,
சிறப்பு, தவம், உணர்வோடு எட்டு**

(இ-ள்) பிறப்பு-தாய்வழி, குலம்–தந்தைவழி, வலி-வலிமை, செல்வம்-சொத்து, வனப்பு-அழகு, சிறப்பு-பெருமை, தவம்-தவம், உணர்வு-அறிவு என்ற, எட்டு-இவ்வெட்டினுல் வரும் செருக்கே மதம் எனப்பெறும் எ-று.

(க-ரை) பிறப்புச் செருக்கு, குலச் செருக்கு, வீரச்செருக்கு, செல்வச்செருக்கு, அழகுச் செருக்கு, புகழ்ச் செருக்கு, தவச் செருக்கு, அறிவுச் செருக்கு என்பன எட்டுச் செருக்குகளாம்.

(வி-ரை) மதம்-செருக்கு. எண்வகை மதம் என்றது எண்வகைச் செருக்குகளையே.

இணையான 'இரத்தின கரண்ட ஸ்ராவகாச்சார' பாடலின் (C. R. ஜெயின்) ஆங்கில மொழி பெயர்ப்பு :

The sages who have crushed out all traces of pride from the souls describe **mada** (pride) as the intoxication of self in respect of eight particulars : (i) learning, (ii) worship, (iii) family, (iv) tribe, (v) power, (vi) affluence or accomplishments, (vii) Religious austerity and (viii) Person.

## செருக்கால் வீழ்ச்சியே

**35. இவற்ருல் பெரியேம்யாம் என்றே, எழுந்தே
இகழ்க்கில் இறக்கும் அறம்**

(இ-ள்) இவற்ருல்-மேற் கூறிய எட்டு வகைச் செருக்குகளால், யாம் பெரியேம்-நாம் பெருமைக்கு உரியவர்-ஆவேம், என்றே மனத்தில் கொண்டு, எழுந்தே-செருக்குற்றுத் தலை நிமிர்ந்து, இகழ்க்கில்-மற்றவரை இகழ்ச்சி செய்வாராஞல், அறம்-நற்காட்சி, இறக்கும்-அவர்கள் மாட்டு அழியும்—எ.று.

(க-ரை) எண் வகைச் செருக்குகளால் பெருமிதம் கொண்டு 'யாமே பெரியம்' என்று கருதி, பிறரை இகழ்ந்தால் நற்காட்சி அவரிடம் கெடும்.

(வி-ரை) இறக்கும் அறம்-என்பதற்கு அறம் அழிந்து விடும் என்று பொருள் கூறுவது ஒரு வகை. அவ்வாறின்றி, செருக்குடையாரை அறமானது கீழிறக்கி விடும் என்று பொருள் உரைத்தல் பிறிதொரு வகை.

> 'அறிவுடைமை மீக்கூற்றம் ஆன குலனே
> உறுவலி நற்றவம் ஓங்கிய செல்வம்
> பொறிவனப்பின் எம்போலவார் இல்' என்னும் எட்டும்
> இறுதிக்கண் ஏமாப்பு இல

என்பது **அறநெறிச்சாரம்** (20).

நற்காட்சி உடையார்க்கு இருக்க வேண்டிய குணங்களை முன்னே, கூறி (13-24), நற்காட்சி உடையாரிடம் இருக்க வேண்டாக் குணங்களை அடுத்துக் (29-35) கூறினர். இனி நற்காட்சியின் பயன்களைக் கூறுவர்.

## நற்காட்சியின் சிறப்பு

**36. அறம்உண்டேல் யாவரும் எள்ளப் படாஅர்**
**பிறகுணத்தால் என்ன பயன்?**

(இ-ள்) அறம்-நற்காட்சி, உண்டேல்-இருக்குமானல், யாவரும்-எவரும், எள்ளப்படாஅர்-இகழப் பெறுர், பிற குணத்தால்-நற்காட்சி தவிர பிற குணங்கள் இருப்பதனல், என்ன பயன்-என்ன பயன் உண்டு? ஒன்றும் இல்லை—எ.று.

(க-ரை) அரசராயினும், ஆண்டி ஆயினும் யாராயினும் நற்காட்சி உடையவரானல், எவராலும் இகழப் பெறமாட்டார்கள். நற்காட்சி அன்றிப் பிற குணங்கள் இருப்பதனல் என்ன பயன்? ஒன்றுமில்லை.

(வி-ரை) யாவரும் என்பது, பொருள் முதலானவற்றல் உயர்ந்தோராயினும், தாழ்ந்தோர் ஆயினும் என்பதைக் கருதிச் சொல்லப்பட்டது.

படார்கள் என்பது பாட வேறுபாடு. இது அந்நூலின் பழைய வடிவம் இல்லை. படாஅர் என்ற பாடமே, அக்காலக் கண்ணேட்டத்தில் பொருத்தமான பாடமாகத் தெரிகிறது.

**37. பறையன் மகன்எனினும் காட்சி உடையான்**
**இறைவன் எனஉணரற் பாற்று**

(இ-ள்) பறையன் மகன்-பறை அடிப்பவர் குலத்தில் பிறந்தவன், எனினும்-என்ருலும், காட்சி உடையான்-நற்காட்சி உடையவன்,

இறைவன்-இறைவனே, என உணரற்பாற்று-என்பது உணரத்தகும் பான்மையது—எ.று.

(க-ரை) பறை அடிப்பவர் குலத்தினன் ஆயினும், அவன் நற்காட்சி உடையவன் எனில், அவனே இறைவன்.

(வி-ரை) மனித உணர்ச்சியைத் தடுக்கவோ, தாழ்த்தவோ பிறப்பு அடிப்படை ஆகாது என்பது இப்பாவின் உள்ளடக்கம்.

**களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்**
**விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்**

என்பதோடு இணைத்துப் பார்க்க.

**38. தேவனு நாயாகும் தீக்காட்சி யால்; நாயும்**
**தேவனும் நற்காட்சி யால்**

(இ-ள்) தீக்காட்சியால்-நற்காட்சிக்குப் புறம்பான தீக்காட்சிக் குணங்கள் இருக்குமானால், தேவனும்-தேவனே ஆயினும், நாயாகும்-நாயாகப் பிறப்பான், நற்காட்சியால்-நற்காட்சிக் குணங்கள் இருக்குமானால், நாயும்-இம்மைப் பிறவி நாயும், தேவனும்-வரும் பிறவியில் தேவனாகப் பிறக்கும்—எ.று.

(க-ரை) தீக்காட்சிக் குணங்கள் இருக்குமானால் தேவனே ஆயினும், வரும் பிறவியில் நாயாகப் பிறப்பான்; நற்காட்சிக் குணங்கள் இருக்குமானால் நாயும், வரும் பிறவியில் தேவனாகப் பிறக்கும்.

(வி-ரை) நாய் தேவனாகும் நிகழ்ச்சி, **சீவக சிந்தாமணியில்** கூறப் பெற்றிருக்கிறது (933) (962). **சேனாவரையர்** தம் **தொல் காப்பியச்** சொல்லதிகார உரையில் (102) 'நாய் தேவனாயிற்று' என்று உதாரணம் எடுத்து ஓதுவர்.

36-38 வரையுள்ள மூன்று பாக்களால், நற்காட்சி உடைமையின் நற்பயன்கள் கூறப் பெற்றன. இனி, நற்காட்சி உடையாரிடம் இருக்க வேண்டா, அவிநயங்கள் பற்றி விளக்கப் பெறும்.

## அவிநயம்

**39. அவ்விநயம் ஆறும் அகன்றது நற்காட்சி**
**செவ்விதின் காப்பார் இடை**

(இ-ள்) நற்காட்சி-நற்காட்சிக்குரிய குண நலன்களை, செவ்விதின்-செம்மையாக, காப்பார் இடை-காப்பாற்றுவார் இடத்து,

அ(வ்)விநயம் ஆறும்-விநயம் இல்லா ஆறு தீக்குணங்களும், அகன்றது-நீங்கியதாகும்—எ.று.

(க-ரை) நற்காட்சி உடையவரிடத்து தீக்குணங்களாகிய அவி நயம் ஆறும் அண்டா; அகலும்.

(வி-ரை) விநயம் என்பதன் எதிர்ச் சொல் அவிநயம். அவி நயம் என்பதன் விரித்தல் விகாரம் அவ்விநயம் என்பதாகும்.

**40. நல்லறத்தின்[16] தீர்ந்த வணக்கத்தை, நல்லோர்கள்**
**சொல்வர் அவிநயம் என்று**

(இ-ள்) நல்லோர்கள்-சான்றோர்கள், நல்லறத்தின்-தூய அற நெறியினின்று, தீர்ந்த வணக்கத்தை-விலகிய வழிபாட்டை, அவி நயம் என்று-அவிநயம் என்று, சொல்வர்-கூறுவர்—எ.று.

(க-ரை) தூய அறப்பாதையிலிருந்து விலகிய வழிபாட்டைச் சான்றோர்கள் அவிநயம் என்று அழைப்பர்.

(வி-ரை) குணம் இல்லாதவர்களை வணங்குவது, வழிபடுவது-நல்லறத்தின் தீர்ந்த வணக்கம் எனக் குறிக்கப்பட்டது. வழிபடத் தகா-வணங்குதற் காகக் குணமிலிகள் யார் யாரென்று வரும் பாடல் தெரிவிக்கிறது.

**அச்சமே ஆசை உலகிதம் அன்புடைமை**
**மிக்கபா சண்டமே தீத்தெய்வ—மெச்சி**
**வணங்குதல் அவ்விநயம் என்பவே மாண்ட**
**குணங்களில் குன்று தவர்**

## வணங்கத் தகாதார்

**41. மிச்சை இலிங்கியர் நூல், தெய்வம், அவாவினோடு,**
**அச்சம், உலகத்தோடு ஆறு**

(இ-ள்) மிச்சை இலிங்கியர்-அறியாமை வாய்ந்த முனிவர்களை, (மிச்சை) நூல்-அறியாமை வாய்ந்த நூல்களை, (மிச்சை) தெய்வம்-அறியாமை வாய்ந்த தெய்வத்தை, அவாவினோடு-வணங்கினால் நன்மை கிடைக்கும் என்ற அவாவினாலும், அச்சம்-வணங்காவிடில் தீங்கு நேரும் என்ற அச்சத்தினாலும் (முறையே வணங்குதல்) உலகத் தோடு ஆறு-உலகத்தோடு உழலும் ஆறு அவிநயங்களாம்—எ.று,

---

16 'நல்வினையிற் றீர்ந்த வணக்கம்' என்பதும் பாடம்.

(க-ரை) வணங்கினல் நன்மை கிட்டும் என்று **அவாவினல்** (1) இலிங்கியரை, (2) தெய்வத்தை, (3) நூல்களை வணங்குதல், வணங்காவிடில் தீங்கு நேரும் என்று **அஞ்சி**, (4) இலிங்கியரை, (5) தெய்வத்தை (6) நூல்களை வணங்குதல், இவை ஆறு அவி நயங்களாம்.

(வி-ரை) மிச்சை-மித்யா என்ற வட சொல்லின் திரிபு. அல்லது மித்தை என்ற பாகதச் சொல்லின் திரிபு, அறியாமை அல்லது பொய் என்று பொருள். மிச்சை என்ற சொல்லை இலிங்கியர், நூல், தெய்வம் என்ற மூன்றனுக்கும் கூட்டுக. முதனிலைத் தீவக அணி. அவா, அச்சம் என்ற இரண்டையும், இலிங்கியர், நூல், தெய்வம் என்ற மூன்றிஞேடு பெருக்க ஆறு அவிநயங்களாம்.

**பாடவேறுபாடு:** விலங்கியர், இலக்கியர் என்றும் பாடபேதம். இலங்கியர் என்பதே சரி. இலிங்கம் கட்டிய புறச்சமயங்களைக் குறித்தார் என்று கொள்ள இடனுண்டு. புறச்சமயங்களை, புறச் சமயத் தெய்வங்களை, புறச்சமய நூல்களைக் குறித்திருத்தல் வேண் டும். உலோபிதத்தோடு-என்பதினும் உலகத்தோடு என்ற அரசுப் பதிப்புப் பாடமே மிகப் பொருந்துகிறது.

'என்கருமம் வினவுதியேல் **இலங்கிய**ருள் என்ஞேடு, நன்குரைப் பார்த் தரல் வேண்டி நாவற்கொம் மிது நட்டேன்; உன்கருமம் நீ செய்வாய் நுழைந்தறிவும் உடையையேல், மன்பெரியான் திருந்தவையுள் மாற்றந்தா எனச் சொன்னுள்' என வரும் **நீலகேசி யிலும்** (169), **திரிகடுகப்** பாவிலும் (17) இலிங்கியர் என்ற சொல் தவசிகள் என்ற பொருளில் ஆளப்பட்டிருத்தல் காண்க.

## அவிநய நீக்கம்

**42. இவ்ஆறும் நீக்கி வணங்கார்; அவிநயம்
எவ்வாறும் நீங்கல் அரிது**

(இ-ள்) இவ் ஆறும்–மேற் சொன்ன ஆறினையும், நீக்கி-விலக்கி, வணங்கார்-வணங்காதவர், அவிநயம்-அவிநய ஒழுக்கமின்மைகளை, எவ்வாறும்-எவ்வகையிலும், நீங்கல்-விடுதல், அரிது-எளிது அன்று; அரிதாம்—எ-று.

(க-ரை) வணங்கத் தகாதோரை விலக்கி-தக்கோரை வணங் காதவர், எவ்வகையிலும் அவிநயக் குற்றங்களை அகற்றுதல் அரிது.

(வி-ரை) 'இவ்வாறு ஞேக்கி' என்பது அரசுப் பதிப்புப் பாடம், 'இவ்வாறு நோக்கி', என்பதுவும், 'இவ்வாறும் நோக்கி' என்பதுவும் பிற பதிப்பிலுள்ள பாடம். இப்பாடம் எதுவுமே, மூல நூலாசிரியர்

தம் கருத்தை அவருக்கே உரிய எளிய பாணியில் தெரிவிப்பதாய் இல்லை. ஆதலின் 'இவ்வாறு நீக்கி' என்று பாடம் ஓதப் பெற்றது. இதனால் பொருள் தெளிவும், எளிமையும் இருத்தல் காண்க.

## நற்காட்சி இல்லரர் அழிவு

**43. காட்சி, விசேட உணர்வும் ஒழுக்கமும்**
**மாட்சி அதனில் பெறும்**

(இ-ள்) காட்சி-நற்காட்சியால், விசேட உணர்வும்-நல்லறிவும், ஒழுக்கமும்-நல்லொழுக்கமும், மாட்சி-பெருமையை, அதனில் பெறும்-நற்காட்சியினின்றும் பெற்றுச் சிறக்கும்—எ-று,

(க-ரை) நற்காட்சியே, ஏனைய இரண்டு இரத்தினத்திரயங் களாகிய நல்லறிவிற்கும், நல்லொழுக்கத்திற்கும் பெருமை சேர்ப் பதாகும்[17]

(வி-ரை) மும்மணிகளுள், பின்னிரண்டிற்கும் பெருமை சேர்ப் பது நற்காட்சியே என்பது இப்பாடலால் தெளிவுபடுத்தப்படுகிறது. நற்காட்சி இல்லாத, அறிவும், ஒழுக்கமும் வீடு பேற்று வழி ஆகா. ஆதலால் நற்காட்சி, முதலில் அடைய வேண்டிய தலைமைக் குணம் ஆகும்.

**44. நற்காட்சி இல்லார் உணர்வும், ஒழுக்கமும்**
**ஒற்கா ஒசிந்து கெடும்**

(இ-ள்) நற்காட்சி இல்லார்-நற்காட்சி என்ற சம்யக் தரிசனம் இல்லாதாரிடத்துள்ள, உணர்வும்-நல்லறிவும், ஒழுக்கமும்-நல்லொ ழுக்கமும், ஒற்கு ஆ-தளர்வு ஆகி, ஒசிந்து-கட்டுக் குலைந்து, கெடும், அழியும்—எ-று.

(க-ரை) நற்காட்சி இல்லாதவரிடத்துள்ள நல்லறிவும், நல் லொழுக்கமும், தளர்ந்து, மெலிந்து பலனற்று அழியும்.

(வி-ரை) ஒற்கா-என்பதற்கு விரைவாக என்றும், ஒசிந்து- என்பதற்கு ஒருங்கே என்றும் பொருளுரைப்பர். அவ்விரு சொற் களுக்கும் அத்தகு பொருள் இல்லை. ஒற்கு-ஒற்கம்-தளர்ச்சி, ஒசிதல்- மெலிதல், கட்டுக் குலைதல் என்று பொருள்.

---

17 குறள் 'ன் அடிக்குறிப்பு காண்க

### 45. அச்சுஇலேல் பண்டியும் இல்லை சுவர்இலேல் சித்திரமும் இல்லதே போன்று

(இ-ள்) அச்சு இலேல்-அச்சு இல்லா விட்டால், பண்டியும் இல்லை-வண்டி ஓடுவது இல்லை, சுவர் இலேல்-சுவர் இல்லாவிடில், சித்திரமும்-ஓவியம், இல்லதே போன்று-இல்லாததைப் போல, நற்காட்சி இல்லையேல், நல்லறிவும் இல்லை; நல்லொழுக்கமும் இல்லை—எ-று.

(சு-ரை) வண்டிக்கு அச்சு இல்லாவிடில் ஓட்டம் இல்லை; சுவருக்கு ஓவியம் இல்லா விடில் அழகு இல்லை; நல்லறிவிற்கும், நல்லொழுக்கத்திற்கும் நற்காட்சி இல்லாவிடில் பயன் இல்லை.

(வி-ரை) வண்டிக்கு அச்சே அடிப்படை; ஓவியத்திற்குச் சுவரே அடிப்படை; நல்லறிவிற்கும், நல்லொழுக்கத்திற்கும் நற்காட்சியே அடிப்படை.

### 46. காட்சியோடு ஒப்பதுயாம் காணேம் வையத்து மாட்சி உடையது உயிர்க்கு

(இ-ள்) வையத்து-இவ்வுலகத்தில், உயிர்க்கு - உயிர்களுக்கு மாட்சி உடையது-பெருமையைத் தரக்கூடியது, காட்சியோடு ஒப்பது-நற்காட்சி ஒன்றே; அதற்கு நிகரானது, (உயிர்கட்கு) யாம் காணேம்-(பிரிதொன்றை) யாம் கண்டோம் இல்லை—எ-று.

(சு-ரை) உலகத்தில், பெருமை நல்கத் தக்கது நற்காட்சி ஒன்றே. அதற்கு நிகரான ஒன்றை யாம் கண்டது இல்லை.

(வி-ரை) திருவள்ளுவர் இரண்டே இடங்களில் 'யாம்' என்று தம்மை அறிமுக மாக்கி உரைக்கிறார். அவ்விரண்டு இடங்களும் அவர்தம் ஈடுபாடு காட்டுவன. அருங்கலச் செப்பின் ஆசிரியரும் 'யாம் காணேம்' என்று இப்பாவில் கூறுவது, நற்காட்சிக் குணத்தின் மீது அவர் கொண்ட அளவிறந்த மதிப்பைக் காட்டுகிறது.

## நற்காட்சி உடையோர் பெருமை

### 47. விரதம் இலர்எனினும் காட்சி உடையார்; நரகம் புகுதல் இலர்

(இ-ள்) விரதம் இலர் எனினும்-விரதங்களைப் பின்பற்றாதவர் எனினும், காட்சி உடையார்-நற்காட்சிக் குணம் உடையவர், நரகம்-நரகத்தின்கண், புகுதல் இலர்-சென்று பிறவார்—எ-று.

(சு-ரை) உரிய நோன்புகளைப் பின் பற்றாதவர் என்றாலும், நற்காட்சி உடையவர், வரும் பிறவிகளில், நரகப் பிறப்பு எய்துவது இல்லை.

(வி-ரை) விரதம் அணுவிரதம், குணவிரதம், சிட்சாவிரதம், மகாவிரதம் என்பன. இவை பற்றிய விரிவுகளை, நூலாசிரியரே பின்னே விரித்துரைப்பர்.

நரகம்-தீவினை செய்வார், வரும் பிறவிகளில் சென்று சேரும் இடம். அது கீழே உள்ளது. அஃது ஏழு பகுதிப்படும். அவை யாவன: இருள் (இரத்தினப் பிரபை), இருளின் இருள் (சருக்கராப் பிரபை), புகை (வாலுகாப் பிரபை), அளறு (பங்கப் பிரபை) மணல் (தூமப் பிரபை), பரல் (தமப் பிரபை), மணி (தமத் தமப் பிரபை).

*செறியச் சொன்ன பொருள் தெளிந்தார்*
*சேரார் விலங்கில்; பெண்ணாகார்;*

*குறுகார் நரகம் ஓர் ஏழும்*
*கீழ்முத் தேவர் குழாந் தீண்டார்;*

*அறியாது உரைத்தேன் அதுநிற்க;*
*ஆரு நரகம் ஆகாத*

*பொறியார் போக பூமியுள்*
*விலங்கும் ஆவர் ஒரு சாரார்!*

என்பது சீவக சிந்தாமணி (2817).

## நற்காட்சி உடையவர் விலங்காய்ப் பிறத்தலில்லை

**48. கலங்கல்இல் காட்சி உடையார் உலகில்**
**விலங்காய்ப் பிறத்தல் இலர்**

(இ-ள்) உலகில்-உலகத்தில், கலங்கல் இல்-கலக்கம் இல்லாத, காட்சி-நற்காட்சியினை, உடையார்-உடையவர், விலங்காய்-(வரும் பிறவிகளில்) விலங்காகப், பிறத்தல் இலர்-பிறத்தலைப் பெறார்—எ-று.

(க-ரை) இம்மையில் கலக்கம் இல்லாத நற்காட்சியினை உடையவர்கள், மறுமையில் விலங்காய்ப் பிறத்தல் இல்லை.

## பெண்பிறப்பும், அலிப்பிறப்பும்

**49. பெண்டிர் நபுஞ்சகர் ஆகார் பிழைப்பின்றிக்**
**கொண்ட நற்காட்சி யவர்**

(இ-ள்) பிழைப்பு இன்றி-பிழைபாடு இல்லாமல், நற்காட்சிக் கொண்டவர்-நற்காட்சி குணங்களைப் பின்பற்றினவர், பெண்டிர்-(வரும் பிறவிகளில்) பெண்டிராகவோ, நபுஞ்சகர்-அலிகளாகவோ, ஆகார்-பிறவார்—எ-று.

(க-ரை) இம்மையில் நற்காட்சிக் குணத்தைத் தவறுதல் இல்லாமல் பின்பற்றுகிற சான்றோர், மறுமையில் பெண்ணாகவோ, அலியாகவோ பிறந்து துன்புறுதல் இல்லை.

(வி-ரை) ஆண் பிறவியிலேயே வீடு பேறு பெறமுடியும் என்பது (திகம்பர) சைனக் கோட்பாடு. வீடு பேற்றுக்கு வாய்ப்பில்லாத பிறவிகளைத் தவிர்க்க வேண்டுமானால், நற்காட்சி வேண்டும் என்பதை வற்புறுத்தும் வழி இக்கோட்பாட்டைக் குறிப்பாகச் சுட்டுகிறது இக்குறள். 'னகாரம் வீடுபேற்றிற்குரிய ஆண்பாலை உணர்த்துதல் சிறப்பான் பின் வைக்கப்பட்டது' எனத்தொல்காப்பிய முதல் சூத்திர உரையில் **இளம்பூரணர்** குறிப்பிடுதலையும் இங்கே நினைவு கூர்க.

## இழிகுலப் பிறப்பு

**50 இழிகுலத் தென்றும் பிறவார்; இறைவன்**
**பழியறு காட்சி யவர்**

(இ-ள்) இறைவன்-இறைவனால் அருளப்பெற்ற, பழியறு காட்சியவர்-இருபத்தைந்து குற்றங்களும் அகன்ற நற்காட்சியினை உடையவர், இழிகுலத்து-நாலு பேரும் பழிக்கின்ற இழிவான குலத்திலே, என்றும் பிறவார்-என்றைக்கும் பிறக்க மாட்டார்—எ.று.

(க-ரை) குற்றங்கள் பழிபாவங்கள் அகன்ற நற்காட்சி உடையவர் இழிந்த குலத்திலே பிறக்க மாட்டார்.

(வி-ரை) குற்றங்கள்; மூடம் 3, மதம் 8, அநாயதனம் 6, சங்கை முதலிய குற்றங்கள் 8. 'பழியறு' என்பதற்குப் பகர்வாக' 'பழுதறு' என்ற பாட பேதம் அரசுப் பதிப்பில் காணப் படுகிறது. இரண்டுமே பொருத்த மானவை.

## ஊனமுற்றுப் பிறத்தல்

**51. உறுப்(பு)இல் பிறர்பழிப்ப, என்றும் பிறவார்**
**மறுப்பாடுஇல் காட்சி யவர்**

(இ-ள்) மறுப்பாடு இல்-குற்றம் இல்லாத, காட்சியவர்-நற்காட்சியினை உடையவர், பிறர் பழிப்ப-மற்றவர் பழித்துச் சொல்லும்படியாக, உறுப்பு இல்-உடலுறுப்புகள் இல்லாது, குறைந்து ஊனமுற்றவராக, என்றும் - எப்போதும், பிறவார் - பிறத்தல் இலர் — எ-று.

(க-ரை) நற்காட்சி உடையவர், அங்க ஈனர்களாகப் பிறத்தல் எப்போதும் இல்லை.

(வி-ரை) பாடல் 28 இல் இடம் பெற்றுள்ள 'மறுப்பாட்டு' — என்ற சொல்லும், இங்கு இடம் பெற்றுள்ள 'மறுப்பாடு' என்ற சொல்லும் குற்றம் என்ற பொருளனவே. மறுப்படு என்பதுமறுப்பாடு என்று, நீண்டும், மறுப்பாட்டு என்று நீண்டு விரிந்தும் விகாரம் பெற்று ஆளப் பெற்றுள்ளன. உறுப்பில்-உறுப்புகளில் என்றும் பொருள் உரைக்கலாம்.

## வறுமை வாட்டுவதில்லை

52. குறுவாழ்க்கை, நோயோடு, நல்குரவு கூடப்
 பெறுவாழ்க்கை யுள்பிறத்தல் இல்

(இ-ள்) குறுவாழ்க்கை-சிறு குடிசையில் சென்று பிறத்தலும், நோயோடு-பிணியால் பீடிக்கப் பெற்று துன்பம் அடைதலும், நல்குரவு-வறுமையில் வாடுதலும், கூடப் பெறும் வாழ்க்கையுள்-ஒருங்குசேரும் குடும்பத்தில், பிறத்தல் இல்-நற்காட்சி யுடையார், வரும் பிறவிகளில் பிறப்பது இல்லை—எ.று.

(க-ரை) நற்காட்சியுடையவர், சிறு குடிசையில் பிறந்து, நோயால் அல்லல் பட்டு, வறுமையில் உழலும் துன்பப் பிறப்பு எய்தப் பெறுதல் இல்லை.

(வி-ரை) வாழ்க்கை என்பது 'வாட்கை' என்றே அரசுப் பதிப்பு களில் காணப்படுகிறது. சூளாமணியிலும் வாட்கை, சூட்சி (சூழ்ச்சி) என எழுதப்பட்டிருத்தலை காணலாம். இவை யெல்லாம் வீர சோழிய இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைந்தவை. குறு வாழ்க்கை என்பதற்கு அகவை குறைவுபட்ட வாழ்க்கை (Short life) என்றும் பொருள் காண்பர்.

## சிறப்புப் பிறப்புகள்

53. அரசர், இளவரசர், செட்டியரும் ஆவர்
 புரைதீர்ந்த காட்சி யவர்

(இ-ள்) புரைதீர்ந்த - குற்றம் அகன்ற, காட்சியவர் - நற் காட்சியினை உடையவர், அரசர்-ஆளும் வேந்தராயும், இளவரசர்-இளவரசராயும், செட்டியரும் - வாணிகராயும், ஆவர் - (ஆகப்) பிறப்பர்—எ-று.

(க-ரை) நற்காட்சியினை உடையவர், நலம்பல உடைய அரச ராயும், இளவரசராயும், வணிகராயும் பிறப்பர்.

(வி-ரை) இப்பர், கவிப்பர், வாணிகர் என்ற மூன்று நிலைகள் செட்டியர் என்பதன் மூலம் சுட்டப்பட்டுள்ளன. அரசுப் பதிப்பி லுள்ள மணிப்பிரவாள உரை சிறப்பானது. அது பின் வருமாறு:

"குற்றம் தீர்ந்த காட்சியை உடைத்தானவர், ராஜாவும், யுவ ராஜனும் செட்டியரும் ஆவர்.

பொருளைக் கும்பல் பண்ணி இரண்டு பக்கத்திலேயும் **ஆனையின்** மேலேறி குடை பிடிக்க யானை மேலே இருக்கிறவனுக்குக் குடை தெரியாத அத்தனைச் செல்வம் உடைய **இப்பர்** குலமும், அதே போன்று எருதுவின் மேலே நிற்போன் பிடிக்கும் குடை தெரியாத அளவு உயர்ந்த பொருட் குவியல் ஈட்டியுள்ள **கவிப்பர்** என்னும் வணிகர்களாகவும், மிதியடிகளின் மேல் நின்றுனின் குடை தெரியாத பொருட் குவியலை உடைய **பெருங்குடி வணிகர்களாகவும்** பிறப் பார்கள்."

## தேவர் பிறப்பு

**54. *மூவகைக் கீழ்த்தேவர் ஆகார்; முக(டு)உயர்வர்***
***தோவகைஇல் காட்சி யவர்***

(இ-ள்) தோவகை இல்-குற்றம் இல்லாத, காட்சியவர்-நற் காட்சியினை உடையவர், மூவகைக் கீழ்த் தேவர்-பவணர், வியந்தரர், சோதிட்கர் என்று கூறப் பெற்ற கீழ்த் தேவர்களாக, ஆகார்-பிறக்க மாட்டார், முகடு உயர்வர்-உயர்ந்த தேவர்களாகப் பிறப்பர்—எ-று.

(க-ரை) நற்காட்சியினை உடையவர், வரும் பிறவிகளில் உயர்ந்த தேவர்களாகப் பிறப்பார்கள்.

(வி-ரை) நற்காட்சி உடைவிலங்கும் மானிடரும் வதஞ்செரிந்தும்
கற்பாதி முதலாகக் கற்பாந்தம் உறச்செல்வர்
நற்பால வதம்செறிந்த நரர்விலங்கு பவணுதி
கற்பாந்தம் சாசரரந் தங்காண்பர் முறை யுளியே

என வரும் மேரு மந்தர புராணப் பாவும் (76) இக்கருத்தை விரிவாக எடுத்து விளக்குகிறது.

பவணர், வியந்தரர், ஜோதிஷ்கர், கற்பவாசியர் என தேவர்கள் நான்கு வகையினர். அதற்குமேல் கற்பாதீதர் என்ப. நவக்ரை வேயகம் 9, நவாணுதிசை 9, பஞ்சாணுத்தரம் 5 ஆகிய 23 இடங் களில் உள்ள தேவர்கள் கற்பாதீதர் எனப்படுவர். அவர்கள் ஒவ் வொருவரும் இந்திரர்கள் ஆகலின் அகமிந்திரர் என்ற பெயரை உடையவர் ஆவர். அவர்கள் தாங்கள் இருக்கும் இடத்தை விட்டு வெளிவருதல்இலர். அவர்களுக்கு மனைவி முதலிய சுற்றமின்றி முக்தி இன்பத்துக்கு இணையான் ஆன்ம இன்பத்தை அனுபவிப்பர். தேவ பிறப்பின் மேல் விவரங்களை தத்துவார்த்த சூத்திரத்திலும் காணலாம்.

## உயர் தேவராகப் பிறத்தல்

**55. விச்சா தரரும், பலதேவரும், ஆவர்**
**பொச்சாப்புஇல் காட்சி யவர்**

(இ-ள்) பொச்சாப்பு இல்-மறதி இல்லாத, நற்காட்சியவர்-நற்காட்சியினை உடையவர், விச்சாதரரும்-வரும் பிறப்புகளில் வித்தியாதரராகவும், பலதேவரும்-பல தேவர் ஆகவும், ஆவர்-ஆகப் பிறப்பர்—எ-று.

(சு-ரை) நற்காட்சியினை உடையவர், வரும் பிறவிகளில் வித்தியாதரராகவும், பல தேவராகவும் பிறப்பர்.

(வி-ரை) **வித்தியாதரர்**-வித்தையின் உதவியினால் தேவர்களைப் போன்று பல போகங்களைத் துய்க்கக் கூடிய தேவர்களும் ஆவர்.

பலதேவர்-வாசுதேவர்க்கு மூத்தவர்.

'அவசர்ப்பிணி, உத்சர்ப்பிணி காலங்களில் முறையே ஒன்பது பலதேவர், வாசுதேவர், பிரதி வாசுதேவர்கள் உண்டாதல் முறை. அவர்களுள் பலதேவரும், வாசுதேவரும் ஒன்று பட்டுப் பிரதி வாசு தேவரை வென்று இராஜ்ய போகங்களை அடைந்து அனுபவித்தல் இயல்பு. அதனை இங்குக் கூறினார்'[18]

**பாட வேறுபாடு :** பொச்சாப்பு என்பதற்குப் பொய்ச்சாப்பு என்பது அரசுப் பதிப்பிலுள்ள பாட வேறுபாடு.

### அருக பதவி

**56. முச்சக் கரத்தோடு சித்தியும் எய்துவர்**
**நச்சறு காட்சி யவர்**

(இ-ள்) நச்சு அறு-சிறுமை இல்லாத, காட்சியவர்-நற்காட்சியினை உடையவர், முச்சக்கரத்தோடு-தேவேந்திர சக்கரம் என்ற தேவேந்திர பதவி, நரேந்திர சக்கரம் என்ற அரச பதவி, தர்ம சக்கரம் என்ற ஆருகத பதவி என்ற மூன்று பதவிகளைப் பெற்று, சக்கர போகங்களைத் துய்த்து, சித்தியும் (பிறகு) வீடுபேறும், எய்துவர்-அடைவர்—எ-று.

(சு-ரை) நற்காட்சியினை உடையவர், அரச பதவி, தேவ பதவி, ஆருகத பதவிகளைப் பெறுவர். பெற்ற பின் வீடு பேறும் அடையப் பெறுவர்.

---

18 விடுர் ஏ. தர்மசாமிர்ச்சிய சாஸ்திரியார் அருங்கலச் செப்புப் பதிப்பு, 1941. ப. 24

(வி-ரை) நற்காட்சி வழி கிடைக்கும் உயர் நிலைகளை 47ஆம் பாடல் முதல் 56 ஆம் பாடல் வரை விளக்கினர். மும்மணிகளில் முதலாவதான நற்காட்சியைப் பற்றி 3 முதல் 56 வரையுள்ள 53 பாக்களில் விரிவாக எடுத்துரைத்தனர். இனி அடுத்த தாகிய **நல்லறிவை** விளக்குவார்.

நற்காட்சி முற்றும்.

## நல்லறிவு

**57. பொருள்நின்ற பெற்றியைப் பொய்இன்று உணர்தல்
மருள்அறு நன்ஞான மாண்பு**

(இ-ள்) பொருள் நின்ற பெற்றியை-உலகிடத்து உள்ள எல்லா வகையான உயிர் முதலான பொருள்களின் தன்மைகளை, பொய் இன்று-பொய் இல்லாமல், உள்ளபடி உணர்தல்-அறிந்து கொள்ளுதலே, மருள் அறு நன்ஞான-மயக்கம் இல்லாத நல்லறிவின், மாண்பு-மாட்சிமை ஆகும்.

(க-ரை) உலகத்துப் பொருள்களின் இயல்புகளை உள்ளபடி உணர்தலே நல்லறிவின் இலக்கணம் ஆகும்.

(வி-ரை) நல்ஞானம் சம்யக் ஞானம் எனப்பெறும். இவ்வா றன்றி, அருக பரமன் அருளிய ஆகமங்களை அறிதல் 'நல்லறிவு' என விளக்கப் பெறும். அடுத்து வரும் பாடல்கள் இவ்வாறே விளக்கு கின்றன. **சிந்தாமணி** ஆசிரியர் 'மெய் வகை தெரிதல் ஞானம்' (கேமசரியார் இலம்பகம் 25) என்று இரண்டு விளக்கங்களையும் உள்ளடக்கினமை காண்க.

நன்ஞானம் என்பதற்கு 'நஞ்ஞானம்' என்ற பாடம் அரசுப் பதிப்பில் காணப்படுகிறது. ன் ஞ்-என்ற மெய்கள் தமிழில் அரு கிருந்து மயங்காமை பற்றி 'நஞ்ஞானம்' என்று பாடம் எழுதப் பட்டது போலும்.

## ஆகமங்கள்

**58. சரிதம், புராணம், அருத்தக் கியானம்
அரிதின் உரைப்பது நூல்**

(இ-ள்) சரிதம்-தனிச் சரிதமும், புராணம்-இருபத்து நான்கு தீர்த்தங்கரரை உள்ளிட்ட அறுபத்து மூவரைப் பற்றிய வரலாறும் (மகாபுராணம்), அருத்தக்கியானம்=நோன்புக் கதை முதலான அருத்தக்கியான கதைகளையும், அரிதின்-அருமையாக, உரைப்பது-

எடுத்துச் சொல்வது, நூல்-பிரதமானு யோகம் என்னும் ஆகமமாம்—எ,று.

(க-ரை) ஒருவரைப் பற்றிய சரிதம், மகாபுராணம், நோன்புக் கதை முதலான வற்றைக் கூறுவது நூலாம். இவற்றை நன்கு அறிவது நல்லறிவு ஆகும்.

(வி-ரை) **சரிதம்**-சீவக சரிதம், ஸ்ரீபால சரிதம் முதலியன. **புராணம்:** 63 சலாகா புருஷர்கள், அவர்களாவர்: தீர்த்தங்கரர்கள் 24, சக்கரவர்த்திகள் 12, பலதேவர் 9, வாசுதேவர் 9, பிரதி வாசு தேவர் 9 —ஆக அறுபத்து மூவர். இவர்கள் கதையைக் கூறும் நூல் புராணம் எனப்படும். நோன்புக் கதைகள் முதலான வற்றிற்கு அர்த்தக் ஞானம் என்று பெயர். இவை யனைத்தும் பொதுவாக பிரதமாநு யோகம்[19] எனப்படும்.

**59. உலகின் கிடக்கையும், ஊழி நிலையும்**
**மலைவு இன்று உரைப்பது நூல்**

(இ-ள்) உலகின் கிடக்கையும்-உலகின் அமைப்பையும், ஊழி நிலையும்-உத்சர்ப்பிணி, அவசர்ப்பிணி எனப்பெறும் ஊழிக்கால வேறுபாடுகளையும், மலைவு இன்று-மாறுபாடு இல்லாமல், உரைப்பது-சொல்லுவது, நூல்-கரணுநுயோகம் என்னும் பரமாகமமாகும்.

(க-ரை) உலகத்தின் அமைப்பையும், ஊழிக்கால வேறுபாடு களையும் கரணுநுயோகம் என்ற பரமாகமம் எடுத்துக் கூறும்,

(வி-ரை) **முடிவுடை அகலமாய், அதமொன்று ஏழ்முழவு**
**இடையின் ஐங் கயிறு அகன்று ஏழும் நீளமாய்,**
**அடியின் ஏழு அகன்று நீண்டு உயரம் ஈர் ஏழுமாய்**
**வடிவுடை உலகம் மூவாதம் சூழ்ந்ததே**

என்ற பாடல் (1214) தொடங்கி 1220ஆம் பாடல் வரை **மேருமந்தர புராணத்தில்** உலகக் கிடக்கை வருணிக்கப்படுகிறது.

காலம் பற்றி விரிவான செய்தி **மேருமந்தர புராணம்** 94ஆம் பாவில் கூறப்பெற்றுள்ளது.

---

19 'யோக்' என்றால் சூத்திரம் என்று பொருள். அநு என்றால் பிற்பாடு என்று பொருள். 'அநுயோக்' - அநுயோகம், என்று குறிக்கப்படுகிறது. அதற்குப் பொருள் 'பிற்பாடு எழுந்த சூத்திரம்' என்பதாம். தீர்த்தங்கரர்களுக்குப் பின்னால் எழுந்தன என்பதைக் குறிப்பிடவே நான்கு வேதங்களும் பிரதமாநுயோகம், கரணுநுயோகம், சரணுநுயோகம், திரவ்யாநுயோகம் என்று குறிக்கப்படு கின்றன, முக்குடை, 4-3.

கணம், வளி, உயிர்ப்பு, தோவம், இலவம், நாழி, மூழ்த்தம்
இணையின் நாள், பக்கம், திங்கள், இருதுவே, அயனம் ஆண்டு
பணை, உகம், பூவம், பல்லம், பவ்வமே அனந்தம் ஈருக்
காண முதற் காலபேதம் சொல்லுறின் காலம் இல்லை.

60. இல்லறம் ஏனைத் துறவறம் என்றுஇவற்றைப்
புல்ல உரைப்பது நூல்

(இ-ள்) இல்லறம்-மனை வாழ்க்கை ஆகிய சிராவக தருமம், ஏனை-ஏனைய, துறவறம்-மனை துறந்த வாழ்க்கை ஆகிய யதிதருமம், என்று-எனப்பட்ட, இவற்றை-இரண்டு அறங்களையும், புல்ல-பொருந்தும்படி, உரைப்பது நூல்-கூறுவது சரணுநுயோகம் என்னும் ஆகமமாகும்—எ.று.

(க-ரை) இல்லறத்தையும், துறவறத்தையும் தழுவி உரைப்பது சரணுநுயோக ஆகமத்தின் இயல்பாகும்.

(வி-ரை) பிரதமாநுயோகம் (58) என்பது முதல் வேத மாகவும், சரணுநுயோகம் (59) என்பது இரண்டாம் வேதமாகவும், சரணுநுயோகம் (60) என்பது மூன்றாவது வேதமாகவும் கொள்ளப் பெறும். திரவ்யாநு யோகம் (61) என்பது நான்காவது வேத மாகும். அடுத்த பாடல், நான்காவது வேதத்தை விளக்குகிறது.

61. கட்டொடு வீடும், உயிரும், பிற பொருளும்
முட்டுஇன்றிச் சொல்லுவது நூல்

(இ-ள்) கட்டொடு-உயிர்களிடத்து வினைகள் பிணிப்புறும் வழியையும், வீடும்-வினையறுத்து, வீடுபெறும் தன்மைகளையும், உயிரும்-உயிர்களின் இயல்புகளையும், பிறபொருளும்-உயிரல்லன வாகிய பிற பொருள்களின் இயல்புகளையும், முட்டு இன்றி-குறைவு இல்லாமல், சொல்லுவது-கூறுவது, நூல்-திரவ்யாநுயோகம் என்ற ஆகமமாம்—எ.று.

(க-ரை) கர்மங்கள் தட்டும் இயல்பையும், வீடு பேற்று நெறி களையும், உயிர் உள்ளனவற்றையும் குறைவின்றி முழுதுமாகச் சொல்லுவது திரவியாநுயோகத்தின் இயல்பு.

(வி-ரை) பிரதமாநுயோகம், கரணுநுயோகம், சரணுநு யோகம், திரவியாநுயோகம் என்ற நான்கும் நான்கு வேதமாம். இவையும் நூல் என்றே இங்கே (58-61) சுட்டப்படுகின்றன. பா, 9, 10 இலும் நூல் பற்றிக் கூறப்பெற்றன. இரண்டிற்கும்

இடையே உள்ள வேற்றுமை என்ன? வேற்றுமை இல்லை என்க. முன், நூலின் வெளிப்பாடும் பயனும் கூறப்பட்டன. இங்கே நூல் நுவலும் பொருள்களின் விரிவு கூறப்பட்டது. 'மறையொரு நான் குரைத்த திருவள்ளல் நீயே'' என வரும் **ஜீவசம்போதனை** பா வரியை நினைவு கூர்க.

நல்ஞானம் முற்றும்.

## நல்லொழுக்கம்

*62. காட்சி உடையார் வினைவரும் வாயிலின்*
*மீட்சியா நல்லொழுக்கு நன்று*

(இ-ள்) காட்சி உடையார்-நற்காட்சியுடையாரை, வினை-பிறவிக்கு வித்தான கர்மங்கள், வரும்-தன்னிடத்து வரும், வாயிலின்-ஊற்றின் (ஆஸ்வரம்) நின்றும், நன்று-நன்றாக, மீட்சி-மீளச் செய்வது, நல்லொழுக்கு-'சம்யக் சாரித்திரம்' என்ற நல்லொழுக்கு, ஆம்-ஆகும்—எ.று.

(க-ரை) பிறவிக்கு வேரான ஞான மறைப்பு கர்மம் முதலான கர்மங்கள் ஆத்மனை கட்டுவதினின்றும் விலக்குவது நன் நடக்கை என்ற நல்லொழுக்கமாம்.

(வி-ரை) நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்று மேலே (குறள் 2) முறைப்படுத்தியவர், காட்சி ஞானங்களின் இலக்கணத்தை கூறி முடித்த பின், ஒழுக்கத்தைக் கூற எடுத்துக் கொண்டு, ஒழுக்கத்தின் இலக்கணத்தை இக்குறளில் கூறினார். மீட்சி+ஆம் என்பது மீட்சியா என்று நின்றது.

## நல்லொழுக்க வகை

**63. குறைந்ததூஉம், முற்ற நிறைந்ததூஉம், ஆக**
**அறைந்தார் ஒழுக்கம் இரண்டு**

(இ-ள்) ஒழுக்கம்-நல்லொழுக்கத்தை, குறைந்ததூஉம்-அணு விரதம் என்றும், முற்ற நிறைந்ததூஉம்-மகாவிரதம் என்றும், ஆக இரண்டு-என்று கூறப் பெற்ற இரண்டு விரதங்களாக, அறைந்தார்-கூறினர் பெரியோர்—எ.று.

(க-ரை) சான்றோர், நல்லொழுக்கம், அணுவிரதம் என்றும், மகாவிரதம் என்றும் இரண்டு வகையினது என்று கூறினர்.

(வி-ரை) அணுவிரதம்-இல்லறத்தார்க்கு உரியது. மகாவிரதம்-துறவறத்தார்க்கு உரியது. அவை வரும் பாவில் விளக்கம் பெறும்.

## விரதங்கட்கு உரியார்

**64. நிறைந்தது இருடிகட்கு ஆகும்; மனையார்க்கு ஒழிந்தது; மூன்று வகைத்து**

(இ-ள்) நிறைந்தது-மகாவிரதம், இருடிகட்கு-துறவறத்தவசிகட்கு, ஆகும்-உரியது ஆகும்; ஒழிந்தது-குறைந்தது எனப் பெறும் அணுவிரதம், மூன்று வகைத்து-அணுவிரதம், குணவிரதம், சிட்சா விரதம் என மூவகைப் படும், மனையார்க்கு (ஆகும்)-அது இல்லறத்தார்க்கு உரியது ஆகும்—எ.று.

(க-ரை) துறவிகளுக்கு மகாவிரதம் உரியது. இல்லறத்தார்க்கு, அணுவிரதம், குணவிரதம், சிட்சாவிரதம் என்ற மூன்றும் உரியனவாம்.

(வி-ரை) இருடி-ரிஷி என்பதன் சிதைவு. இருடி என்பது 'திருவடி' என்று அரசுப் பதிப்பில் பாடமாக அமைந்துள்ளது பொருந்துவதாய் இல்லை.

## இல்லறத்தார் விரதம்

**65. அணுவதம் ஐந்தும், குணவதம் மூன்றும் உணர்நான்கு சிக்கா வதம்**

(இ-ள்) அணுவதம் ஐந்தும்-இல்லறத்தார்க்கு உரிய ஆகிய அணுவிரதம் ஐந்தாம், குணவதம் மூன்றும்-குணவிரதம் மூன்ரும்; சிக்கா வதம் நான்கு-சிட்சா விரதம் நான்காம், உணர்-என்று உணர்தல் வேண்டும்—எ.று.

(க-ரை) இல்லறத்தார்க்கு உரிய விரதங்களில் அணுவிரதம் ஐந்து பிரிவினது; குணவிரதம் மூன்று பிரிவினது; சிக்கா விரதம் நான்கு பிரிவினது.

(வி-ரை) **அணுவிரதம் ஐந்தாவன:** அகிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மசர்யம், பரிமித பரிக்கிரகம் என்பன.

**குணவிரதம் மூன்ருவன:** திக்விரதம், அனர்த்த தண்ட விரதம், போகோபபோக பரிமாண விரதம் என்பன.

**சிட்சா விரதம் நான்காவன:** சாமாயிகம், புரோஷ தோபவாசம், தேசாவ காசிகம், அதிதி சம்விபாகம் என்பன.

ஆக இப்பன்னிரண்டும் (5 + 3 + 4 = 12) இல்லறத்தார் பின்பற்ற வேண்டிய ஒழுக்கங்களாம். இவையனைத்தையும் நூலாசிரியர் பின் வரும் பாக்களில் விளக்குவர்.

மேருமந்தர புராணத்திலும் (356) இவ்வொழுக்கம் நற்றமிழில் நல்கப்பட்டிருக்கிறது.

## 1. அணுவிரதம்

**66. பெரிய கொலை, பொய், களவொடு, காமம்**
**பொருளை வரைதலோடு ஐந்து**

(இ-ள்) பெரிய கொலை-இயங்கும் உயிர்கள் எதனையும் கொல்லாமை, பொய்-பொய் கூறலை விலக்குதல், களவொடு-களவு செய்தலை விலக்குதல், காமம்-காமத்தை விலக்குதல், பொருளை வரைதலோடு-பொருளை விலக்குதல் என, ஐந்து-ஐந்து பிரிவினை உடையதாம் (அணுவிரதம்) - எ.று.

(க-ரை) கொல்லாமை, பொய்யாமை, களவாடாமை, காமமுருமை, பொருள் விரும்பாமை-என்ற ஐந்தும்இல்லறத்தார் பின்பற்றத் தக்க அணுவிரதங்களாம்.

(வி-ரை) வரைதல்-என்பதைக் கடை நிலைத் தீபக அணியாகக் கொண்டு, ஐந்தனேடும் சேர்த்துப் பொருள் காண்க. காமம் உருமை என்பது ஈண்டு, பிறன் ஒருவனின் மனையாளை இச்சியாமை-விரும்பாமை என்ற கருத்தினது. வரை-என்ற சொல்லிற்கு அளவு என்றும் பொருளுண்டு. நீக்குதல்-விலக்குதல் என்றும் பொருளுண்டு. பொருள் வரைதல்-பொருளை விலக்குதல் என்ற பொருளை உணர்த்தினது, மேலும் அளவான பொருளைப் போற்று; அளவற்ற பொருள் ஆசையை அகற்று என்ற கருத்தினது.

ஐரோப்பியர் அறிஞர் எல்லீஸ், 'On Domestic virtue' என்ற 'திருக்குறள்' உரை விளக்கப் பகுதியில், இவ் வருங்கலச் செப்பை எடுத்துக் காட்டி மொழி பெயர்ப்பும் தருகிரூர். அவர் தருவதாவது;[20]

The Slaughter of animals with perfect senses, false hood. theft, irregular desire, and the accumulation of wealth, which are the five heinous sins.

## கொல்லாமை

**67. இயங்குஉயிர் கொல்லாமை, ஏவாமை ஆகும்,**
**பெருங்கொலையின் மீட்சி எனல்**

20 Tirukkural Ellis Commentary, University of Madras Edn. 1955, P. 170

(இ-ள்) பெருங் கொலையின் மீட்சி--அகிம்சா அணுவிரதம் என்ற பெருங் கொலை செய்யாமை என்பது, இயங்கு உயிர்-ஓர் இடத்தை விட்டு மற்றோர் இடத்திற்குத் தானாகச் செல்லக் கூடிய ஈரறிவு முதலான உயிர்களைக், கொல்லாமை - கொல்லாதிருத்தலும், ஏவாமை-'கொன்று விடு' என்று ஏவாது இருத்தலும், ஆகும்-ஆம்.

(க-ரை) ஈரறிவு தொடங்கி உயிர்க்கும் உயிர்களைக் கொல்லாது இருத்தலும், கொல்லுமாறு பிறரை ஏவாது இருத்தலும் அகிம்சா அணுவிரதம் ஆகும்.

(வி-ரை) இல்லறத்தார் செடி கொடி காய்கள் முதலியன தாவரங்களைச் சமைத்துண்ணல் இயல்பு. ஆதலால், அவற்றை விலக்கவே 'பெரிய கொலை செய்யாதிருத்தல்' என்றார். கொலை செய்தல் மட்டுமே தவறு. செய்விக்க ஏவல் தவறல்லவே என்று கருதலும், பிறர்தம் கொலைச் செய்கைக்கு உடன்படுதலும் தவறு என்பது, 'கொல்லாமை, ஏவாமை' என்பனவற்றால் உணர்த்தப் பெற்றன. செய்தல், செய்வித்தல், உடன்படல் மூன்றும் கூடாது என்பதாம்.

தானே கொலை செய்தல் **கிரதம்** என்றும், பிறரைக் கொண்டு கொலை செய்வித்தல் **காரிதம்** என்றும், பிறர் தம் கொலைச் செயலுக்கு உடன்படுதல் **அனுபோகம்** என்றும் கூறப்படும். இம்மூன்று வழியிலும் விலகி இருத்தலே அகிம்சா அணுவிரதத்தின் குறிக் கோளாம்.

## அதிசாரம் ஐந்து

**68. அறுத்தல், அலைத்தல், அடைத்தலோடு, ஆர்த்தல்
இறப்பப் பொறை, இறப்புஓர் ஐந்து**

(இ-ள்) அறுத்தல்-விலங்குகளின் உறுப்புகளை அறுத்தல், அலைத் தல்-சாட்டை, தடி, கொம்பு, கல் முதலானவற்றால், அவற்றை அடித்துத் துன்புறுத்தல், அடைத்தலோடு-உணவு முதலாயன போடாமல் அடைத்து வைத்திருத்தல், ஆர்த்தல்-கயிறு, சங்கிலி, இரும்பு விலங்கு முதலானவற்றைக் கொண்டு கட்டி வைத்தல், இறப்பப் பொறை-அவை தாங்க முடியா வண்ணம், மிகுதியான சுமைகளை ஏற்றல் என்று, இறப்பு-அகிம்சாவிரதத்தை மீறல் என்ற **அதிசாரம்**, ஐந்து-ஐந்தாம்—எ.று.

(க-ரை) விலங்குகளின் உறுப்புகளை அறுத்தல், சாட்டை முத லானவற்றால் அவற்றை அடித்தல், உணவு இடாமல் ஓரிடத்தில் நெருங்க அடைத்து வைத்தல், ஆர்த்தல்-கயிறு முதலானவற்றால்

கட்டி வைத்தல், மிகுந்த சுமையை ஏற்றுதல்-என்ற இவ்வைந்தும் அகிம்சா விரதத்தினை மீறிய அதிசாரங்களாம்.

(வி-ரை) அதிசாரம்-தோஷம், இறப்பு-எல்லை கடத்தல், வரம்பு மீறல். அகிம்சா விரதத்தைக் கொண்டு, அறுத்தல் முதலான வற்றைச் செய்தால், விரதம் நசிந்து விடும். எனவே, இவை அதிசாரம், அல்லது மீறல் எனப்பட்டன. அதிசாரம் ஒன்றும் இல்லாமல், விரதம் பின்பற்றப் பட்டால்தான், நோன்பு நிறை வேறும், முழுமை பெறும். இல்லை எனில், காய்ச்சல் நீங்க மருந்து உண்டவன், மழையில் நனைந்ததாகவே முடியும். ஆதலால் விரதம் இருப்பின், மீறல் எது என அறிய வேண்டியது பற்றி அதிசாரங்கள் இங்குக் கூறப்பட்டன.

## பொய்யாமை

**69. பாவம் பொருந்துவன[21] சொல்லாமை ஏவாமை**
**ஆகும் இரண்டாம் வதம்**

(இ-ள்) பாவம் பொருந்துவன-பழிபாவத்திற்குக் காரணமான வற்றைச், சொல்லாமை-கூறாமையும், ஏவாமை-பிறரைச் சொல்லும் படி ஏவாமையும், இரண்டாம் விதம்-இரண்டாவது சத்யா அணு விரதம், ஆகும்-ஆகும்—எ.று,

(க-ரை) பாப உரைகளைப் பேசாமை, பிறரை ஏவிப் பேச வைக்காமை என்ற இரண்டும் சத்யாணு விரதங்களாம்.

(வி-ரை) சத்யம்-என்பதற்குப் பொய் பேசாமை என்பது மட்டும் பொருள் அன்று. பாபம் விளைக்கக் கூடியதை அது உண்மையே எனினும், சொன்னலோ, சொல்வித்தலோ அதுவும் பொய்யின்பாற் படும். உண்மை × பொய்மை என்பன, உண்மை × இல்லது என்ற அடிப்படையில் வற்புறுத்தப் படவில்லை. பாபம் தருவது, தராதது மனத்துட் கொண்டு பார்த்தால், பாபம் தரும் உண்மையும் சத்தியத் திற்கு எதிரானதே; பாபம் தராப் பொய்மையும் சத்தியமே.

**பொய்ம்மையும் வாய்ம்மை இடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்**

என்ற திருக்குறளையும் இங்கே நினைவில் கொள்க.

**70. குறளை, மறைவிரி, இல்லடை வெளவல்**
**புறவுரை, பொய் ஓலை, கேடு**

21 'பெரியன' என்பதும் பாடம்.

(இ-ள்) குறளை-பொருமையினுல் நல்ல நண்பர்களைப் பிரிக்கக் கோள் சொல்வது, மறை விரி-ஆணும், பெண்ணுமாய்த் தனித்து உறவாடுவோரின் மறை உறவாடல்களை உரையாடல்களை ஊர் அம்பலத்துரைப்பது, இல்லடை வெளவல்-பிறரால் தன் இடத்தில் கொண்டு வைக்கப்பட்ட பொருள்களைக் கவர்ந்து கொள்வது, புற உரை-இல்லாத ஒன்றைப் புனைந்துரைப்பது, பொய்யோலை-மற்றவர் கெடும் பொருட்டுப் பொய்யாக எழுதிப் பிறரைக் கெடுப்பது ஆகியன, கேடு-சத்தியா அணுவிரதத்தைக் கெடுப்பனவாம்—எ.று.

(க-ரை) கோள் சொல்லுதல், இரகசியங்களைப் பரகசியம் ஆக்குதல், பிறர் பொருள் கவருதல், புற உரை கூறுதல், பொய்க் கடிதம் எழுதுதல் என்பன உண்மை நோன்பைக் கெடுக்கும் இறப்பு களாம்—வரம்பு மீறல்களாம்.

(வி-ரை) அக்காலத்தும் கூட 'மொட்டைக் கடுதாசி' எழுதிப் போடும் கெட்ட வழக்கும் இருந்தது என்பதைப் பொய்யோலை என்பது காட்டுகிறது. மறை விரி, இல்லடை வெளவல், பொய் ஓலை என்பன திருவள்ளுவராலும் கூறப் பெறும் செய்திகளாம்.

### களவாடாமை

**71. கொடாதது கொள்ளாமை ஏவாமை ஆகும்**
***கொடாதது கொள்ளா வதம்***

(இ-ள்) கொடாதது கொள்ளாமை-பிறர் ஒருவர் தாமே கொடுக்காமல் போற்றும் பொருளைக், கவர்ந்து கொள்ளாதிருத்த லும், ஏவாமை-தானே நேரில் செய்யாமல் பிறன் ஒருவனைக் கொண்டு திருடி வருமாறு ஏவாமல் இருத்தலும், கொடாதது கொள்ளாமை-கொடுக்காததைக் கொள்ளாமை அல்லது கள்ளாமை' வதம்-களவாடாமை என்ற விரதம் ஆகும்.

(க-ரை) பிறர் கொடுக்காமல் அவர் பொருளைக் கொள்ளாமை யும் பிறர் ஒருவரைத் திருட ஏவாமையும், கள்ளாமை என்ற விரத மாம்.

(வி-ரை) அஸ்தேயாணு விரதம் எனவும் இது குறிக்கப்படும்.

**72. குறைவு, நிறைகோடல், கொள்ளைக் கவர்தல்**
***மறைய விராதல்[22] இறப்பு***

(இ-ள்) குறைவு-(அளவு குறைந்த மரக்கால், படி, தராசு, எடைக்கல் முதலானவற்ருல் பிறருக்குக் குறைத்து அளந்து கொடுப் பதும், நிறைகோடல்-பிறரிடமிருந்து மிகுதியாக அளந்து கொள்வ

22 விருதல் என்பதும் பாடம்.

தும், கொள்ளைக் கவர்தல்-(அரசாங்கச் சட்டத்திற்கு மீறிக்) கொள்ளை அடித்துப் பொருளைச் சேர்த்தலும், மறைய விராதல்-(பொன்னுடன் வெள்ளியையும், பாலுடன் நீரையும், உப்புடன் மணலையும், நெய்யுடன் எண்ணெயையும், நெல்லுடன் பதரையும் இவை போன்ற பலவற்றை) கலப்படம் செய்வதும், இறப்பு-களவா டாமைக்கு அதிசாரம் ஆகும்—எ.று.

(க-ரை) கொடுக்கும் போது குறைத்தும், கொள்ளும் போது மிகுத்தும் பெறுதல், கொள்ளை அடித்தல், கலப்படம் செய்தல் ஆகி யன கள்ளாமை வதத்தின் இறப்புகளாம்.

(வி-ரை) 'கொள்வதூஉம் மிகை கொளாது; கொடுப்பதூஉம் குறைபடாது' என வரும் **பட்டினப் பாலை** வரியும் இங்கே எண்ணத் தக்கது. கொள்ளையிடும் எயினர் கூட்டத்தைச் சங்க இலக்கியம் காட்டும் பாலைநில மக்கள் இயல்பாக அறிகிறோம். அது கண்டிக்கப் படுவது கருதத் தக்கது. கலப்படம் செய்தல் அக்காலத்தும் உண்டு போலும்.

**73. கள்ளரொடு கூடல், கள்ளர் கொணர்பொருளை**
**உள்ளினர் கோடலோடு ஐந்து**

(இ-ள்) கள்ளரொடு கூடல்-திருடர்களுடன் சேர்ந்து ஒத் துழைத்தல், கள்ளர் கொணர் பொருளை-திருடர் திருடி வரும் பொருளை, உள்ளினர்-விலை குறைவாக உள்ளது என எண்ணியவராக, கோடலோடு-அவற்றை வாங்குதல் என்ற இரண்டுடன் முதற் பாட லில் சொல்லப் பெற்ற மூன்றையும் சேர்ந்து ஐந்து-அதிசாரங்கள் ஐந்தாகும்—எ.று.

(க-ரை) திருடர்களுடன் சேர்ந்து அவர் திருட்டிற்கு உட னிருந்து உதவுதல், திருட்டுப் பொருள் விலை குறைவாக இருக்கிறது என்று வாங்குதல் இரண்டும் அதிசாரங்களாம்.

(வி-ரை) திருட்டுப் பொருளை விலை குறைவாகக் கொடுத்து வாங்குவது இக்காலத்து பரவிய பழக்கம். அது திருட்டிற்குச் சமம் என்பது இப்பாடலால் புலனுகிறது.

அரசுப் பதிப்பில், 'கள்ளரோடு கூறல்' எனவும், 'குணர் பொருள்' எனவும் பாடபேதங்கள் காணப்படுகின்றன. அவை பொருந்துவனவாகத் தோன்றவில்லை.

### காமம் வரைதல்

**74. விதித்த வழிஇன்றிக் காமம் நுகர்தல்**
**மதிப்பின்மை நான்காம் வதம்**

(இ-ள்) விதித்த வழி இன்றி-தாய், தந்தை, ஆசான், சுற்றம் போன்றோர் முன்னிலையில் மணந்து கொண்ட தன் மனைவியிடத் தல்லது-பிற பெண்டிரிடத்து, காமம்-இன்பம், நுகர்தல்-துய்த்தலை, மதிப்பின்மை-மனத்தாலும் மதித்து நினைக்காமை, நான்காம் வதம்-பிறனில் விழையாமை என்னும் நான்காம் விரதம் ஆகும்—எ.று.

(க-ரை) தன் மனைவி இடத்தல்லாது, பிறர் பெண்டிரை விரும் பாமையே நான்காம் அணு விரதமாம்.

(வி-ரை) திருவள்ளுவர், பிறனில் விழையாமை என்றே தனி அதிகாரம் வகுத்தமை காண்க.

> பிறன் பொருளால் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
> அறம்பொருள் கண்டார்கள் இல் (146)

பிறன் மனைவியை அடையும்போது ஏற்படும் கொடிய அச்சங்களை **நாலடியார்** (83) அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

> புக்க இடத்தச்சம்; போதரும் போதுஅச்சம்;
> துய்க்கும் இடத்தச்சம்; தோன்றாமல் காப்பச்சம்
> எக்காலும் அச்சம் தருமால; எவன்கொலோ
> உட்கான் பிறனில் புகல்

மற்றவன் மனைவியை விரும்பியவன் மறுமையில் நரகத் துன்பத்தில் வீழ்ந்து அல்லல் படுவான் என்று சீவக சிந்தாமணி (2769) எச்சரிக் கிறது.

> காதலான் கரிந்துநையக் கடியவே கனிந்து கன்றி
> ஏதிலான் தாரம் நம்பி, எளிது என இறந்த பாவத்து
> ஊதுலை உருக வெந்து ஒள்ளழல் செப்புப் பாவை
> ஆ! தகாது என்னப் புல்லி அலறுமால்; யானை வேந்தே!

ஒருவன் அற நெஞ்சினன்; அறச் செயலினன்; சான்றோர்க்குரிய திறமையை உடையவன், என்றெல்லாம் புகழ் பெற்றிருந்தான். ஒரே ஒரு வழியில் அவனுக்கு இகழ் ஒன்று வந்து சேர்ந்தது. **'மற்றவன் மனைவியை விரும்பியவன்'** என்பதே, அவ்விகழ்-பழி. இப் பழி வந்த பிறகு, அவன் பெற்ற அனைத்துப் பெருமைகளும் பழிகளா யின. இக்கருத்தை அறநெறிச்சாரப் பாடல் ஒன்று (150) தெளி வாக்குகிறது.

> அறனும் அறன்அறிந்த செய்கையும் சான்றோர்
> திறனுடையன் என்றுரைக்கும் தேசும் - பிறனில்
> பிழைத்தான் எனப்பிறரால் பேசப் படுமேல்
> இழுக்காம் ஒருங்கே இவை

'பிறனில் விழைவோர் கிளையொடுங் கெடுப' என்பது **தண்டி அலங்கார** மேற்கோள் பாடல். இராமன் மனைவி ஆகிய சீதையைக் கவர்ந்த இராவணன்-தன் சுற்றத்தொடும் கெட்டு அழிந்தமை இதற்குச் சான்று.

## 75. அனங்க விளையாட்டு, வேட்கை மிகுதி மனங்கொள் விலார் இணை கேடு

(இ-ள்) அனங்க விளையாட்டு-காம வெறியால், பெண் வழி அல்லாது, பிற வழிகளில் அங்கம் இல்லாத இடத்தும் காம விளையாட்டு விளையாடுவதும், வேட்கை மிகுதி-காம வெறி பிடித்து அலைவதும், மனம் கொள்வு இலார்-மனம் ஒன்றக் கூடாமல் காசுக்காக உடலை விற்கும் வேசியரிடத்து, இணை-இணைவதும், கேடு-பிரம்ம சர்யாஹு விரதத்திற்குக் கேடுகளாம்-அதிசாரங்களாம்—எ.று.

(க-ரை) பெண் வழி அன்றிப் பிற வழிகளில் காமம் நுகர்தல், காம நினைவில் மூழ்கிக் கிடத்தல், வேசியரோடு உறவு கொள்ளல் என்ற மூன்றும் பிரம்மசர்ய விரதத்தைக் கெடுப்பனவாம்.

(வி-ரை) பிறர் மனைவியிடத்துத்தானே பிறழ்பட ஒழுகுதல் ஆகாது-வேறு வழியில் இன்பம் பெற்றால் என்ன என்று கருதுவார்க்கு இப்பா எழுதப் பட்டது. மனைவி வழி பெற்ற இன்பமே நெறியானது; மற்றவை எதுவாயினும் நெறியற்றது. காம நினைவில் மூழ்குவது கூட முறையற்றது. வேசையர் உறவு, நெஞ்சுவந்த உறவாக இருக்காது என்பதை 'மனம் கொள்வு இல்லார் இணை' என்று ஆசிரியர் காட்டினர். **நாலடியாரும்,**

> **உள்ளம் ஒருவன் உழையதா ஒண்ணுதலார்**
> **கள்ளத்தாற் செய்யும் கருத்து'** —என்றார். (380)

ஒருவனுக்கு ஒரு வேசியிடம் பழக்கம் ஏற்பட்டது. இருவரும் நெருங்கிப் பழகுகிறார்கள். பார்ப்பவரெல்லாம் வியக்கும் அளவில் இருவரிடையே நெருக்கம் இருந்தது. 'பிரியேன்; பிரியின் உயிர் தரியேன்' என்றெல்லாம் அந்த மலர்விழி மாது அவனைப் பார்த்து அடிக்கடி சொல்லுவாள். இடையில் எதிர்பாரா வகையில், அவனது வாணிகத்தில் பேரிழப்பு நேர்ந்தது. அவன் மிக நொடித்துப் போனான். வறுமை அவனை வாட்டியது. இல்லாமை தாளாமல் இருவரும் மலையேறிக் குதித்து உயிர் துறக்க முடிவு செய்தார்கள். ஒரு நாளும் குறித்தார்கள். தற்கொலை செய்யப் புறப்பட வேண்டிய நேரமும் வந்தது. அவன் ஆயத்தம் ஆகி விட்டான். அவளும் ஆயத்தம் ஆகி விட்டாள். அவன் முன்னே தேம்பித் தேம்பி அழுதாள். 'ஏன் அழுகிறாய்' என்று அவன் கேட்டான். அதற்கவள்

சொன்னாள்: ''என் காலைப் பார்த்தீர்களா? வாதத்தால் கால் வீங்கி விட்டது. நான் உங்களுடன் வரவே விரும்புகிறேன். ஆனால் இந்த வீக்கங் கொண்ட காலோடு எப்படி மலை மீது ஏறி வருவேன்?'' என்று மீண்டும் தேம்பி அழுதாள். வேசியின் நஞ்சு உள்ளத்தை **நாலடிப் பாடல்** அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

> **அம்கோட்டு அகல் அல்குல் ஆயிழையாள் 'நம்மோடு**
> **செங்கோடு பாய்துமே' என்றாள் மன்-செங்கோட்டின்**
> **மேல்காணம் இன்மையான் மேவாது ஒழிந்தாளே**
> **காற்கால்நோய் காட்டிக் கலுழ்ந்து**

காணம்-பொற்காசு (நாலடியார்-372)

## சோரம் போதல்

**76. பிறர்மனை கோடல் பிறர்க்குச் செல்வாளைத்**
**திறவதில் கோடலோடு ஐந்து**

(இ-ள்) பிறர் மனை கோடல்-பிறர் மனைவியைக் கைக் கொள்ளுதலும், பிறர்க்குச் செல்வாளை-தன்னை மணந்தவனை விட்டு விட்டுப் பிறரிடம் விரும்பிச் சோரம் போகிறவள், செல்வத்தை விரும்பி பலரிடமும் சென்று சேரும் பரத்தை, கணவனை இழந்த விதவை, ஆகியோருடன், திறவதில் கோடலோடு-வல்லமையினால் உறவு கொள்ளுதலோடு, ஐந்து-ஐந்து அதிசாரங்களாம்—எ.று.

(கு-ரை) பிறருடைய மனைவியுடன் உறவு கொள்ளுதல், விதவை முதலானவரிடம் உறவு கொள்ளுதல் என்ற இரண்டும் அதிசாரங்களாம்.

(வி-ரை) பிறர்க்குச் செல்வாள்-என்பது அரசுப் பதிப்பில் விளக்கப்பட்டவாறு விளக்கப்பட்டது.

பிறர் மணம் கோடல்—என்பது அரசுப் பதிப்புப் பாடம், இப் பாடத்திற்குத் தக, 'பிறருக்குப் பண்ணுகிற கல்லியாணத்தினை விலக்கித் தான் கொள்ளுகிறதும்' என்று உரை இயற்றப் பெற்றிருக்கிறது.

## பொருள் வரைதல்

**77. பொருள் வரைந்து** ஆசை சுருக்கி[23] **ஏவாமை**
**இருள்தீர்ந்தார்க்(கு) ஐந்தாம் வதம்**

23 'சுருக்கல் என்பதும் பாடம்'

ஆகாமல் குறைத்து, ஏவாமை-பிறர் உழைப்பைக் கொண்டு தனக்கு வேண்டியவற்றிற்கும் மேலாகப் பொருளைப் பெருக்கிக் கொள்ளாது, இருத்தலே, இருள் தீர்ந்தார்க்கு-அறியாமையை அகற்றிய இல்லறத் தார்க்குரிய, ஐந்தாம் வதம்-மிகு பொருள் விரும்பாமை என்ற ஐந்தாவது விரதம் ஆகும்—எ.று.

(க-ரை) நிலம், வீடு முதலான பொருள்களைத் தேவையான அளவிற்குப் போற்றி, ஆசை சுருக்கி-பொருள் பெருக்கலில் பேராசை பெருகாமல் அடக்கி, அப்பொருளைப் பெருக்கப் பிறரை ஏவல் கொள் ளாமல் இருந்து வாழ்வதே மிகு பொருள் விரும்பாமை என்ற ஐந் தாம் விரதத்தின் இலக்கணமாம்.

(வி-ரை) மிகுபொருள் விரும்பாமை-பரிமித பரிக்கிரக விரதம் எனப்படும். நிலம், வீடு முதலான பொருள்கள் வருமாறு: 1. ஷேத்திரம்(விளை நிலம்) 2. வாஸ்து-(வீடு முதலியன) 3. ஹிரண் யம் (வெள்ளி முதலானவை) 4. ஸ்வர்ணம் (பொன்) 5. தனம் (வாகனம் முதலாயின) 6. தான்யம் (நெல் முதலான கூலங்கள்) 7. தாஸி (பணிப்பெண்) 8. தாஸன் (பணி ஆள்) 9. குப்யம் (உடை, சந்தனம் முதலாயன) 10. பாண்டம்-இவற்றைத் தேவையான அள விற்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது. இப்பொருள்களை இவ் வளவுக்கு மேல் வைத்துக் கொள்வதில்லை என்று வரையறுத்தலும், பிறரைக் கொண்டு பெருக்கிக் கொள்ளாமையும் மிகுபொருள் விரும்பாமை எனப்படும்.

**78. இயக்கமோடு ஈட்டம் பெருக்கலும், லோபம்
வியப்பு மிகைக் கோடலோடு ஐந்து**

(இ-ள்) இயக்கமோடு-கால் நடைகளின் துன்பம் அறியாமல், அவற்றின் மீது அமர்ந்து சவாரி செய்தலும், ஈட்டம் பெருக்கல்-(கூலங்களை-தானியங்களை) நிரம்பச் சேர்த்து, அவற்றில் புழுக்கள் உண்டாகி நெளியும் அளவிற்குப் பிறர்க்குக் கொடுக்காமல் பெருக்க லும், லோபம்-எளியார்க்கு' ஈயாதக் கருமித்தனமும், வியப்பு-பிறர் உடைமை கண்டு வியந்து பொறாமை கொள்ளுதலும், மிகைக் கோட லோடு-தன்னால் முடிக்க இயலாத செயலினைப் பொருளாசை கொண்டு மேற் கொள்ளுதலும், ஐந்து-மிகு பொருள் விரும்பா மையை நசிக்கச் செய்யும் ஐந்து அதிசாரங்களாம்—எ.று.

(க-ரை) இயக்கம்-குதிரை முதலானவற்றின் மேல் சவாரி செய்தல், தான்யங்களில் புழுக்கள் உண்டாகும் அளவிற்கு வாங்கிச்

சேர்த்தல், ஈயாதிருத்தல், பிறர் செல்வப் பெருக்கினைக் கண்டு பொறுமைப்படுதல், பொருளாசையால் இயலாத பணிகளை ஏற்றுக் கொள்ளுதல் என்ற ஐந்தும் மிகு பொருள் விரும்பாமைக்குரிய தோஷங்களாம்.

(வி-ரை) இவ்வைந்தும் அதிவாகனம், சங்கிரகம், அதிவிஸ்மயம், அதிலோபம், அதிபார வகனம் என்று அழைக்கப் பெறும்.

மனையார்க்குரிய மூன்று விரதங்களின் பெயர்களைக் கூறி (65) அவற்றுள் முதலாவதான அணுவிரதம் எவை என விரிவாக (66-78) விளக்கினர். இனி, வரும் பாட்டில், அணுவிரதங்களின் சிறப்பை எடுத்து மொழிவார்.

## அணுவிரதச் சிறப்பு

**79. ஐஐந்து இறப்பு இகந்த, ஐந்து வதங்களும்**
**செய்யும் சுவர்க்கச் சுகம்**

(இ-ள்) ஐயைந்து இறப்பு-மேலே கூறிய இருபத்தைந்து அதிசாரங்களும், இகந்து-நீங்கிய, ஐந்து வதங்களும்-பெரிய கொலை, பொய், களவு, காமம், பொருள் வரைதல் என்ற ஐந்து அணு விரதங்களும், சுவர்க்கச் சுகம்-சொர்க்க சுகத்தை, செய்யும்-கொடுக்கும்—எ.று.

(க-ரை) அதிசாரங்கள் அகன்ற-அணு விரதங்களைப் பின்பற்றல் சொர்க்க சுகத்தை நல்கும்.

(வி-ரை) 'சுவர்க்கச் சுகம், அழகான தொடர். அதனல் மண்ணிலேயே விண்ணைக் காண முடியும் என்கிருர். ஒருவன் இவ்வுலக வாழ்வில், இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டுக் கொண்டே சுவர்க்க சுகத்தைப் பெற முடியும் என்பதை இப்பாவால் உணர்த்தினர்.

## அணுவிரதங்களால் சிறப்பு அடைந்தவர்கள்

**80. சட்டி, தனதேவன், பாரிசன், நீலியும்**
**பெற்ருர், சயனும், சிறப்பு**

(இ-ள்) சட்டி-அணு விரதங்களுள் முதலாவதான கொல்லாமைக்குச் **சட்டிப் புலையன்** என்ற **யம பாலனும்**, தனதேவன்-இரண்டாவதான பொய்யாமைக்குத் **தனதேவனும்**, பாரிசன்-மூன்ருவதான களவாடமைக்குப் **பாரிசேண குமாரனும்**, நீலியும்-பிரம்மசர்யத்திற்கு **நீல நங்கையும்**, சயனும்-ஐந்தாவதான மிகு பொருள் விரும்பா

மைக்குச் **செயகுமாரனும்**, சிறப்பு-வேந்தர்களாலும், மாந்தர்களாலும் சிறப்பினைப், பெற்றார்-பெற்றவர்கள் ஆவார்கள்—எ.று.

(க-ரை) கொல்லாமைக்குச் சட்டிப் புலையனும், பொய்யாமைக்குத் தனதேவனும், களவாடாமைக்குப் பாரிசேண குமாரனும், பிரம்மசர்யத்திற்கு நீல நங்கையும், மிகு பொருள் விரும்பாமைக்குச் செயகுமாரனும், அணு விரதங்களைப் பிழையாமல் பின் பற்றிப் பெருமை பெற்றவர்களாவர்.

## விரதமின்மையால் கேடடைந்தவர்கள்

81. **தனசிரி, சத்தியன், தாபதன், காப்பான்**
**நனைதாடி வெண்ணெய் உரை**

(இ-ள்) தனகிரி—கொலையினால், **தனசிரீயும்**, சத்தியன்-பொய்யினால் **சத்தியகோடன்** என்னும் அமைச்சனும், தாபதன்-களவினால் **உறித்தாபசனும்**, காப்பான்-பிறர் மனைவியைக் காமத்தினால் விரும்பிக் கெட்ட **தளவரனும்**, நனைதாடி வெண்ணெய்—மிகுபொருள் விரும்பியதால் **தாடி வெண்ணெக்காரனும்**, உரை-ஆகிய இவர்கள் விரதங்களைப் பின்பற்றாமையால் கேடு அடைந்தவர்களாவார்—எ.று.

(க-ரை) தனசிரீ கொலைக் குற்றத்தாலும், சத்திய கோடன் பொய்க் குற்றத்தாலும், உறித்தாபசன் திருட்டுக் குற்றத்தாலும், தளவரன் காமக் குற்றத்தாலும், தாடி வெண்ணெய்க்காரன் பேராசைக் குற்றத்தாலும் கேடு அடைந்தவர்களாவர்.

(வி-ரை) இவ்வரலாறுகள் மேருமந்தரப் புராணத்திலும் நரி விருதத்திலும் (28-29) கூறப் பெற்றுள்ளன.

## மூலகுணம் எட்டு

82. **கள்ளொடு, தேன், புலைசு, உண்ணாமை, ஐவதமும்**
**தெள்ளுங்கால் மூல குணம்**

(இ-ள்) கள்ளொடு-கள்ளுண்ணாமை, தேன்-தேன், உண்ணாமை புலைசு உண்ணாமை-மாமிசம் உண்ணாமை என்ற மூன்று குணங்களையும், ஐவதம்-முன் கூறிய ஐந்து அணுவிரதங்களுடன் சேர்க்க தெள்ளுங்கால்-ஆராயும் இடத்து மூன்றும் ஐந்தும் சேர்ந்த எட்டுக் குணங்களும், மூல குணம்-இல்லறத்தார்க்கு வேண்டிய இன்றியமையாக் குணங்கள் குணங்களாம்—எ.று.

(க-ரை) கள், தேன், புலால் என்ற முக்குணங்களுடன், முன் கண்ட—ஐந்து அணு விரதங்களையும் சேர்க்க எட்டும், மூல குணங்கள் ஆகும்.

(வி-ரை) தவருமல் பின் பற்றத் தக்கது என்பதால் மூல குணம் எனப்பட்டது. மூலம்-அடிப்படை, இம்மூன்றும் மது, மத்ய, மாம்ச நிவர்த்தி என்று கூறப் பெறும். தேன் பருகல் ஆகாது என்பது சிலப்பதிகாரத்தில் கவுந்தியடிகள் கூற்ருலும் உணரலாம்.

## 2. குணவிரதம்

### 1. திசை விரதங்கள்

**83. வரைப திசைபத்தும் வாழும் அளவும்**
**புரைவு இல் திசைவிரதம் என்**

(இ-ள்) வாழும் அளவும்-வாழ்நாள் முழுமையும், திசைபத்தும்-கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, என்ற நான்கு திசைகளுடன் கோண திசைகள் எனப் பெறும் வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென் மேற்கு ஆகிய நான்கு திசைகளும், கீழும், மேலும் என்ற இரண்டு திசைகளும் சேர்த்துப் பத்துத் திசைகளிலும், வரைப-குறிப்பிட்ட எல்லையைத் தாண்டிச் செல்லுவதில்லை என்று வரை யறை செய்து கொள்ளுவது, புரைவு இல்-குற்றம் அற்ற, திசை விரதம்-'திக்'விரதம், என்-என்று கூறப் பெறும்—எ.று.

(க-ரை) பத்துத் திசைகளிலும் இவ்வளவு தூரத்திற்கு மேல் செல்லுவதில்லை என்று வரையறை செய்து கொள்ளுதல் திசை விரதமாம்.

(வி-ரை) குணவிரதம் மூன்றினுள், திசை விரதமும் ஒன்று.

### திசை விரதங்கள் எல்லைகள்

**84. ஆறும், மலையும், கடலும், அடவியும்**
**கூறுப எல்லை அதற்கு**

(இ-ள்) அதற்கு-மேற்கண்ட திசை விரதத்திற்கு, ஆறும்-ஆற்றையும், மலையும்-மலையையும், கடலும்-கடலையும், அடவியும்-காட்டையும், எல்லை கூறுப-எல்லையாகக் கூறுவர்.

(க-ரை) திசை விரதத்தை மேற் கொள்ளுகையில், ஆறு, மலை, கடல், காடு இவற்றை எல்லையாக வைத்து மேற் கொள்ளுவர்.

(வி-ரை) ஒவ்வொரு திசையிலும் இன்ன ஆற்றைக் கடந்து செல்லுவதில்லை என்றும், இன்ன மலையைத் தாண்டிச் செல்லுவ தில்லை என்றும், இன்ன கடலைக் கடந்து செல்லுவதில்லை என்றும்,

இன்ன காட்டிற்கப்பால் செல்லுவதில்லை என்றும் வரம்பு கட்டிக் கொள்ளுதல்.

## மகாவிரதம்

**85. எல்லைப் புறத்தமைந்த பாவம் ஈண்டாமையின்
சொல்லுப மாவதம் என்று**

(இ-ள்) எல்லைப் புறத்து-(அணு விரதங்களாய, பெரிய கொலை, பொய், களவு, காமம், பொருளை வரைதல் என்பவற்றில், அளவான காமமும், அளவான பொருள் கொள்ளலும், சிறிய கொலைகளும் அனுமதிக்கப் பெற்றன. இவற்றிற்கு ஓர் எல்லை-அளவு-மிதம் வகுக்கப்பட்டன.) இவ்வெல்லைகளுக்கு உள்ளாகவும், புறம்பாகவும், பாவம் ஈண்டாமையின்-ஐந்து வகை பாபங்களும் தனக்குச் சேராமையினால், மாவதம் என்று சொல்லுப-மகா விரதம் என்று ஆன்றோர் சொல்லுவர்—எ.று.

(க-ரை) சிறிய அளவாகக் கூட ஐந்து பாபங்களைச் செய்யாமையே மகாவிரதம் எனப் பெறும்.

(வி-ரை) ஐவகைப் பாபங்கள்: கொலை, பொய், களவு, காமம், பொருளாசை. இவற்றைச் சிறிதும் செய்யாதிருத்தல் மகாவிரதம் எனப்பட்டது. சிறிய கொலை முதலிய அணுவிரதங்களான் அனுமதிக்கப் பெற்றன. இவற்றை ஓர் எல்லை வரை செய்யலாம் என்ற கருத்தினது, இவ்வெல்லையும், மகா விரதத்தில் ஒப்புக் கொள்ளப் படுவதில்லை. இதனையே **'எல்லைப் புறத்தமைந்த'** என்ற தொடர் உணர்த்துகிறது. இவ்வாறு அன்றி வேறு வழியில் அரசுப் பதிப்பாளரும், பிறரும் உரைப்பர். சிறிய கொலை-ஓரறிவு உயிர்களைத் துன்புறுத்தல்.

**86. சிறிய கொலை, பொய், களவொடு, காமம்
பொருளைத் துறத்தலோடு ஐந்து**

(இ-ள்) சிறிய கொலை-ஓர் அறிவு உயிர்களைத் துன்புறுத்தல், பொய்-பொய் பேசுதல், களவொடு-திருடுதல், காமம்-பெண் மோகம், பொருள்-பொருள் விரும்பல், துறத்தலோடு ஐந்து-என்ற ஐந்தையும் முற்றத் துறத்தல் மகா விரதங்களாம்—எ.று.

(க-ரை) கொலை, பொய், களவு, காமம், பொருள் என்ற ஐந்தையும் சற்றும் விரும்பாமல் முற்றும் துறத்தலே மகா விரத இலக்கணமாம்.

## முற்றும் துறத்தல்

**87. கொலைமுதலா ஐந்தினையும் முற்றத் துறத்தல்**
**தலையாய மாவத மாம்**

(இ-ள்) கொலை முதலா-மேற் கூறிய கொலை முதலான ஐந்தினை யும்-ஐந்து பாபங்களையும், முற்றத் துறத்தல்-முழுவதுமாக அகற்று தல், தலையாய-முதன்மை வாய்ந்த மாவதமாம்-மாவிரதங்களாம் —எ.று.

(க-ரை) கொலை, பொய், களவு, காமம், பொருள் விரும்பல் என்பவற்றை, முற்றும் துறத்தலே மகா விரதமாம்.

(வி-ரை) மகாவிரதங்களை இல்லறத்தார் பின்பற்றுதல் அரிது. ஆதலால்தான், அவை துறவிக்கே உரியன என முன்பே சுட்டப் பெற்றன.

எல்லீஸ் வழங்கும் ஆங்கில ஆக்கம்: To refrain wholly from the practice of the five heinous sins, of which the destruction of creatures is the chief- is perfect devotion.[24]

## திசை விரதத்தின் இறப்பு

**88. இடம் பெருக்கல், எல்லை மறத்தல் கீழ் மேலோடு**
**உடன்இறுத்தல், பக்கம் இறப்பு,**

(இ-ள்) இடம் பருக்கல்-பொருள் திரட்டும் பொருட்டு, இன்ன எல்லை வரை பொருள் திரட்டுவேன் என்று மேற் கொண்ட திசை விரதத்தை மீறி, மேலும் விரிந்து தான் குறித்த **இடங்களுடன் பெருக்கிக் கொள்ளுதலும்**, எல்லை மறத்தல்-குறிப்பிட்ட எல்லையைக் கடவேன் என்று மேற்கொண்ட எல்லைகளை **மறந்து விடுதலும்**, கீழ் இறுத்தல்—தன் நன்செய் புன்செய்களுக்குப் பயன் படுத்தேன் என்று கூறி விடுத்திருந்த கிணறு, ஏரி போன்றனவற்றில் **கீழ் இறங்கிப் பயன் படுத்தலும்**, மேல் இறுத்தல்-வேண்டா என வரை யறுத்து விலக்கி இருந்த **மலைகளின் மேல் ஏறுதலும்**, பக்கம் இறுத்தல்- பக்கத் திசைகளில் குறிப்பிட்ட **எல்லைகளை மீறிச் செல்லுதல்** என்ற **ஐந்தும்**, இறப்பு-திசை விரதங்களை மீறிய அதிசாரங்களாம்—எ.று.

(க-ரை) இடங்களைப் பெருக்கிக் கொள்ளுதல், வரையறுத்துக் கொண்ட எல்லைகளைத் தாமே மறந்து விடுதல், கீழ், மேல், பக்கங் களில் மேற்கொண்டிருந்த திசை விரத எல்லைகளைத் தாமே மீறல் என்பன அதிசாரங்களாம்.

24 Observances of Yeati, P. 171

(வி—ரை) இறுத்தல் என்பதைத் தீவகமாகக் கொண்டு, கீழ், மேல், பக்கம் என்பவற்றிற்கும் கூட்டிக் கொள்க. இவை பின் வருமாறும் குறிக்கப் பெறும்:

1. **க்ஷேத்திர விருத்தி:** குறிப்பிட்ட எல்லையைப் பெருக்கிக் கொள்ளுதல்.

2. **விஸ்மரணம்:** எல்லையை மறந்து விடுதல்.

3. **அதோ வியதிக்கிரமம்:** கிணறு முதலானவற்றில் குறிப்பிட்ட ஆழத்திற்கும் கீழே இறங்குதல்.

4. **ஊர்த்துவ வியதிக்கிரமம்:** மலைமுதலானவற்றில் குறிப்பிட்ட உயரத்திற்கு மேல் ஏறுதல்.

5. **திரியக் வியதிக்கிரமம்:** பக்கத் திசைகளில் குறிப்பிட்ட எல்லைக்கு அப்பால் செல்லுதல்.

## 2 அனர்த்த தண்ட விரதம்

**89. எல்லை அகத்தும், பயம்இல மீண்(டு) ஒழுகல்
நல்அனத்த தண்ட வதம்**

(இ-ள்) எல்லை அகத்தும்-வரையறை செய்து கொண்ட எல்லைகளுக்குள்ளும், பயம் இல-தனக்குப் பயனற்ற செயல்களை, மீண்டொழுகல்-செய்யாமல் மீண்டு நடத்தல், நல் அனத்த தண்ட வதம்-நன்மை நல்குவதாகிய அனத்த தண்ட விரதமாகும்.—எ. று.

(க-ரை) திசை விரதம் மேற்கொண்டு, வாழ் நாள் முழுமையும் இவற்றைக் கடந்து செல்லேன் என்று குறிப்பிட்ட எல்லைகளுக்கிடையே செல்லும் காலையும், எவ்வகைப் பயனும் இல்லாமல் வீணே சென்று வருவதையும் நிறுத்திப் பயனுள்ள செயல்களுக்காக மட்டுமே செல்லுதல் என்ற வரையறையோடு நடந்து கொள்ளுவது சிறந்த நல்ல அனர்த்த தண்ட விரதம் எனப்படும்.

(வி-ரை) அனர்த்த என்பது அனத்த என்றுள்ளமை தொகுத்தல் விகாரம். அதனை அடுத்த எட்டு குறள்களில் விளக்குகின்றார்.

## ஐந்து அனர்த்த தண்ட விரதங்கள்

**90. ஐந்துஅனத்த தண்ட விரதம் முறைஉள்ளிச்**
**சிந்திக்கச் செய்வன் தெரிந்து**

(இ-ள்) ஐந்து-தீய சிந்தை, தீய சொல், பயனற்ற செயல், கொலை கொடுத்தல், தீயன கேட்டல் (பொய்ந்நூல் பயிலல்) ஆகிய ஐந்து வகையான, அனர்த்த தண்ட விரதம்-அனர்த்த தண்ட விரதங்களை, முறை உள்ளி தெரிந்து–நூல்களில் கூறிய முறைப்படி கற்றுஅறிந்து, சிந்திக்கச் செய்வன்-மற்றையோர் எண்ணும் பொருட்டுத் தெரிவிப்போன்—எ.று.

(க-ரை) தீய சிந்தை, தீய சொல், பயனற்ற செயல், கொலை கொடுத்தல், தீயன கேட்டல் என்று ஐந்து அனர்த்த தண்ட விரதங்கள் விளக்கப் பெறும்.

### தீய சிந்தை

**91. ஆர்வமொடு செற்றத்தை ஆக்கும் நினைப்புகள்**
**தீயுறு தீச்சிந்தை யாம்.**

(இ-ள்) ஆர்வமொடு-விருப்பத்தையும், செற்றத்தை-சினத்தையும், ஆக்கும்-உண்டாக்கும், நினைப்புகள்-எண்ணங்கள், தீஉறு-பொல்லாங்கிற்குக் காரணமான, தீச்சிந்தை ஆம்-தீயசிந்தை ஆகும்.—எ.று.

(க-ரை) மனத்தில் வேண்டா ஆசையையும், வீண் கோபத்தையும் நினைத்தலே தீய சிந்தையாம்.

(வி-ரை) காரணம் இன்றி விருப்பு வெறுப்பால் விளைவதனல் அபத்தியானம் அல்லது தீச் சிந்தை எனப்பட்டது. இதிலிருந்து நீங்குதல் அனர்த்த தண்ட விரதி விரதம் எனப்பெறும். அனர்த்த தண்டம்-தனக்கொரு பயன் இன்றிச் செய்யும் தீய செயல்கள். தீய எண்ணங்களே தீய செயல்களுக்குக் காரணம்.

### பாப உபதேசம்

**92. சே, ஆள், விலைகொளல் கூறுதல் கூட்டுதல்**
**பாபஉப தேசம் என்ல்**

(இ-ள்) சே-காளை மாடு முதலாயவற்றையும், ஆள்-வேலைக்காரர் முதலானேரையும், விலை கொளல்-எளிய விலைக்கு வாங்கலாம்

என்றும், கூட்டுதல்-இப்படி இணங்க வைக்கலாம் என்றும், கூறுதல்-வழி கூறுதல், பாப உபதேசம் எனல்-பாப உபதேசங்களாகும்.-எ.று.

(க-ரை) கன்று, காளை, பணியாள் என்பவற்றை குறைந்த விலைக்கு வாங்கலாம் என்றும், அதற்கு இணங்க வைக்க வழி உண்டு என்றும் கூறுதல் பாப உபதேசங்களாம்.

(வி-ரை) பிற உயிர் துன்புறும் சொற்களைக் கூறுதல் பாப உபதேசம். இதனின்றும் நீங்குதல் அனர்த்த தண்ட விரதம். இக் குறட்பா அக்காலச் சமூக பழக்க வழக்கங்களைச் சுட்டுகிறது போலும். இது மேலும் ஆராயத்தக்கது.

## பயனில் செயல்

**93. பயம்இல் மரம்குறைத்த லோடுஅகழ்தல் என்ப**
**பயம்இல் பமாதம் எனல்**

(இ-ள்) பயம் இல்-பயன் இல்லாமல், மரம் குறைத்தலோடு-மரங்களை வீணே வெட்டிக் குறைப்பதும் (செடியை அறுப்பதும், இலை முதலாய வற்றைக் கிள்ளுவதும்), அகழ்தல்-மண்ணை வீணே தோண்டுவதும் போன்றவை, பயம் இல்-பயனற்ற, பமாதம்-பிரமாத சரியம் அல்லது பயனில் செயல், எனல்-எனப்பெறும்—எ.று.

(க-ரை) செடி, கொடி, மரம் முதலாயவற்றை வீணே வெட்டுவதும், கிள்ளுவதும், தரையை வீணே தோண்டுவதும் பயனில் செயலாம்.

(வி-ரை) பயம்-பயன் என்பதன் கடைப் போலி. பிரமாத என்பது பமாதம் என்று திரிக்கப்பட்டது. பிரமாத என்றால் விழிப்பின்மை. சரியம் என்றால் செயல். பிரமாத சரியம் என்றால் விழிப்பற்ற செயல் அல்லது பயனற்ற செயல் என்று பொருள். இவற்றின் நீங்குதலும் அனர்த்த தண்ட விரதமாம்.

## கொலை கொடுத்தல்

**94. தீ, கருவி, நஞ்சு, கயிறு, தடி, நார்கள்**
**ஈத்தல் கொலைகொடுத்தல் ஆம்**

(இ-ள்) தீ-நெருப்பும், கருவி-கத்தி, வெட்டு அரிவாள் முதலான கொலைக் கருவிகளும், நஞ்சு-நச்சுப்பொருளும், கயிறு-நீண்ட வலிய கயிறும், தடி-தடியும் (பிரம்பும்), நார்கள்-நார்களும், ஈத்தல்-கொடுத்தல், கொலை கொடுத்தல்-இம்சா தானம் எனப்பெறும்-எ.று.

(க-ரை) நெருப்பு, கத்தி, அரிவாள், விஷம், கயிறு, தடி, நார் முதலானவற்றைக் கொடுத்தல் சாவுக்குக் காரணம் ஆவதால்- இம்சா தானம் எனப்பெறும்.

(வி-ரை) இம்சைக்குக் காரணமாகிய பொருள்களைப் பிறருக்குக் கொடுத்தல் இம்சா தானம் எனப்பெறும். இவற்றின் நீங்குதல் அனர்த்ததண்ட விரதி விரதம் எனப்படும்.

## தீயன கேட்டல்

### 95. மோகத்தை ஈன்று தவம்அழிக்கும் சொற்கேட்டல் பாவச் சுருதி எனல்

(இ-ள்) மோகத்தை-காமத்தை, ஈன்று-கொடுத்து, தவம் அழிக்கும்-நல் விரதங்களையும், தவங்களையும், அழிக்கும்-கெடுக்கின்ற சொல் கேட்டல்-சொற்களையுடைய நூல்களைச் செவி மடுத்தல், பாவச் சுருதி-தீயன கேட்டல், எனல்-எனப்பெறும். எ.று.

(க-ரை) காமத்தை விளைத்து, நல்ல நோன்புகளையும், தவங் களையும் தடுத்துக் கெடுக்கும் நூல்களைக் காதால் கேட்டலும் தீயன கேட்டலாம்.

(வி-ரை) தீமைக்குக் காரணமாகிய நூல்களைப் படித்தல், கேட்டல், சிந்தித்தல் முதலாய அனைத்தும் 'பாபச் சுருதி' யாகும். இவற்றின் நீங்குதல் அனர்த்ததண்ட வதமாகும். 89 ஆம் பாடல் தொடங்கி, 95ஆம் பாடல் வரை அனர்த்ததண்ட விரதங்களின் வகைகளையும், இயல்புகளையும் விளக்கினர். இனி எவ்வெவற்றைப் பின்பற்றுவதால் இவ்விரதம் கெடுகிறது என விளக்குவர்.

## அனர்த்த தண்ட விரத இறப்பு

### 96. நகையே நினைப்பு மொழியின்மை கூறல் மிகைநினைவு நோக்கார் செயல்

(இ-ள்) நகையே-நல்லவர் அவையில் கூற வேண்டாச் சொற்கள், ஏளனமாகப் பேசுகின்ற சொற்கள் ஆகியவற்றைக் கூறுகின்ற அடக்கம் இன்மையோடு கூடிய எள்ளலும், நினைப்பு-தம் கருத்தைக் கூறுவதாகக் கருதி, கை, கண், புருவம் முதலானவற்றைக் குறும்புத் தனமாக, இகழ்ச்சிபட இயங்கச் செய்யும் நினைப்பும், மொழியின்மை கூறல்-தேவை இன்றிக் காரணம் இன்றி வீண் சொற்களை அள வின்றிப் பேசுதலும், மிகை நினைவு-எக்காலமும் செயற்கை முறையில் தன்னை அழகு படுத்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணுகிற

தவருன எண்ணமும், நோக்கார் செயல்-இன்னது செய்யத் தக்கது, இன்னது செய்யத் தகாதது என்று வேற்றுமை பாராமல், பாபச் செயல்களைச் செய்வதும் ஆகிய இவை அனர்த்த தண்ட விரதங்களைக் கெடுப்பன ஆகும்.—எ.று.

(க-ரை) ஆன்ருேர் அவையில் கிண்டல் மொழி பேசுவதும், கூட்டங்களில் பேசும் போது வீணே இகழ்ச்சி பட கை, கண், புருவம் முதலானவற்றை அசைப்பதும், தேவையற்ற சொற்களை அளவற்றுப் பேசுதலும், செயற்கை அலங்கார விழைவும், பாபச் செயல்கள் புரிவதும் அதிசாரங்களாம்.

(வி-ரை) இவ் வைந்தும், கந்தர்ப்பம், குச்சியம், மௌகர்யம், போக பரிபோக அனர்த்தக்யம், அசமீக்ஷ்யாதி கரணம் எனப்படும்.

## வரும் முன் காத்தல்

**97. ஐந்துஅனத்த தண்ட விரதக்கு இறப்பிவை**
**முந்து உணர்ந்து காக்க முறை**

(இ-ள்) ஐந்து அனத்த தண்ட விரதக்கு-ஐந்து வகையான அனர்த்த தண்ட விரதங்களுக்கு, இறப்பு இவை-எதிரான அதிசாரங்கள் மேற் கூறப்பட்டவை என்பதை, முந்து உணர்ந்து-வரும் முன்பே அறிந்து, காக்க முறை-வாராமல் காத்துக் கொள்ளலே முறைமையாம்—எ.று.

(க-ரை) அனர்த்த தண்ட விரதங்களை நாசப் படுத்தும் அதிசாரங்களை வரும் முன்பே அறிந்து வராது காத்தலே முறைமை.

(வி-ரை) தீமை வந்த பின் வழியின்றி விழித்தலை விட வாராமல் காத்தலே அறிவுடைமை.

**வரும்முன்னர்க் காவாதான் வாழ்க்கை - வைத்தூறு**
**எரிமுன்னர் போலக் கெடும்**

என்பது **திருவள்ளுவம்.** இதனை இவ்விரதத்திற்கு மட்டுமல்லாது எல்லா விரதங்களுக்கும் போற்றிக் கொள்ளுதலே பொருத்தம்.

## 3. பரிக்கிரக பரிமாண விரதம்

**98 போகஉப போக பரிமாணம் என்றுரைப்பர்**
**வாயிற் புலன்கள் வரைந்து**

(இ-ள்) வாயில்-ஆசைகளின் வாசல்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து வாயில் வழி உண்டாகும், புலன்கள்-

ஊறு, சுவை, ஒளி, நாற்றம் ஓசை, என்ற ஐந்தையும், வரைந்து-கட்டுப்படுத்தி வாழ்தலே, போக-உபபோகப் பரிமாணம்—போக, உபபோகப் பரிமாணம், என்றுரைப்பர்-என்று கூறுவர்—எ.று.

(க-ரை) மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறி வழி நேரும் ஆசைகளை அளவுடன் கட்டுப்படுத்திக் கொள்ளுதலே தக்கதாம்.

(வி-ரை) பரிமாணம்-அளவு, வரையறை. ஒரு தரம் துய்த்து மறுபடியும் துய்த்தற்கு இயலாதவை, போகப் பொருள்கள் எனப் படும். உணவு, வெற்றிலைப் பாக்கு, மலர், சந்தனம் போன்றவை இத்தரத்தன. திரும்பத் திரும்பத் துய்க்கத் தகும் பொருள்கள் உபபோகப் பொருள்கள் எனப்படும். கட்டில், மெத்தை, உந்துகள் உடைகள், பெண்டிர் முதலியவை இத்தரத்தன. இவற்றை வரும் பாட்டில் விளக்குவர்.

## போகப் பொருள்கள் - உபபோகப் பொருள்கள்

**99. துய்த்துக் கழிப்பன போகம்; உபபோகம்**
**'துய்ப்பாம் பெயர்த்தும்' எனல்**

(இ-ள்) துய்த்துக் கழிப்பன-ஒருமுறை சுவைத்து ஒழிக்கப் பெறுவன, போகம்-போகப் பொருள்கள்; பெயர்த்தும் துய்ப்புஆம்-மீண்டும், மீண்டும் நுகரத்தக்கனவாகும் பொருள்கள் உபபோகம்-உபபோகப் பொருள்கள் என்று சொல்லப் பெறும்—எ.று.

(க-ரை) உணவு, வெற்றிலைப் பாக்கு, மலர், மாலை முதலாயின ஒரு முறை சுவைத்து விலக்கப் பெறுதலால் அவை போகப் பொருள் எனப்படும். கட்டில், மெத்தை, உந்து, உடை, பெண்டிர் முதலாயவை மீண்டும் மீண்டும் நுகரப்படுதலால் உபபோகப் பொருள்களாம்.

(வி-ரை) உலகியல்பு அறிந்து கூறப்பட்ட அறநூல் கருத்து இது.

**100. மயக்கம் கொலைஅஞ்சிக் கள்ளும்[25] மதுவும்**
**துயக்கில் துறக்கப் படும்**

(இ-ள்) மயக்கம்-அறிவை மயக்குவதனாலும், கொலை-கொலை அளவிற்கு அழைத்துச் செல்லுவதனாலும், அஞ்சி-அவற்றிற்காக

25 'கள்ளுன்' என்றும் பாடம்.

மிக அஞ்சி, கள்ளும், மதுவும்-கள்ளையும் தேனையும், துயக்கு இல்-சோர்வு தளர்ச்சி தயக்கம் இன்றி உடனே, துறக்கப் படும்-நீக்கப் படும்—எ.று.

(க-ரை) கள், மது முதலான போதைப் பொருள்கள், அறிவை மயக்குவதனாலும், கொலை அளவிற்கு இட்டுச் செல்வதனாலும் அவற்றைத் தயக்கம் இன்றி உடனே விலக்குதல்-விடுதல் வேண்டும்.

(வி-ரை) துயக்கு-சோர்வு, தளர்ச்சி என்று பொருள். இவற்றை விலக்குதல் போக உபபோகப் பரிமாண விரதத்தில் அடங்கும்.

**101. வேப்ப மலர்இஞ்சி வெண்ணெய் அதம்பழம்**
**நீப்பர் இவைபோல் வன**

(இ-ள்) வேப்ப மலர்-வேப்பம் பூ, இஞ்சி-பச்சை இஞ்சி, வெண்ணெய்-வெண்ணெய், அதம் பழம்-அத்திப்பழம், இவை போல்வன-இவை போன்ற உயிர்கள் எளிதில் விரைவில் உற்பத்தியாகும் கத்தரிக்காய், இலந்தைப் பழம் முதலாயவற்றை, நீப்பர்-விலக்கி விடுவர் நல்லோர்—எ.று.

(க-ரை) வேப்பம்பூ, பச்சை இஞ்சி, நாளான வெண்ணெய், அத்திப்பழம் முதலாயின உயிர்களின் உறைவிடம் என்பதால் நல்லோர் விலக்கி விடுவர். இவற்றை உண்ணார் என்பது கருத்து.

(வி-ரை) வேப்பம்பூவில் நுண்ணிய உயிர்கள் உறையும், பச்சை இஞ்சி-இனப் பெருக்கத்திற்கு உதவும், வெண்ணெய் அரை யாமத்திற்கு மேற்பட்டால், அதனுள் நுண்ணிய புழுக்கள் உற்பத்தி யாகி விடும்; அத்திப்பழத்தைப் பிட்டால், அதனுள் உயிருள்ள புழுக்கள் வாழும். இவற்றைப் பயன் படுத்தினால், கொல்லாமை நெறி கொலை செய்யப்படுகிறது. ஆதலின் இவற்றை வேண்டா என்றனர். அதம் பழம்-அழுகிய பழம் என்பது பழைய உரை. அத்திப்பழம் என்று பொருள் காணுதல் மிகப் பொருந்தும். அதுவே இலக்கிய வழக்கு. இப்பாவில் கூறப்பெற்ற பிற எல்லாம் இயற்பெயர் களாக இருக்கையில், இது மட்டும் அடைபெற்ற சொல்லாக இருத்தற்கில்லை. அன்றியும் அத்திப் பழத்தினுள் உயிர்கள் பல உறைகின்றன. அதனைப் பயன் படுத்தாமை சைனக் குடும்பங்களில் இன்னும் உள்ள பழக்கம். எனினும் அதம் பழம் என்பதற்கு அத்திப் பழம் என்றும், அழுகிய பழம் என்றும் இரண்டு பொருள் கூறினாலும் பொருந்தும். அழுகிய பழமும் உயிர்களின் உற்பத்தி இடமாக இருத்தல் இயற்கை. கி. பி. 1812 இல் அருங்கலச் செப்பை எடுத்துக் காட்டிய எல்லீஸ் அத்திப்பழம் என்றே கொண்டுள்ளார். Those things he should avoid are: eating of the fruit of the Fig tree......(p. 174). இப்பாடலில் கூறப்பட்டன அன்றி மேலும் பல

வற்றை இரத்தினகரண்டக சிராவகாசாரமும், பிரச்னோத்திர சிராவகாசாரத்திலும் கூறப் பெற்றுள்ளன என்பர். அவற்றுட் சில வருமாறு: சுரைக்காய், வில்வம் பத்திரிக்காய், தும்மட்டிக்காய், இலந்தைப் பழம், காளான், தென்னங் குருத்து, தாழங் குருத்து, கத்தரிக்காய், வெள்ளுள்ளி (பூண்டு), முதலானவை; கருணைக் கிழங்கு, தாமரைக் கிழங்கு முதலான கிழங்குகள்; கீரைத் தண்டு முதலிய தண்டுகள்; வாழைப்பூ முதலிய பூக்கள்; பெருங்காயம், இரண்டு நாட்கட்கு மேற்பட்ட மோர், இரண்டு நாழிகைக்கு மேற் பட்ட வடிக்காத தண்ணீர் முதலாயின.

### 102. இயமங்கள் கால வரையறை இல்லை; நியமங்கள் அல்லா வதம்

(இ-ள்) இயமங்கள்-இயம விரதங்களுக்கு, கால வரையறை இல்லை-இத்துணைக் காலம் வரைதான் பின் பற்ற வேண்டும் என்ற வரையறை இல்லை; நியமங்கள்-நியம விரதங்கள், அல்லா வதம்-வாழ்நாள் முழுதும் என்று இல்லாமல், குறிப்பிட்ட நாட்களுக்குப் பின்பற்றத் தக்கனவாம்—எ.று.

(க-ரை) வாழ்நாள் முழுதும் பின்பற்றத் தக்கது இயமவிரதம் எனவும், குறித்த நாட்களுக்குப் பின்பற்றத் தக்கது நியம விரதம் எனவும் குறிக்கப் பெறும்.

(வி-ரை) 98, 99 ஆம் பாடல்களில் குறிக்கப்பட்ட, போக உபபோகப் பொருள்களை விலக்கும் நோன்பு இருவகைப் படும். அவை இயம விரதம், நியம விரதம் என்பன. இயம விரதம்-சாகும் வரை வாழ் நாள் அளவும் பின்பற்றுதல், நியம விரதம்-இவ்வளவு நாட்களுக்கு என்று வரம்பு செய்து கொண்டு பின்பற்றுதல்.

### 103. உடுப்பன, பூண் பன, பூ,சாந்தும், ஊர்தி படுப்ப, பசிய நீராட்டு

(இ-ள்) உடுப்பன-உடுத்தும் ஆடைகளும், பூண்பன-அணியும் ஆபரணங்களும், பூ-மலரும், சாந்து-சந்தனமும், ஊர்தி-ஊர்ந்து செல்லும் வாகனங்களும், படுப்ப-படுத்துறங்கும் கட்டில், மெத்தை முதலானவும், பசிய நீராட்டு-குளிர்ந்த நீரில் குளித்தலும் (அள வாகப் பயன் படுத்துதல் வேண்டும்)—எ.று.

(க-ரை) உடுத்தும் உடைகள், அணிகலன்கள், மலர், சந்தனம், வாகனம், கட்டில், மெத்தை, குளிர் நீராட்டு என்பவற்றின் அளவும் காலமும் குறைத்துப் பயன் படுத்துதல் வேண்டும்.

(வி-ரை) இப்பாடல் குளகம். வரும் பாட்டில் கருத்துத் தொடர்ந்து முற்றுப் பெறுகிறது.

**104. கோலம், இலை, கூட, நித்த நியமங்கள்**
**கால வரையறுத்தல் நற்கு**

(இ-ள்) கோலம்-பாக்கும், இலை கூட-வெற்றிலையும் முதலான போகோப போகப் பொருள்களை, நித்த நியமங்கள் காலம் வரை யறுத்தல்-நாள்தோறும் பயன் படுத்தும் காலங்களை வரையறுத்து வாழ்தல்-நற்கு-நற்மை ஆகும்—எ.று.

(க-ரை) உடுப்பன, அணிவன, பூ, சந்தனம், வாகனம், கட்டில், மெத்தை, குளிர் நீராட்டு, வெற்றிலைப் பாக்கு, முதலான வற்றை அளவாக, உரியகால வரையறையுடன் பயன் படுத்துதல் வேண்டும்.

(வி-ரை) வெற்றிலை முதலாய அனைத்தும் பெயர்களாக-பொருள்களாக இருக்க, 'பசிய நீராட்டு—தொழிலாக-செயலாக இருப்பது ஐயமாக இருக்கிறது. சிராவக தர்மத்தில் நீராடலுக் குரிய வரை யரையும் சிந்திக்கத் தக்கது. இலைகூட-என்பது அரசுப் பதிப்பில் 'இலை கொடல்' என்றுள்ளது.

## வரையறுத்துக் கொள்ளும் நியமமுறை

**105 இன்று பகல், இரா இத்திங்கட்கு, இவ்ஆண்டைக்கு**
**என்று நியமம் செயல்**

(இ-ள்) இன்று பகல் என்று-இன்ன நாட்களில் பகல் மட்டும் என்றும், (இன்று) இரா-இன்ன நாட்களில் இராப் பொழுதில் மட்டும் என்றும், இத்திங்கட்கு-இன்ன மாதத்தில் என்றும், இவ்ஆண்டைக்கு-இன்ன ஆண்டில் மட்டும் என்றும், நியமம் செயல்-போகப் பொருள் பயன் படுத்துதல் வரையறுத்துக் கொள்ளுதல் நியம விரதத்தின் பாற்படும்—எ.று.

(க-ரை) போகப் பொருள்களைப் பயன் படுத்துகையில் இன்ன பகலில், இன்ன இரவில், இன்ன மாதத்தில், இன்ன ஆண்டில் என்று குறித்த காலத்தில் மட்டும் நீங்குதல் நியம விரதம் ஆகும்.

(வி-ரை) மேற் கண்ட பொருள்களை இன்ன அளவில் பயன் படுத்துதல் வேண்டும் என்பது ஒரு கட்டுப் பாடு; அவற்றையும் இன்ன காலப் பகுதியில் மட்டும் பயன்படுத்துதல் வேண்டும் என்பது பிறிதொரு கட்டுப்பாடு,

## பரிமாண விரதத்தின் இறப்பு

**106. வேட்கை, வழிநினைப்பு, துய்ப்பு, மிகநடுக்கு, நோக்குஇன்மை, ஐந்தாம் இறப்பு**

(இ-ள்) வேட்கை-விரதம் என்று விலக்கிய பொருளைக் கண்டபோது விரும்புவதும், வழி நினைப்பு-அப்பொருளை மீண்டும் எவ்வாறு பெறுவது என்று ஓயாமல் நினைப்பதும், துய்ப்பு-மறந்தோ மறைத்தோ அப்பொருள்களை நுகர்வதும், மிகநடுக்கு-அப்பொருள் களைப் பெறுவோமா என்று அஞ்சுதலும், இன்மை-உள்ளத்தில் ஏற்ற விரதத்தைப் பற்றி சிந்திக்காமல் இருத்தலும், ஐந்து ஆம்-என்ற ஐந்தும், இறப்பு-மேற்கண்ட விரதங்களை நசிக்கச் செய்யும் இறப்பு என்ற அதிசாரங்களாம்—எ.று.

(க-ரை) விரதங்களால் விலக்கிய போகப் பொருள்களை எங்கேனும் காணுகிற போது விரும்புவதும் அப்பொருளை மீண்டும் எவ்வாறு நுகர்வது என்று ஓயாமல் நினைப்பதும், மறந்தோ மறைத்தோ நுகர்வதும், அப்பொருளை எதிர்காலத்தில் பெறுவோமா என்று, அஞ்சுதலும் விரதங்களை மறந்து நினையாதிருத்தலும் நோன்பு உடையவர்க்கு இறப்புகளாம்.

(வி-ரை) விஷயானு பேக்ஷா, அனுஸ்மரதி, அதிலௌல்யம் அதித்ருஷா, அனுபவம்-எனவும் இவை அழைக்கப்பெறும், 100-106 எண்ணுள்ள பாடல்கள், அரசுப் பதிப்பில், 122-128ஆம் பாடல் களாக இடம் பெற்றுள்ளன. 83ஆம் பாடல் தொடங்கி இப்பாடல் வரை குண விரதங்களைத் தொகை வகை விரியான் விளக்கினர். இனி நான்கு வகையான சிட்சா விரதத்தை விளக்குவர்.

## 3. சிட்சா விரதம்

### 1. சாமாயிக விரதம்

**107. கட்டு விடுகாறும் எஞ்சாமை ஐம்பாவம் விட்டுஒழுகல் சாமா யிகம்**

(இ-ள்) கட்டு விடுகாறும்-முன்னர் கூறப்படும் நியமன கட்டு முடியுமளவும், எஞ்சாமை-சற்றும் குறைவு இல்லாமல், ஐம்பாவம்-கொலை, பொய், களவு, காமம், பொருள் வரைதல் என்ற ஐந்து பாவங்களையும், விட்டு ஒழுகல் சாமாயிகம்-மனத்தாலும் நினைக்காமல் ஒழுகும்ஒழுக்கமே சாமாயிகம் எனப் பெறும்—எ.று.

(க-ரை) நியமன கட்டு முடியும் அளவும் கொலை, பொய், களவு, காமம், பொருள் வரைதல் என்ற ஐந்து பாவங்களும் அண்டாது, தற்காத்திருத்தலே சாமாயிக விரதம் ஆகும்.

(வி-ரை) கட்டு-பந்தம், தளை, பாசம், பற்று என்பன ஒத்த பொருளன.

### கட்டுகளாவன

108. கூறை, மயிர்முடி, முட்டி, நிலையிருக்கை
கூறிய கட்டுஎன்று உணர்

(இ-ள்) கூறை-உடையை உடுத்தலும், மயிர்முடி-தலைமயிரைக் கூட்டி முடித்தலும், முட்டி-முட்டியை முடியாகப் பிடித்தலும், நிலை-உடம்பின் மேல் உள்ள பற்றை ஒழித்து துன்பங்களுக்கு அஞ்சாது நிற்றலும், இருக்கை-மல்லாந்த நிலையில் படுத்து இருத்தலும், கூறிய-முதற் பாவில் கூறிய கட்டு[26] என்று உணர்-கட்டு என்று உணரத் தக்கவை—எ-று.

(க-ரை) உடைகளையும், தலைமுடியையும் இவ்வாறுதான் முடிதல் வேண்டும் என வரையறுத்தவாறு கட்டுவதும், இடக்கைப் பெரு விரலும், சுட்டு விரலும் பொருந்தக் கூட்டி முட்டியாகப் பிடிப்பதும், நிற்பதும், மல்லாந்து படுப்பதும் கட்டுகள் எனப்படும்.

(வி-ரை) **உடைக்கட்டு (வஸ்திர பந்தம்)**: உடையை இருகக் கட்டி இன்ன காலத்தளவும் சாமாயிகம் செய்வதென்று வரையறை செய்தல்.

**மயிர்க் கட்டு (கேசபந்தம்)**: தலை முடியை நியமித்தவாறு கட்டுதல்.

**முட்டிக் கட்டு (முஷ்டிபந்தம்)**: இடக்கைப் பெரு விரலையும், அதனை அடுத்துள்ள சுட்டு விரலையும் கூட்டி முட்டியாகப் பிடிப்பது,

**நிலை, இருக்கைக் கட்டு (பர்யங்க பந்தனம்)**: பர்யங்க ஆசனமாவது, காயோத் சர்க்க மாகமாவது நிற்றலும் இருத்தலும்.

**கட்டு**: இவ்வாறு நடக்கையில், எத்தகு இடையூறு வந்தாலும் தளராது முடித்தல் பற்றி இவற்றைக் 'கட்டு' என்று கூறினர்.

---

26 The idea of tying a knot in one's Choti (a tuft of hair on the top of the head worn by Hindus and Jainas) and the like, is not that the knot in itself is of any value or importance in the process, but that it implies a mental determination to continue meditation so long as it remains untied. The knot is merely intended to serve the purpose of the up lifted hand of a constable, and is a signal for the stoppage of all kinds of mortal 'traffic' which might interfere with steadiness continuity of holy meditation.

—Ratna-karanda-Srvakachara, Translation by C. R. Jain, 1975, p. 34,

## சாமாயிக விரதத்திற்கு உரிய இடங்கள்

**109. ஒருசிறை இல்லம், பிறவுழி யானும்
மருவுக சாமா யிகம்**

(இ-ள்) சாமாயிகம்-சாமாயிக விரதத்தை, இல்லம்-தன்வீட்டில், ஒரு சிறை-ஒரு பக்கத்தில் ஆயினும், பிறவுழி யானும்-கோவில், பூங்கா, குளக்கரை. ஆற்றங்கரை, தோப்பு, சாலை, காடு முதலிய வேறு இடங்களில் ஆயினும், மருவுக-சேர்ந்து செய்தல் வேண்டும்-எ.று.

(க-ரை) வீட்டில் ஒரு பக்கத்திலோ, கோயில், ஆற்றங்கரை முதலான இடங்களிலோ தனி யிடத்தில் நற் சிந்தையுடன் ஒழுகல் சாமாயிக விரதமாம்.

(வி-ரை) சாமாயிகம்-மனம் ஒருமுகப்படுதல்.

## சாமாயிக விரதத்திற்குரிய காலம்

**110. சேதியம் வந்தனை, பட்டினி ஆதியாய்
ஓதிய காலம் அதற்கு**

(இ-ள்) அதற்கு-முன்னே கூறப் பெற்ற சாமாயிக விரதத்திற்கு-சேதியம் வந்தனை-இறைவனை வணங்கும் நேரங்களையும், பட்டினி ஆதியாய்-அட்டமி, சதுர்த்தசி நாட்களில் உண்ணாவிரதம் கொண்டுள்ள நாட்களையும், ஓதிய காலம்-காலம் ஆக ஓதியுள்ளனர் ஆசிரியர்—எ.று.

(க-ரை) கோயிலில் சென்று வழிபடுகிற பொழுதும், அட்டமி, சதுர்த்தசி நாட்களும் சாமாயிக விரதத்திற்குரிய காலங்களாகும்.

(வி-ரை) இறை வழிபாட்டு நேரங்களில், உண்ணாவிரத நாட்களில் மனம் ஒருமுகப் படுகிறது; அமைதியாய் இருக்கிறது. எனவே இக்காலம் விரதத்திற்குப் பொருத்த மானதாகக் கூறப்பெற்றது. இக்காலம் தவிர பிற காலங்கள், விரதத்திற்குப் பொருந்தாக் காலங்கள் என்று பொருள் அன்று. மற்றக் காலங்களில் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். ஆனால், இப்பாவில் குறித்த காலங்களில் இருந்தே ஆதல் வேண்டும்.

## சாமாயிகம் முழுமையாக நிறைவு பெறுதல்

**111. பெற்ற வகையினால் சாமாயிகம் உவப்பின்;
முற்ற நிறையும் வதம்**

(இ-ள்) பெற்ற வகையினால்-மேலே குறிக்கப் பெற்ற இடம், காலம் முதலிய முறைகளை அறிந்து, சாமாயிகம் உவப்பின்-அவர்

அவர்க்கு இயன்ற அளவு சாமாயிக விரதத்தை விரும்பி இருப்பின், வதம்-விரதம், முற்ற நிறையும்-முழுமையாக நிறைவுறும்—எ.று.

(க-ரை) குறித்த காலங்களில், குறித்த இடங்களில் சாமாயிக விரதம் இருப்பின், அது முழுமையாக நிறைவேறும்.

## உடல் வேறு உயிர் வேறு

**112. தனியன் உடம்பு இது; வேற்றுமை சுற்றம்,**
**இனைய நினைக்கப் படும்**

(இ-ள்) தனியன் உடம்பு இது-(வாளும், உறையும் வேறு வேருதலைப் போல), உயிரும், உடம்பும் வேறு வேறு; வேற்றுமை சுற்றம்-எனவே, மகன், அண்ணன், தம்பி என்பன போன்ற உறவுகளும் வேறு வேருனவையே: இனை நினைக்கப் படும்-(என்பன போன்றவை) சாமாயிகத் தியானத்தில் தியானிக்கப் பெறும்—எ.று.

(க-ரை) உடல் வேறு, உயிர் வேறு ஆதலால், உறவும் வேறு என்பது தெளிவு. இது போன்ற பற்று அறுக்கும் தெளிவுகள் தியான சமயத்தில் எண்ணப் பெறும்.

(வி–ரை) பார்வை அளவில் சேர்ந்திருக்கும் உயிரும், உடலுமே உண்மையில் ஒன்றல்ல; வேறு வேறு என்று தெளிவாகிற போது, சுற்றத்தினர், அடிப்படையில் வேறு வேறு ஆவர். சத்திர சூடாமணி இந்தக் கருத்தைப் போற்றிக் குறிக்கிறது. அது பின் வருமாறு:

'இடை நடுவில் ஏற்பட்ட மகன், மனைவி குடும்பத்தினர் முதலானோர் மறு பிறப்பில் நம்முடன் தொடர மாட்டார் என்பது வியப்பு இல்லை. பிறந்த போதே ஒன்ருய்த் தோன்றிய உடல், மறு பிறப்பில், இப்பிறப்புத் தொடர்பின் காரணம் இருந்துங்கூடத் தொடர்வதில்லை.'

> **சேதனமால் ஆவி; அசேதனமால் இவ்வுடம்பு**
> **ஆதலினல் வேறுஆய அவ்விரண்டும்-சேர்தலினல்**
> **மன்னும் ஒன்ருய் விடினும் வாளும் தடறும்போல்**
> **பின்னம் எனவே பிரித்து உணர்மான்**

என்பது திருக்கலம்பகம் (76).

> **ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்**
> **வேற்றுமை நயத்தின் வேறே உடலுயிர்**

என்பது நன்னூல் (49).

## வருந்துதலும் திருந்துதலும்

113. இறந்ததன் தீமைக்கு இழித்தும் பழித்தும்
மறந்தொழியா மீட்டல் தலை

(இ-ள்) இறந்ததன்-கடந்த காலத்தில் நடந்த, தீமைக்கு-தீய வற்றிற்கு வருந்தி, இழித்தும்-தனக்குள்ளே தான் இகழ்ந்தும், பழித்தும்-நிந்தித்தும், மறந்து ஒழியா-மறந்தும் அத்தகு பாபச் செயல்களில் தொடர்ந்து போகா வண்ணம், மீட்டல்-தன் மனம், மொழி, செயல்களை மீட்டுக் கட்டுப் படுத்திக் கொள்ளுதல், தலை-தலைமை வாய்ந்ததாம்—எ.று.

(க-ரை) செய்த தவறுகளை எண்ணி வருந்த வேண்டும்; திருந்த வேண்டும்.

எற்றென்று இரங்குவ செய்யற்க-செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று

என்பது திருக்குறள் (655).

'தன்னை நிந்தித்தல் தக்கோர்ப் பழிச்சுதல்
என்பது மேருமந்தர புராணம்.

114. 'தீயவை எல்லாம் இனிச்செய்யேன்' என்று அடங்கித்
தூயவழி நிற்றலும் அற்று

(இ-ள்) தீயவை எல்லாம்-தீமை தரும் பாபங்கள் எதனையும் இனிச் செய்யேன்-இனிமேல் செய்யமாட்டேன், என்று அடங்கி-என்று உறுதி கொண்டு அடக்கத்துடன், தூய வழி-குற்றம் இல்லா நெறியில், நிற்றலும்-நடப்பதும், அற்று-சாமாயிக விரதம் ஆகும் —எ.று.

(க-ரை) தீமை எதுவும் எப்போதும் செய்வதில்லை என்று உறுதி கொண்டு நல்ல வழியில் நடத்தல் சாமாயிக விரதம் ஆகும்.

(வி-ரை) தூவகையின், 'தூய வகையின் நிற்றலும் அற்று' என்பன வேறு பாடம்.

## விருந்துக்

115. ஒன்றியும், ஒன்றாதும் தான்செய்த தீவினையே
நின்று நினைந்துஇரங்கற் பாற்று

(இ-ள்) ஒன்றியும்-பொருந்தியும் (தெரிந்தும்), ஒன்றாதும்-பொருந்தாதும் (தெரியாமலும்), தான் செய்த தீவினையை-தான்

கடந்த காலத்தில் செய்து விட்ட தீமைகளை, நின்று-சாமாயிக விரத ஒழுக்கம் பூணும் போது-தியானிக்கும் போது, நினைந்து-எண்ணி, இரங்கற்பாற்று-வருந்த வேண்டும்—எ-று.

(க-ரை) தெரிந்தோ தெரியாமலோ தவறுகள் செய்த பின், தியானம் இருக்கையில் அவற்றை எண்ணி வருந்தி உருக வேண்டும்.

(வி-ரை) தியானத்தில் தான் செய்துவிட்ட தவறுகளை எண்ணி வருந்தி நெஞ்சம் நெக்குருக வேண்டும். ஏறத்தாழ இந்த வருந்தும் நிலையின் வளர்ந்த வடிவந்தான் கிறித்தவத்தில் உள்ள பாவ மன்னிப்பு (Confession). திருவாசகத்தில் உள்ள நீத்தல் விண்ணப்பம் இப் போக்கினதுதான்.

## நல்லனவே நினைத்தல்-சொல்லல்-செய்தல்

**116. தனக்கும் பிறர்க்கும் உறுதிச்சொற் செய்கை**
**மனத்தினில் சிந்திக்கற் பாற்று**

(இ-ள்) தனக்கும், பிறர்க்கும்-சாமாயிகத்தின் போது, தன் ஆத்மனுக்கும், மற்றவர்களுக்கும், உறுதி-இனிமை நல்குவதான, சொல், செய்கை-சொற்களையும், செயல்களையும், மனத்தினின்-உள்ளத்தினில், சிந்திக்கற்பாற்று-நினைதல் வேண்டும்—எ.று.

(க-ரை) தனக்கும், பிறர்க்கும் இனிமையும் நன்மையும் தருவதான சொல்லையும், செயலையும் உள்ளத்தில் போற்ற வேண்டும்.

(வி-ரை) நினைப்பே, சொல்லுக்கும், செயலுக்கும் அடிப்படை. நல்ல நினைப்பு அமைந்து விடுமானால், சொல்லும் செயலும் நல்லன வாகவே மலரும். எனவே நல்லதை உள்ளத்தில் போற்றுக என்றனர்.

## மறந்தும் தீயன நினையாமை

**117. பிறர்கண் வருத்தமும், சாக்காடும், கேடும்**
**மறந்தும் நினையாமை நன்று**

(இ-ள்) பிறர்கண் வருத்தமும்-மற்றவரிடத்து வருத்தம் செய்தலையும், சாக்காடும்-கொல்லுதலையும், கேடும்-கெடுதலையும், மறந் தும்-தன்னை மறந்தும், நினையாமை நன்று-செய்ய எண்ணாமை நல்லது—எ-று.

(க-ரை) எவ்வகையான சூழல்கள் நேர்ந்தாலும், பிறர் கூறும் சொற்கள், அவர்கள் செய்யும் செயல்கள் என்பவற்றைக் கொண்டு

அவரைப் பற்றி வருந்துவது, அவர் தரும் துன்பம் பொறுக்காமல், அவர் சாகா மாட்டாரா என்று எண்ணுவது, அவர் சீரழிந்து கெட்டொழிய வேண்டும் என நினைப்பது சாமாயிக பாவனையில் சற்றும் கூடாது.

(வி-ரை) 'மறந்தும் நினையாமை நன்று'-என்பதன் ஆழத்தை அறிக. கனவிலும் தீங்கு எண்ணுமை என்பது போன்றநிலை அது.

## வேண்டா உறவு

118. ***திருந்தார் பொருள்வரவும், தீயார் தொடர்பும்***
***பொருந்தாமை சிந்திக்கற் பாற்று***

(இ-ள்) திருந்தார்-தான் இழைத்த தீய செயல்களை எண்ணி வருந்தித் திருந்தாதவர்களிடத்திருந்து வரும், பொருள் வரவும்-பொருள் வரவையும், தியார் தொடர்பும்-தீயா நெறிச் செல்வாருடன் தோழமை கொள்ளுதலையும், பொருந்தாமை-முற்றும் பொருந்தாது இருத்தலை, சிந்திக்கற்பாற்று-தியானத்தில் நினைத்தல்-போற்றல்-வேண்டும்—எ.று.

(க-ரை) திருந்தாதவர் தரும் பொருள் உதவியையும், தீயவர் உடன் பழகும் தோழமையையும் மனத்தாலும் பொருந்தாமை வேண்டும்.

(வி-ரை) 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'-என்ற **இராமலிங்க அடிகளார் தம்** வேண்டுதலையும் ஈண்டு எண்ணுக. திருந்தார்-என்பதற்கு அன்னியர் என்று பொருள் உரைப்பர், திருந்தார்-என்பதற்கு அத்தகு பொருள் வழக்கு இலக்கியங்களில் இல்லை. திருந்தாதவர் என்ற பொருளை உடைய வினையால் அணையும் பெயர் அது.

## ஆத்மா ஒன்றே நிலையானது

119. ***கூடியவை எல்லாம் பிரிவனவாம்; கூடின்மை***
***கேடு இன்மை சிந்திக்கற் பாற்று***

(இ-ள்) கூடியவை எல்லாம்-முன் வினைப் பயனால், ஒருவனிடம் வந்து சேர்ந்த உடல், மனைவி, மக்கள், உறவினர், நண்பர் போன்ற உயிருள்ள பொருள்கள், வீடு, நிலம், பணம், தானியங்கள் முதலான இயக்கமற்ற பொருள்கள் ஆக எல்லாமே ஒரு கால கட்டத்தில், பிரிவனவாம்-பிரிந்து செல்லக் கூடியனவே, கூடு இன்மை-கூட்டுற வினை அடையாத ஆத்மா ஒன்றுமே, கேடு இன்மை-அழியாதது என்பதைச், சிந்திக்கற்பாற்று-சிந்தனை செய்தல் வேண்டும்—எ.று.

(க-ரை) மனைவி மக்கள் சுற்றம், நிலம் பணம் முதலாயின அனைத்தும் நம்மை விட்டு ஒரு நாள் பிரிவனவே. ஆத்மா ஒன்றே அழியாதது.

(வி-ரை) வினைப் பயனால் பிறவி, உறவு முதலான நேர்கின்றன. அவை என்றோ ஒரு நாள் நம்மை விட்டுப் பிரிகின்றன. இவை யனைத்துமே நிலையற்றவை. ஆத்மா ஒன்று மட்டுமே நிலையானது.

**கேண்மின் நமரங்காள் கேடுஇன்றி நிற்பதுயிர்**
**காண்மின்! உடம்பு, கவின், இளமை,-கேண்மையுடன்**
**வல்லாண்மை செல்வம் என்று இவ்வெல்லாம் வானத்து**
**வில்லாடும் என்றே விழையன்மின்**

என்பது **திருக்கலம்பகப்** பாடல் (76)

120. **நல்லறச் சார்வும், நவைஅற நீக்கலும்**
**பல்வகையால் பார்க்கப் படும்**

(இ-ள்) பல் வகையால்-பலவேறு வழிவகைகளாலும், நல்லறச் சார்வும்-நல்லறங்களின் மீது விருப்பம் கொள்ளுதலும், நவை-துன்பத்திற்குக் காரணமான குற்றம் குறைகளை, அற-முற்றும் கெட்டொழியும்படி, நீக்கல்-அகற்றுதலும், பார்க்கப்படும்-எப்போதும் ஓயாது சிந்திக்கப் பெறும்—எ.று.

(க-ரை) சாமாயிக ஒழுக்கத்தினர், எப்போதும், நல்லற நாட்டமும், அல்லன போக்கலும் பற்றியே சிந்தித்தல் வேண்டும்.

(வி-ரை) **சம்வேகம்**-அறங்களின் மீதும் அறப் பயன்களின் மீதும் ஆர்வம் காட்டுதல்.

**வைராக்கியம்**-உடல், உலகியல் போக விருப்பங்களை வெறுத்தல். இவையே சிந்திக்கப்படும்.

## சாமாயிக விரதத்தின் இறப்பு

121. **உள்ளம், மொழி,செய்கை, தள்ளல், விருப்பின்மை**
**உள்ளார் மறத்தல் இறப்பு**

(இ-ள்) உள்ளம், மொழி, செய்கை-தள்ளல்-தியானத்தில், ஒருமுகப் படாமல், மனம், மொழி, செயல்களால் சிதறடிப்பது, விருப்பு இன்மை-தியானத்தை விரும்பாமை, உள்ளார் மறத்தல்-தியானத்தை உரிய குறித்த காலங்களில் செய்ய மறந்து விடுதல் ஆகியன, இறப்பு-அதிசாரம் என்ற இறப்புகளாம்—எ.று.

(க-ரை) மனம் ஒருமுகப் படாமை, விரும்பாமை, மறந்து விடுதல், ஆகியன. தியானம் என்ற சாமாயிக விரதத்தை நசித்து விடும்.

(வி-ரை) தியானத்தின் போது மனத்தை ஆன்மா நோக்கி ஒரு முகப்படுத்தாமல், அலைய விடுவது, ஆன்மத் தொடர்பு அல்லாத வற்றைப் பேசுவது, உடலை அங்கும் இங்கும் அசைப்பது, விருப்ப மின்றிக் கடனுக்குச் செய்வது, காலத்தை மறந்து அகாலத்தில் செய் வது ஆகியன இறப்புகளாம். 107 முதல் 121 வரை சாமாயிக விரத இயல்புகளை விவரித்தார். இனி போச உபவாசம் பற்றி விவரிப்பர்.

## 2. போசதம்

122. **உவா, அட் டமியின்கண் நால்வகை ஊணும்**
**அவா அறுத்தல் போசதம் என்**

(இ-ள்) உவா-சதுர்த்தசி, அட்டமியின்கண்-அஷ்டமி முதலிய நாள்களில், நால் வகை ஊணும்-நான்கு வகை உணவுகளையும், அவா அறுத்தல்-ஆசையின்றி நீக்கி விட்டு ஆத்மனை எண்ணி இருத்தல், போசதம் என்-புரோஷதோபவாசம் எனப் பெறும்—எ.று.

(க-ரை) மாதம் சதுர்த்தசி, அட்டமி என்ற இரு நாட்களில் உண்ணு நோன்பிருத்தல் போசதம் எனப்படும்.

(வி-ரை) உவா-பௌர்ணமி, அமாவாசை நாட்களை உணர்த் தியது.

**ஓவாது இரண்டுஉவவும் அட்டமியும் பட்டினிவிட்டு,**
**ஒழுக்கங் காத்தல்**

என்பது **சிந்தாமணி** (1547). பட்சத்தின் 8ஆம் நாளும் பதினான் காம் நாளும் என்பர்.

உண்ணல், தின்னல், நக்கல், பருகல்-என்ற நான்கும் நால் வகை ஊண் எனப் பெற்றன. உண்-ஊண் முதனிலை நீண்ட தொழிற் பெயர்.

### உண்ணு நோன்பின் போது வேண்டாதன

123. **ஐம்பாவம் ஆரம்பம் நீராட்டுப் பூச்சாந்து**
**நம்புற்த பூட்டினியின் ஞான்று**

(இ-ள்) பட்டினியின் ஞான்று-உண்ணு நோன்பு இருக்கும் போது, ஐம்பாவம்-அடுப்பு, துடைப்பம், அம்மி, நீர்ச்சால், உரல் என்ற இவற்றால் ஏற்படக் கூடிய தொழில்களையும், ஆரம்பம்-உழவு, வாள்,

வரைவு, வாணிபம், கல்வி, சிற்பம் என்ற ஆறு வகைத் தொழில் களையும், நீராட்டு-நீராடுதலையும், பூ-பூ முடித்தலையும், சாந்து-சந்தனம் முதலாயின பூசிக் கொள்ளுதலையும், நம்பற்க-நம்பாமல் விலக்குதல் வேண்டும்—எ.று.

(க-ரை) அடுப்பு, துடைப்பம், அம்மி, நீர்ச்சால், உரல் என்ப வற்றால் ஏற்படும் தொழில்களையும், உழவு, வாள், வாணிகம், கல்வி, சிற்பம், ஓவியம் என்ற தொழில்களையும், நீராடுதலையும், பூ முடித் தலையும், சந்தனம் பூசிக் கொள்ளுதலையும், உண்ணு நோன்பு இருக் கும் நாட்களில் விட்டு விடுதல் வேண்டும்.

(வி-ரை) ஐம்பாவம் என்பதற்கு கொலை, களவு, பொய், காமம், பொருள் விழைதல் என்ற ஐந்து பாவங்களைக் குறிப்பிடும் அரசுப் பதிப்பு. உயிர்க் கொலைக்குக் காரணமான தீ மூட்டல், பெருக்குதல், அரைத்தல், இடித்தல், முகத்தல் என்ற ஐந்தையும் கொள்ளுதலே முறைமை. ஆகமங்களும் அடுப்பு முதலான ஐந்தை யும் **'பஞ்ச சுநா தோஷம்'** என்று குறிப்பிடும். இத்தகைய செயல் களை எல்லாம் விட்டு நீங்கி, நால்வகை உணவையும் விலக்கி, ஆத்ம நினைவில் ஆழ்தல் வேண்டும் என்பதாம்.

## நோன்பின் போது வேண்டத் தகுவன

124. *அறவுரை கேட்டல், நினைத்தல், உரைத்தல்*
*திறவதின் செய்யப் படும்*

(இ-ள்) அறவுரை கேட்டல்-உண்ணு நோன்பின் போது அற நூல் கூறம் வுரைகளை செவி மடுத்தல், நினைத்தல்-கேட்ட கருத்து களை மீண்டும், மீண்டும் நினைவு கொள்ளுதல், உரைத்தல்-தாம் அறிந்த நல்லவற்றைப் பிறருக்கு எடுத்துக் கூறுதல், திறவதின்-உறுதிப்பட, செய்யப்படும்-செய்தல் வேண்டும்—எ.று.

(க-ரை) உண்ணு நோன்பு இருக்கும் போது, அறநூற் கருத்து களைக் கேட்டல், அவற்றை மீண்டும், மீண்டும் எண்ணுதல், அவற்றைப் பிறருக்கு எடுத்துச் சொல்லுதல் ஆகியவற்றைச் செய் தல் வேண்டும்.

## ஒரு வேளை உண்ணுதல்

125. *உண்டி மறுத்தல், உபவாசம், போசதம்*
*உண்டல் ஒருபோது எனல்*

(இ-ள்) உண்டி மறுத்தல்-நான்கு வகையான உணவுகளையும் அறவே உண்ணுதிருத்தல், உபவாசம்-(எனல்)-உண்ணு நோன்பு

எனப் பெறும்; ஒரு போது உண்டல்-ஒரு வேளை மட்டும் உண்பது, போசதம் எனல்-போசதம் எனப்பெறும்—எ.று.

(க-ரை) அறவே உண்ணுமல் இருத்தலே உண்ணு நோன்பு என்ற உபவாசமாம்; மாருக ஒரு வேளை மட்டும் உண்ணுதல் என்பது போசதமாம்.

(வி-ரை) முற்றும் உண்ணுமை உபவாசம்; ஒரு வேளை உண்ணு தல் போசதம். உபவாசத்துக்கு முன் நாளும் பின் நாளும் ஒரு வேளை உணவு கொண்டு, உபவாசத்தன்று முழுப் பட்டினி இருத்தல் போசதுபவாசம் எனப்படும். முதல் நாளை தாரணை என்றும் பின் நாளை பாரணை என்றும் குறிப்பர். இதனை அடுத்த குறளில் விளக்குவர்.

## போசதுபவாசம்-தொடர் உண்ணு நோன்பு

**126. போச துபவாசம் என்றுரைப்பர் பட்டினிவிட்டு**
**ஆரம்பம் செய்யான் எனின்**

(இ-ள்) பட்டினி விட்டு-முதல் நாளும், மறு நாளும் ஒரு வேளை உணவு உண்டு, உண்ணு நோன்பு நாளில் முற்றும் உண்ணுதிருந்து, ஆரம்பம் செய்யான் எனின்-உழவு, வாணிகம் முதலிய தொழில் களை செய்யாமல், தியானத்தில் ஈடுபட்டு இருப்பதனை, போசதுப வாசம் என்று உரைப்பார்-போசதுபவாசம் என்று குறிப்பிடுவர் —எ.று.

(க-ரை) உண்ணு நோன்பு நாளுக்கு முன் பின் இரு நாள்களி லும் ஒரு வேளை மட்டும் உண்டு, நடு நாளில் மட்டும் உண்ணுதிருப் பதும், அக்காலத்து எத்தொழிலையும் செய்யாதிருப்பதும் போசதுப வாசம் எனப் பெறும்.

(வி-ரை) திடும் என்று உண்ணு நோன்பு இருத்தலினும், சீராக துவங்கி முடித்தல் உடல் இயக்கத்திற்கும் நல்லது.

## உண்ணு நோன்பிற்கு இறப்புகள்

**127. நோக்கித் துடையாது கோடல், மலம்துறத்தல்**
**சேர்கைப் படுத்தல் இறப்பு**

(இ-ள்) நோக்கித் துடையாது கோடல்-உண்ணு நோன்புக் காலங்களில், பசி மயக்கத்தால், சிற்றுயிர்கட்கு ஊறு நேராவண்ணம், பொருளை ஆய்ந்து பார்த்து துடைக்காமல் பயன் கொள்ளுதலும், மலம் துறத்தல்-மலம், சிறுநீர் கழித்தலும், சேர்கைப் படுத்தல்-கட்டிலில் படுத்தலும், இறப்பு-அதிசாரங்களாம்—எ.று.

(க-ரை) உண்ணு நோன்பு இருக்கையில், ஏற்படும் பசி மயக்கத்தால், சிற்றுயிர்கட்கு ஊறு நேரும் வண்ணம், பொருள்களை எடுத்தலும், வைத்தலும், துடைத்தலும், மலம், சிறுநீர் கழித்தலும், கட்டிலில் படுத்தலும், இறப்புகள் ஆகும்.

(வி-ரை) கடும் பசியின் போது கூட கொள்கைப் பிறழ்பாடு நேருதல் கூடாது என்பதாம்.

## உண்ணு நோன்பை நசிப்பன

128. **கிரியை விருப்பு, கடைப்பிடி இன்மை**
**உரிதின் இறப்பு இவை ஐந்து**

(இ-ள்) கிரியை விருப்பு இன்மை-பசிக் கொடுமையால் வழிபாடு முதலானவற்றில் ஈடுபாடு இல்லாமை, கடைப்பிடி இன்மை-வீட்டுப் பணிகளில் ஈடுபட்டு, மனத்தைப் பல வழிகளில் அலைய விடுதல், உரிதின்-உரிமையாகச் செய்ய வேண்டிய முன் மூன்றுடன் கூட்ட, இறப்பு இவை ஐந்து-உண்ணு விரதத்தை நசிக்கச் செய்யும் இறப்பு ஐந்து ஆகும்—எ.று.

(க-ரை) வழிபாடு முதலானவற்றில் ஈடுபாடு இல்லாமை, வீட்டுப் பணிகளில் மனத்தைக் கிளைத்து அலையச் செய்தல் என்ற இரண்டையும் முன் மூன்றுடன் சேர்க்க ஐந்து இறப்புகளாம்.

(வி-ரை) இவ்வைந்தும், அத்ரஷ்ட மரஷ்ட ஆதானம், அத்ரஷ்ட மரஷ்ட உத்சர்க்கம், சமஸ்தரம், அனுதரம், அஸ்மரணம் எனப் பெறும்.

*121* முதல் *126* வரை போசதுபவாசம் பற்றி விளக்கினர். இனி தேசாவகாசிகவிரதம் பற்றி கூறுகிறார்.

## 3. தேசம் கடக்காமை

129. **தேசம் வரைந்தொழுகல், கால வரையறையில்**
**தேசாவ காசிகம் என்**

(இ-ள்) கால வரையறையில்-இத்துணைக் கால அளவும், தேசம் வரைந்து-இன்ன நாட்டிற்கு அப்பால் போவதில்லை என்று வரையறை செய்து கொண்டு, ஒழுகல்-நடத்தல், தேசாவகாசிகம்-தேசாவகாசிக விரதம், என-எனப் பெறும்—எ.று.

(க.ரை) இத்துணைக் கால அளவும் இன்ன நாட்டு எல்லைக்கு அப்பால் செல்லுவதில்லை என்று நாட்டு இடம் வரையறை செய்து கொள்ளுதல் இவ்விரத இலக்கணமாம்.

## தேச வரையறை

130. **மனைச்சேரி, ஊர் புலம் ஆறுஅடவி காதம்**
**இனைய இடம் வரைதல் என்**

(இ-ள்) மனை-இன்ன மனை மட்டும் என்றும், சேரி-இன்ன சேரி மட்டும் என்றும், ஊர்-இன்ன ஊர் மட்டும் என்றும், புலம்-இன்ன நிலம் மட்டும் என்றும், ஆறு-இன்ன ஆறு மட்டும் என்றும், அடவி-இன்ன காடு மட்டும் என்றும், காதம்- இன்ன காதம் மட்டும் என்றும், இனைய-இப்படிப்பட்டவற்றிற்கு, இடம் வரைதல் என்-இடம் வரையறை செய்தல் எனப்படும்—எ.று.

(க-ரை) இன்ன வீடு, தெரு, ஊர், நிலம், ஆறு, காடு, காதம் வரை என எல்லை இட்டு இடங்களை வரையறை செய்து கொள்ளுதல் தேச வரையறையின் பாற்படும்.

## கால வரையறை

131. **ஆண்டொடுநாள், திங்கள், இத்துணை என்றுஉய்த்தல்**
**காண்தகு காலம் அதற்கு**

(இ-ள்) ஆண்டு ஒடு நாள், திங்கள்-இடம், நாடு என்ற வரையறைகளுக்கு, நாளும், திங்களும், ஆண்டும், இத்துணை என்று-இவ்வளவின என்று, உய்த்தல்-வரையறை செய்து நடத்தல், அதற்கு-தேச விரதத்திற்கு, காண் தகு காலம்-கால நியமம் என்று அறியத் தகும்.—எ.று.

(க-ரை) இத்தனை நாள், இத்தனை மாதம், இத்தனை ஆண்டு இன்ன எல்லைக்குப் புறம்பாகச் செல்லுவதில்லை என்று காலவரன் முறை செய்து கொள்ளுதல் வேண்டும்.

(வி-ரை) இட வரையறையை மேலே கூறி காலவரையறையை இங்குக் கூறினர்.

## எல்லைக்குப் புறம்பான பாவம்

132. **எல்லைப் புறத்துஅமைந்த பாவம்ஈண் டாமையின்**
**புல்லுக நாளும் புரிந்து**

(இ-ள்) எல்லைப் புறத்து அமைந்த பாவம்-தான் வரையறை செய்த எல்லைக்குப் புறம்பான நாடுகளில் ஏற்படக்கூடிய பாபங்கள், ஈண்டாமையின்-அவனுக்கு வந்து சேரா: ஆதலால், நாளும் புரிந்து புல்லுக-நாள் தோறும் தாமே விரும்பித் தேச விரதங்களைப் பின் பற்றுவராக.

(க-ரை) ஒருவன் குறிப்பிட்ட எல்லை கட்டிக் கொள்வதால் அவ்வெல்லைக்குப் புறம்பான இடங்களில் நடக்கும் பாபங்கள், அவனை அண்டா. ஆதலால் ஒவ்வொருவனும் தேசவிரதம் மேற் கொள்ளு தல் வேண்டும்.

(வ-ரை) இனி, வரையறைக்குட்பட்ட எல்லைகளின் உள்ளாக வும் புறம்பாகவும் ஐந்து வகைப் பாவங்களும் தம்மைச் சாரமை யினுல் இவ்விரதத்தை நாள்தோறும் விரும்பி ஏற்க என்றும் பொருள் காணினும் அமையும். குறள் 85 இன்உரையை ஒப்பு நோக்குக.

## தேச வரையறைக்கு இறப்பு

133. கூறல், கொணருதல், ஏவல், உருக்காட்டல்
யாது ஒன்றும் விட்டுஎறிதல் கேடு

(இ-ள்) கூறல்-தான் வரையறை செய்து கொண்ட எல்லைக்கு அப்பால் உள்ளவர்களைக் கூவி அழைத்தல், கொணருதல்-புற இடங் களிலிருந்து பொருள்களைக் கொண்டு வருதல், ஏவல்-பிறரை ஏவி அவ் வேலைகளைச் செய்வித்தல், உருக் காட்டல்-அங்கு வேலை செய் பவனுக்கு தன் உருவத்தினைக் காட்டுதல், யாது ஒன்றும் விட்டு எறிதல்--கல், மரம் முதலியவற்றைப் புற எல்லையில் விட்டெறிதல், கேடு-தேச விரதத்திற்கு ஆகாத இறப்புகளாம்,

(க-ரை) எல்லைக்குப் புறம்பே உள்ளவர்களை அழைத்தல், அங்கிருந்து பொருள்களைக் கொண்டு வருதல், அங்கு ஆட்களை அனுப்பி பணி முடித்தல், அவர் அறியும் படி தான் நிற்றல், அவ் வெல்லைகட்குள் கல் முதலாயவற்றை எறிதில் என்பன தேச விரதத் திற்கு ஆகாதன.

(வி-ரை) குறள் 129 முதல் 133 வரை தேசாவகாசிக வதம் பற்றி விளக்கினர். இனி, நான்காம் வகையான அதிதிசம் விபாகம் பற்றி கூறுகிருர். இது வையாவச்சம் விரதம் என்றும் சொல்லப் படும்,

## 4. விருந்தோம்பல்

134. உண்டி, மருந்தோடு, உறையுள், உபகரணம்
கொண்டு உய்த்தல் நான்காம் வதம்

(இ-ள்) உண்டி-உணவையும், மருந்தோடு-மருந்தையும், உறை யுள்-வாழ்விடத்தையும், உபகரணம்-வேண்டிய துணைக் கருவிகளையும் கொண்டு உய்த்தல்-அவரவர்க்கு இயன்றவாறு வழங்குதல் நான்காம்

வறம்-சிட்சா விரதத்துள் நான்காவதாகிய அதிதி சம்விபாகம் ஆகும். எ.று.

(க-ரை) உண்டி, மருந்து, இருப்பிடம், மற்றைய உதவிப் பொருள்களைக் கொடுத்தல் அதிதி சம்விபாகம் எனப்பெறும்.

(வி-ரை) கொண்டு உய்த்தல்-அழகிய தொடர், பொருளை வழங்குதலோடு மட்டும் அன்றி பொருளை பெற்றாரைத் துன்பமின்றி வழிப்படுத்தலும் வேண்டும் என்பதை 'உய்த்தல்' என்ற சொல் லாட்சி பெறவைக்கிறது.

*அருஞ்சுரத்தும் அகன் கானத்தும்*
*வருந்தாமல் நிரையுய்த்தன்று*

எனவரும் **புறப்பொருள்** கொளுவை (10) நினைவு கூர்க.

## துறவிகட்கு அறம் செய்தல் வையா விரதம்

135. *தானம் செயல், வையா வச்சம், அறம்நோக்கி*
*மானம்இல் மாதவர்க்கு நற்கு*

(இ-ள்) அறம் நோக்கி-அறத்தினை ஆராய்ந்து அதனைப் பின் பற்றும் முகமாக, மானம் இல்-செருக்கு இல்லாத, மாதவர்க்கு-துறவிகளுக்கு, நற்கு-நன்றாக, தானம் செயல்முன் குறித்தவற்றை வழங்குதல் வையா வச்சம்-வையாப் பிரத்தியம் எனப்படும். எ.று.

(க-ரை) முற்றும் துறந்த, முனிவர்களுக்கு, நால்வகை தானங் களை இல்லறத்தார் கொடுத்தல் வையா விரதம் எனப்படும்.

(வி-ரை) *'இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை'*

என்பது **திருக்குறள்** *(41)*

136. *இடர்களைதல் உற்றது செய்தலும் ஆங்கே*
*படும்என்ப பண்புடை யார்க்கு*

(இ-ள்) பண்புடையார்க்கு-நற்பண்புகளை உடைய பெரும் துற வறத்தார்க்கும், நற்குண நற்செய்கை வாய்ந்த இல்லறத்தார்க்கும் ஆங்கே-துன்பம் நேரும் போது, இடர் களைதல்-துன்பத்தை நீக்கு தலும், உற்றது செய்தலும்-தன் திறத்திற்கு ஏற்றவாறு அவர்க்கு வேண்டியன செய்தலும், படும் என்ப-முன்னே கூறிய வையாப் பிரத்தியத்திற்பாற்படும் என்பர்—எ.று.

(க-ரை) துறவறத்தாரும், இல்லறத்தாரும் துன்பப் படுகை யில், அதனை அகற்றத் துணை நிற்பதும், வேண்டியன செய்து உதவு வதும் இல்லறத்தார் கடமை ஆகும்.

## உத்தமதானம்

137. **உத்தமர்க்கு ஒன்பது புண்ணியத்தால் ஈவது
உத்தம தானம் எனல்**

(இ-ள்) உத்தமர்க்கு-உத்தமர்களாகிய துறவிகட்கு, ஒன்பது புண்ணியத்தால்-முறையோடு எதிர் கொண்டு அழைத்தல் முதலான ஒன்பது வகைப் புண்ணிய முறைகளினால், ஈவது-கொடுப்பது, உத்தம தானம்-சிறந்த அறக் கொடை, எனல்-எனப்படும்.

(க-ரை) முற்றும் துறந்த முனிவர்க்கு, ஒன்பது புண்ணியங்களை யும் விரும்பிச் செய்தல், சிறந்த அறம், ஆகும்.

**எதிர்கொளல் இடல்நனி காட்டல் கால்கழீஇ
அதிர்பட அருச்சனை அடியின் வீழ்தரல்
மதுரநன் மொழியொடு மனமெய் தூயராய்
உதிர்கநம் வினைஎன உண்டி ஏந்தினர்**

என்பது **சிந்தாமணி** உரை மேற்கோள் பாடல் (1125).

## இரட்டைக் கொடைகள்

138. **உத்தம தானம், தயாதானம் தம்மளவில்
வைத்து ஒழியான் செய்க, உவந்து**

(இ-ள்) உத்தம தானம்-உத்தம தானத்தையும், தயா தானம்-அபய தானத்தையும், தம் அளவில்-அவரவர்க்கு இயன்ற அளவு, வைத்து ஒழியான்-அற நோக்கினின்று நீங்காதவனாய், உவந்து, செய்க-தானே விரும்பிச் செய்வானாக—எ.று.

(க-ரை) துறவிக்கு உணவு முதலானவற்றை அளித்தலும், அனைத்துயிர்களிடத்தும் அன்புடன் இருத்தலும் ஒவ்வொருவனும் விரும்பிச் செய்ய வேண்டுனவாம்.

(வி-ரை) உத்தம தானம்-முன்னே விளக்கப்பட்டது. அபய தானம்-அனைத்துயிர்களையும் நேசித்தல்.

## துறவியர்க்கு வழங்கலின் பயன்

139. **மனைவாழ்க்கையால்வந்த பாவம் துடைத்தல்
மனை நீத்தார்க்கு ஈயும் கொடை**

(இ-ள்) மனைவாழ்க்கையால் வந்த-இல்லற வாழ்க்கையில் நேரும், பாவம் துடைத்தல்-பாவங்களை அகற்றுதலே-கழுவாயே, மனைநீத்தார்க்கு-துறவிகளுக்கு, ஈயும் கொடை-அளிக்கும் அறக் கொடைகளின் பயனும்—எ.று.

(க-ரை) துறவிகளுக்குக் கொடுப்பதால், இல்லற வழி வந்த பாபம் தொலைய வழி ஏற்படும்.

140. **தான விடயத்தில் தடுமாற்றம் போம்துணையும்**
**ஈனம்இல் இன்பக் கடல்**

(இ-ள்) தான விடயத்தில்-முன் கூறிய அறங்களால் உண்டாகும் பயன், தடுமாற்றம்-குடும்பப் பந்தம், போம் துணையும்-விடுபட்டு வீடுபேறு அடைகிற வரையில், ஈனம் இல்-குறைவு இல்லாத, இன்பக் கடல்-கடல் போன்ற பேரின்பத்திற்குக் காரணம் ஆம்.—எ.று.

(க-ரை) குடும்பப் பந்தம் விடுபட்டு, இன்பக் கடலாம் வீடுபேறு நல்கச் செய்வதே கொடை அறங்களின் தலைமைப் பயனாகும்.

(வி-ரை) கொடையால் விளையும் நல்வினை வரவால் கொடையாளர்கள் முக்தி அடையும் வரை பிறப்புகள் தோறும் உயர் பதவிகள் பெற்று முடிவில் முக்தி அடைவர் என்பதாம்.

## எடுத்துக் காட்டுகள்

141. **சிரிசேன், இடபமா சேனையே, பன்றி**
**உரைகோடல், கொண்டை, உரை**

(இ-ள்) சிரிசேன்-உணவளித்தலுக்குச் சிரிசேனனும், இடபமா சேனையே-மருந்து அளித்தமைக்கு விருடபசேனும், பன்றி-இருப்பிடம் தந்தமைக்குப் பன்றியும், உரைகோடல் கொண்டை-நல்ல அறவுரை கூறியதற்குக் குந்தகுந்த ஆச்சாரியரும், உரை-எடுத்துக் காட்டுகள் ஆவர்—எ.று.

(க-ரை) சிரிசேனன் உணவளித்தலுக்கும், விருடபசேனன் மருந்து கொடுத்தலுக்கும், பன்றி-இருப்பிடம் தந்தமைக்கும், குந்த குந்தாச்சாரியார் அறவுரை நல்கியதற்கும் எடுத்துக் காட்டுகள் ஆவர்.

## விருந்தோம்பலை விலக்குவன

142. **பசியதன் மேல்வைத்தல், மூடல், மறைத்தல்**
**புரிவுஇன்மை, எஞ்சாமை கேடு**

(இ-ள்) பசியதன் மேல் வைத்தல்-உணவைப் பச்சை இலைமேல் பரிமாறுதல், மூடல்-உணவைப் பச்சை இலையாலேயே மூடுதல், மறைத்தல்-கெட்டுப்போன நாளான உணவுப் பதார்த்தங்களை அதன் பழைமை சொல்லாது மறைத்துக் கொடுத்தல், புரிவுஇன்மை-

விருப்பம் இன்றிக் கொடுத்தலை, எஞ்சாமை-வயிறு நிறையக் குறை வின்றிக் கொடுக்காமை, கேடு-என்ற ஐந்தும் விருந்தோம்புதலை நசிக்கச் செய்யும் அதிசாரங்களாகும்.

(க-ரை) உணவைப் பச்சை இலைமேல் சுடச்சுடப் பரிமாறுதல், பச்சை இலையாலேயே மூடுதல், பழைய பதார்த்தங்களை மறைத்துக் கொடுத்தல், விருப்பம் இன்றிக் கொடுத்தல், வயிறு நிறையக் கொடுக்கா திருத்தல் என்பன விருந்தோம்பலுக்குரிய அதிசாரங் களாம்.

(வி-ரை) 'பொருளை பச்சை இலைமேல் வைத்தல், பச்சை இலை யால் மூடுதல் விருப்பமின்றி கொடுத்தல் (பிற கொடையாளர் மீது) பொறுமை கொள்ளல் ஆகிய ஐந்தும் வையாவிருத்தியத்தின் இறப்பு களாம்'' என்பது **இரத்தன கரண்டக சிராவாகாசரம்.**

அணுவதம் ஐந்து, குணவதம் மூன்று, சிக்காவதம் நான்கு என 65ஆம் பாடலில் எடுத்து ஓதியவர், குறள் 66 முதல் 142 வரை அப் பன்னிரண்டு வதங்களையும் தொகை வகை விரியான் கூறி முடித்தார்.

## பூசை

143. **தேவாதி தேவன் திருவடிக்குப் பூசனை**
**ஓவாது செய்க உவந்து**

(இ-ள்) தேவாதி தேவன்-தேவர்களுக் கெல்லாம் தலைவனாகிய கடவுளின், திருவடிக்கு-அழகிய அடியிணைக்குப், பூசனை-பூசையை ஓவாது-இடைவிடாது, உவந்து செய்க-விரும்பிச் செய்வாயாக-எ.று.

(க-ரை) இறைவனின் அடியிணைகளை நாள்தோறும் பூசை செய்து பரவிப் போற்றுக.

(வி-ரை) இறைவன்-அருகன். 'உவந்து' என்பது மனம் தானே விரும்பி என்ற கருத்தினை உடையது.

**ஓவாது இரண்டு உவவும் அட்டமியும் பட்டினி விட்டு**
**ஒழுக்கம் காத்தல்**
**தீர்வாத் தவம் என்றார்; தண்மதி போல் முக்குடைக்**
**கீழ்த் தீர்தை பாதம்**
**பூவே புகை சாந்தம் சுண்ணம் விளக்கு இவற்றால்**
**புனைதல் நாளும்**
**ஏவா இவை பிறவும் பூசனை என்று ஈண்டிய நூல்**
**கரை கண்டாரே**

என்ற பாவில் (*சீவகசிந்தாமணி, 1547*) பூசை முறையும் சிறப்பும் போற்றப்பட்டிருத்தலைக் காண்க.

## வழிபாட்டின் வெற்றிக்குச் சான்று

144. **தெய்வச் சிறப்பின் பெருமையைச் சாற்றுமேல்**
**மையுறு தேரை உரை**

(இ-ள்) தெய்வச் சிறப்பின்-தெய்வ வழிபாட்டின், பெருமையை-சிறப்பினை சாற்றுமேல்-எடுத்துக் கூறவேண்டுமானால், மையறு-குற்றமற்ற, தேரை-தவளை வரலாற்றை, உரை-எடுத்துக் காட்டாகச் சொல்லலாம்—எ.று.

(க-ரை) தெய்வ வழிபாட்டின் மேன்மைக்கு, தவளையின் வரலாறே சான்று.

## வடக்கிருந்து உயிர் நீத்தல்

### சல்லேகனை

145. **இடையூறு, ஒழிவு இல் நோய், மூப்பு, இவை வந்தால்**
**கடைதுறத்தல் சல்லே கனை**

(இ-ள்) இடையூறு-தாங்க இயலாத் துன்பம், ஒழிவில் நோய்-எந்த மருந்தினாலும் விட்டு நீங்காத கொடிய நோய், மூப்பு-முதுமையால் நேர்ந்த தள்ளாமை, இவை வந்தால்-என்ற இந்நீங்காத் துன்பங்கள் நேர்ந்தால், கடை துறத்தல்-உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்ற அனைத்தையும் நீத்து உயிர் விடுதல், சல்லேகனை-சல்லேகனை எனப் பெறும்—எ.று.

(க-ரை) தாங்க முடியாத் துன்பம், நீங்கிச் செல்லாக் கொடிய நோய், தள்ளாத முதுமை வந்தால் வடக்கு நோக்கி உண்ணாநோன்பிருந்து உயிர் நீத்தல் சல்லேகனை எனப் பெறும்.

(வி-ரை) தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், நீர், நெருப்பு போன்றவற்றால் துன்பம் சூழ்ந்து (நீலகேசி III) மிகுதியான பஞ்சம் ஏற்பட்ட காலத்தும் வடக்கிருந்து உயிர் நீக்கலாம் என்று கூறுகிறது இரத்தின கரண்டக சிராவகாசாரம். வடக்கிருக்கும் போது, தருப்பைப் புல்லின் மேல் அமர்ந்து சாகிற வரையில் உணவு கொள்ளாமல் இருத்தல் வேண்டும். எதனையும் மனத்தில் நினைக்காமலும் விரும்பாமலும் தூய மனத்தோடு தீர்த்தங்கரர் அல்லது அருகரைத் தியானித்துக் கொண்டிருத்தல் வேண்டும். இவ்வாறு சல்லேகனை செய்வதன் சிறப்பைப் பலநூல்களும் பாராட்டிப் பேசுகின்றன.

அழிவுக் காலத்து அறத்தொடர்ப் பாடு எலாம்
ஒளியல் வேண்டும் என்று ஒற்றுமை தாம் கொளீஇ
வழியும் காட்டும் அம் மாண்புடை யார்கள் மேல்
பழிஇங்கு இட்டு உரைத்தாற் பயன் என்னையோ ?

என்பது நீலகேசிப் பாடல் (மொக்கலவாதச் சருக்கம், 55)

எல்லாப் படியும் விலக்கப் படாதெரியா
வில்ல மழியி லதனகத்தில்-நல்ல
பொருள்கொண்டு போவான்போற் சாம்போது பற்றற்று
அருள் கொண்டு போதல் அறம்

எனவரும் நீலகேசி மேற்கோள் சல்லேகனையை[27] விளக்குகிறது.

---

[27] வடக்கிருந்து இறத்தல் (சல்லேகனை) தற்கொலையி னின்றும் வேறெனஅறிய வேண்டும். உடைமையாளனுக்கு அறம் ஆற்ற உடல் கருவியாகப் பயன்படாது ஒழிந்த நிலை யிலும், இறப்பு ஐயத்திற்கு இடனின்றி உறுதியான பொழுதும், வடக்கிருத்தல் (சல்லேகனை) மேற்கொள்ளப் படுகின்றது. இறத்தலை விரும்பி எதிர்கொள்ளும் அத் தகைய நிலைகளில், வடக்கிருத்தலை மேற்கொள்ளுதலின் நோக்கமே ஆன்ம உயர்ச்சிக்கு நேரே வலியூட்டுவதும், முக்தி முயற்சிக்கு வாய்ப்பில்லாத பிறவிகளில் பிறத்தலைத் தடுத்தலுமே யாகும். வடக்கிருத்தலால் தற்சார்பு, தன்னடக்கம், தன்னில் ஆழ்தல் உற்று, தனக்கு நேரும் துன்பங்களால் சலனம் அடையாது உலகப் பற்றுகளி லிருந்து விலகி உயருகின்றனர். வடக்கிருப்பவர் காட்டும் திண்ணிய மன உறுதியால் ஆன்மாவில் ஏற்படும் விளைவு வியத்தக்க அருமையாகும். தளர்வும் வெறுப்புமான குழப் பத்திலிருந்து தூக்கி அதன் தூய் நிலையை விளக்கம் பெறச் செய்கிறது. வாழ்வின் இறுதி நாட்களில் கூக்குரலிட்டு அழுது இங்கும் அங்கும் அலைந்து தவிர்க்க முடியாத இறப் பைத் தவிர்க்க தன்னாலானவற்றைச் செய்து பயனற்றுப் போகும் மனிதன், இறப்பைத் தவிர்க்க கொள்ளும் முயற் சிகள் பயனற்றவை என உணர்ந்து, தன் விதியை கட்டுப் படுத்த உண்மையாக முயற்சிக்கும் வடக்கிருப்போனை நெருங்கவே முடியாது. விளைவு பின்னவன் உயர்ந்த தேவ பிறவி பெற முன்னவன் துன்பமும் புகழுமற்ற பிறவியில் விழுகிறான்.

---

[27] Ratna-Karanda-Sravakachara English translation; C. R. Jain 1975, p 43-இலிருந்து தமிழாக்கியது.

பழந் தமிழ் நாட்டிலும் இவ்வாறு வடக்கிருந்து உயிர்நீக்கும் வழக்கம் இருந்தது. சங்க இலக்கியச் சான்றுகள் இதனைச் சாற்று கின்றன. போரில் புறப்புண் பெற்றுத் தோற்ற மானம் தாங்காத மன்னன் சேரமான் பெருஞ்சேரலாதனும், (புறநானூறு 65, 66) கோப்பெருஞ் சோழன் என்ற மன்னனும் (புறம் 212-223) புலவரும் பாரியின் இறப்புத் துயரம் தாங்காது வருந்திய கபிலரும் வடக் கிருந்து உண்ணு நோன்பைப் பின்பற்றி உயிர் விட்டவர். சிலப் பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள சைன சமயம் பெண் துறவி, கவிந்தி அடிகள் வடக்கிருந்தே உயிர் நீத்தார். கோவலன், கண்ணகி, மாதரி முதலானோர் இறந்து விட்ட துயரம் தாளாமல் கவுந்தி உண்ணு நோன்பிருந்து உயிர்விட்டார்.

> **தவந்தரு சிறப்பில் கவுந்தி சீற்றம்**
> **நிவந்தோங்கு செங்கோல் நீள்நில வேந்தன்**
> **போகுஉயிர் தாங்கப் பொறைசா லாட்டி**
> **என்னோடு இவர்வினை உறுத்ததோ என**
> **உண்ணு நோன்பொடு உயர்பதி பெயர்ந்ததும்**

என்று கவுந்தியின் உயிர்ப் பிரிவைச் **சிலம்பு** கூறுகிறது.[28]

146. **'இறுவாய்க்கண் நான்கும் பெறுவாம்' என்று எண்ணி**
**மறுஆய நீக்கப் படும்**

(இ-ள்) இறுவாய்க்கண்-வாழ்நாளில் இறுதிக் கட்டத்தில், நான்கும்-அறிவு, காட்சி, இன்பம், வீறு என்ற நான்கு ஆன்ம குணங் களையும், பெறுவாம் என்று-பெறுவோம் என்று, எண்ணி-நினைத்து மறு ஆய-குற்றங்கள் ஆகிய எண்ணங்களை எல்லாம், நீக்கப் படும்-விலக்குதல் வேண்டும்.

(க-ரை) வாழ்நாளின் கடைசிக் காலத்தில் அறிவு, காட்சி இன்பம், வீறு என்ற ஆன்ம குணங்களைப் பெறுவோம் என்று எண்ணி குற்றங் கொண்ட நினைப்புகளை மனத்தை விட்டு நீக்கி விடல் வேண்டும்.

(வி-ரை) சல்லேகனை நோன்பின் போது, மாசுடைய எண் ணங்களை விடுதல் வேண்டும் என்பது குறிக்கோள்.

147. **பற்றெடு செற்றமே அற்றம் தொடர்ப்பாடு**
**முற்றும் துறக்கப் படும்.**

(இ-ள்) பற்றெடு - ஆசையையும், செற்றம் - சினத்தையும், சுற்றம்-உறவினரையும்; தொடர்ப்பாடு-வீடு, நிலம் முதலானவை;

---

28 சல்லேகனை-வடக்கிருத்தல் விரிவாக அறிய விரும்பின் பார்க்க ! ஜைனரின் தமிழிலக்கணம் நன்கொடை; மயிலை சீனி வேங்கடசாமி சமணமும் தமிழும், ப. 180-184.

தொடர்புகளையும், முற்றும் துறக்கப் படும்-முழுதுமாகத் துறந்து விடுதல் வேண்டும்—எ.று.

(க-ரை) சல்லேகனையின் போது, ஆசை, கோபம், உறவு, வீடு முதலான தொடர்பு அனைத்தையும் அறவே துறந்து விடல் வேண்டும்.

(வி-ரை) இப்பாவை எல்லீஸ் எடுத்துக்காட்டி ஆங்கில மொழி யாக்கமும் தருவர்.

All mundane affection, anger, and conection with relations must be totally avoided. (Ellis commentry p. 171)

அகம், புறப் பற்றுகளை விட வேண்டும் என்பதாம்.

148. **ஆலோ சனையின் அழிவுஅகற்றி, மாதவன்கண்**
**மீள்வு இன்றி ஏற்றுக் கொளல்**

(இ-ள்) ஆலோசனையின் அழிவு அகற்றி-சல்லேகனை நோன்பின் போது, உயிர் துறக்கும் கடுமையான நோன்பு ஆதலால் இடைத் தடைகள் நேரும்; அவற்றை சிந்தனை வன்மையால் விலக்கி, மாதவன் கண்-மனத்தில் ஏற்பட்ட தடுமாற்றத்தைத் தம்மை வழிப் படுத்தும் பெருந் துறவியிடம், ஒளிக்காமல் எடுத்துக் கூறி, மீள்வு, இன்றி-விடுபாடு-மீட்பு என்று இல்லாமல், ஏற்றுக் கொளல்-வடக் கிருத்தலால் வரும் சாவை இனிதே ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் —எ.று.

(க-ரை) சிறந்த பெருந் துறவியர்தம் அறிவுரை கேட்டுத் தடுமாற்றம் இன்றி சல்லேகனையைச் சரியாகக் கடைப் பிடித்தல் வேண்டும்.

(வி-ரை) ஏற்றுக் கொளல்-சாவை இனிதே ஏற்றல் என்பதன்றி, சல்லேகனைக்குரிய முறைகளைப் பின்பற்றல் வேண்டும் என்றும் கூறலாம்.

149. **கசிவு, கலக்கம் அகற்றி, மனத்தை**
**ஒசியாமல் வைக்க உவந்து**

(இ-ள்) கசிவு-இளக்கம், கலக்கம்-மனக் குழப்பம், அகற்றி-(என்பன வரும், அவை வராமல் காத்து) வந்தால் அகற்றி, மனத்தை-உள்ளத்தை, ஒசியாமல்-நெகிழாமல், உவந்து வைக்க-மகிழ்ந்து வைத்திடுதல் வேண்டும்.—எ.று.

(க-ரை) சல்லேகனையின் போது, மனத்தை அலைக் கழிக்கும் இளக்கம், குழப்பம் இவற்றைத் தவிர்த்து நெகிழாமல் மகிழ்ந்து நிற்றல் வேண்டும்.

(வி-ரை) சல்லேகனை என்பது எளிதான ஒன்றன்று. சாவை விரும்பி மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளும் மனோ நிலை அது. ஆதலால், உலகத் தீனிகளை உண்டு பழகிய யானைப் புலன்களைக் கட்டுப் படுத்தல் வேண்டும். கசிவினை சிறிக்தபரிணாமம் என்பர்.

## உண்ணாமை-பருகாமை

150. **ஊணொடு பானம் முறைசுருக்கி, ஓர்ந்துஉணர்ந்து மானுடம்பு வைக்கப் படும்**

(இ-ள்) ஊண் (ஒடு) பானம்-திட உணவையும், திரவ உணவையும், முறை சுருக்கி-முறையாக மெல்ல மெல்லக் குறைத்து, ஓர்ந்து உணர்ந்து-மறு பிறவிகளுக்குத் துணையாகக் கூடிய அறங்களை நினைந்து நினைந்து உணர்ந்து, மானுடம்பு-மனித உடலை, வைக்கப் படும்-கலக்கம் இல்லாமல் வைத்தல் வேண்டும்.—எ.று.

(க-ரை) உணவு, பானம் முதலானவற்றைச் சிறுகச் சிறுகக் குறைத்துக் கொண்டு முடிவில் அறவே உணவு அனைத்தையும் நிறுத்தி விடல் வேண்டும்.

(வி-ரை) உணவை முதலில் நிறுத்திப் பின்னர் தண்ணீர் பருகுதலையும் நிறுத்தி விடவேண்டும்.

151. **மந்திரங்கள் ஐந்தும் மனத்துவரச் சென்றார்கள் இந்திரற்கும் இந்திரரே என்**

(இ-ள்) மந்திரங்கள் ஐந்தும்-அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்கள் ஆகிய ஐவரையும் வணங்குதற்குரிய அ, சி, ஆ, உ, சா என்கின்ற ஐந்து எழுத்துக்களையும், மனத்துவர-உள்ளத்தில் பொருந்தும் படி ஜபித்துக் கொண்டே, சென்றார்கள்-சல்லேகனை இருந்து உடலை விட்டவர்கள், இந்திரற்கும்-தேவ இந்திரனுக்கும் இந்திரரே-மேலான ஜிநேந்திரர் ஆவர், என்-என்று கூறப் பெறும்.

(க-ரை) ஐவரை நினைந்து ஐந்து எழுத்துக்களை ஓதிக் கொண்டே வடக்கிருந்து உயிர் நீத்தவர்கள் வரும் பிறவியில் இந்திரர்க்கும் மேலான சிநேந்திர பதவி பெறுவர்.

(வி-ரை) ஐவரையும் குறிக்க ஐந்து மந்திரங்கள்! அவையாவன:

1. அ—ஓம் நமோ அருகந் தாணம்.
2. சி—ஓம் நமோ சித்தாணம்.
3. ஆ—ஓம் நமோ ஆயிரியாணம்.
4. உ—ஓம் நமோ உவஜ்ஜாயாணம்.
5. சா - ஓம் நமோலோயே சவ்வசாகூணம்.

## சல்லேகனையின் இறப்பு

152. சாவொடு வாழ்க்கையை அஞ்சித்தான் மெச்சுதல்
வாழ்வொடு நட்டார் நினைப்பு

(இ-ள்) சாவொடு (அஞ்சி) - வாழ்நாள் நீண்டு வாழாமல் இடையே இறக்கிறோமே என்று அஞ்சுதல், வாழ்க்கையை அஞ்சி - தொல்லை தாளாது விரைந்து இறத்தல் வேண்டும் என்று கருதி வாழ்விற்கு அஞ்சுதல், தான் மெச்சுதல் - சல்லேகனை நெறி பிறழாமல் நிற்பவன் நானே, என்று தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளல், வாழ்வொடு நட்டார் நினைப்பு - தன் கடந்த கால வாழ்வொடு நெருங்கிப் பழகியவர்களை விட்டுச் செல்கிறோமே என்று நினைந்து வருந்துவது ஆகிய இவை நான்கும் சல்லேகனைக்குரிய தோஷங்களாம்.

(க-ரை) சாவிற்கும் அஞ்சுவது, வாழ்விற்கும் அஞ்சுவது, தன் சல்லேகனைதன்னைத் தானே பாராட்டிக் கொள்வது, கடந்த வாழ்வு உடன் உறைந்தவர்களை நினைப்பது என்பன சல்லேகனைக் குரிய இறப்புகளாம்.

(வி-ரை) இப்பாடல் குளகம். வரும் பாடலுடன் முடிகிறது.

153. நிதானத்தோடு ஐந்து இறப்பும் இன்றி முடித்தார்
பதானம் அறுத்தார் எனல்

(இ-ள்) நிதானத்தோடு—பின் தன் நிலை இங்ஙனம் இருத்தல் வேண்டும் என்ற நினைவுடன் கூட, ஐந்து இறப்பும்-ஐந்து அதிசாரங் களும், இன்றி-இல்லாமல். முடித்தார்-சல்லேகனை முடித்தவர்கள், பதானம் - பிறவிக்கு முதன்மைக் காரணங்களான. பொருள், இடங், காலம், பிறப்பு, பாவம் என்பவற்றை, அறுத்தார்-கெடுத்தவர்கள், எனல்-என்று கூறப் பெறுவர். எ-று.

(க-ரை) நிதானம் என்பவற்றுடன் ஐந்து இறப்புகளையும் தவிர்த்துச் சல்லேகனை இருந்தவர் பிறவி அறுத்தவர் ஆவர்,

(வி-ரை) பதானம்-முக்கியம்; முக்கியப் பஞ்ச பரிவர்த் தனைகள்; அவையாவன: திரவியம், க்ஷேத்திரம், காலம், பவம், பாவம் என்பன.

சல்லேகனை பற்றி 145-153ஆம் பாடல்கள் வரை விளக்கியவர், இனி, அறப்பயன்களை 154-160ஆம் பாடல்களில் விளக்குவர்.

## அறத்தின் பயன்

154. *அறத்துப் பயனைப் புராண வகையில்*
*திறத்துஉள்ளிக் கேட்கப் படும்*

(இ-ள்) அறத்துப் பயனை—அறத்தின் பயனை, புராண வகையில் புராணம் முதலிய நூல்களினால், திறத்து உள்ளி—நன்கு ஆராய்ந்து, கேட்கப்படும்—கேட்டல் வேண்டும்.

(க-ரை) புராணம் முதலான நூல்களினால் அறத்தின் பயனை நன்கு கேட்டல் வேண்டும்.

155. *பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு நான்கும்*
*அறுத்தல் அறத்தின் பயன்*

(இ-ள்) பிறப்பு—பிறப்பையும், பிணி—நோயையும், மூப்பு-முதுமையையும், சாக்காடு - சாவையும் என்ற, நான்கும் - நான்கையும், அறுத்தல்-அகற்றி ஒழித்தல், அறத்தின் பயன்-அறத்தைக் கைக்கொண்டதன் பயனாகும்.

(க-ரை) பிறப்பு, நோய், முதுமை, சாவு என்ற நான்கையும் அறுத்தல் அறநோக்காம்.

> 'பிறப்பு இறப்பு மூப்புப் பிணிகள்எனும் துன்பம்
> உறப்புணர யான்உழக்கும் காலை

என்பது திருக்கலம்பகம் (16). பிறப்பு. முதலாயின பிறவியால் நேருவன; அவற்றை அறுத்தலாலது பிறவியை அறுத்தலாம்.

156. *பரிவு நலிவினொடு அச்சமும் இல்லை*
*உருவின் பிறப்புஇல் லவர்க்கு*

(இ-ள்) உருவின் - உருவத்தினை உடைய, பிறப்பு - பிறப்பினை-இல் அவர்க்கு - பெறுதவர்களுக்கு, பரிவு - விருப்பமும், நலிவினோடு-வருத்தமும், அச்சமும் - அஞ்சுதலும், இல்லை-இல்லா தொழியும்-எ.று.

(க-ரை) பிறப்பு எய்தாதவர்கட்கு, ஆசை, வருத்தம், அச்சம் என்பன இல்லை.

(வி-ரை) முக்த ஜீவன்கள் - பிறப்பில்லவர் என்று குறிக்கப் பெற்றனர்.

157. *கிட்டமும் காளிதமும் நீக்கிய பொன்போல*
*விட்டு விளங்கும் உயிர்*

(இ-ள்) உயிர் - முன்னே கூறப்பெற்ற பிறப்பில்லவர், கிட்டமும் - குற்றமும், காளிதமும் - கறையும், நீக்கிய - அகற்றின

பொன் போல - பொன்னைப் போல, விட்டு விளங்கும் - நின்று ஒளிருவர்.

(க-ரை) புடம் போட்டுக் குற்றமும், கறையும் நீங்கின பொன்னைப் போல, பிறப்பறுத்தவர் நின்று சிறப்பர்.

(வி-ரை) களிம்பு, மாற்று இவை பொன்னுடன் அனாதி தொடர்புடையன. பொன்னோடு தொடர்பு பெற்ற இவை கிட்ட காளிதம் எனப்படும். பொன்னை புடம் போட்டு காய்ச்சினால் இவை நீங்கிவிடும். இவை நீங்கிய பொன் தன் தூய குணங்களால் ஒளிருதல் போல முக்தி உயிர் ஒளிரும் என்பதாம். பொன்னோடு தொடர்புடைய கிட்ட காளிதம் போல உயிரோடு அனாதியாக தொடர்புடையன கர்மாணுக்கள். ஞான மறைப்பு முதலான அக் கரும அணுக்களை நீங்கிய காலத்து உயிரும் தன் தூய குணங்களால் செம்பொன் ஒத்து ஒளிரும் என்பதாம்.

158. **எல்லையில் இன்பம் உணர்வு வலிகாட்சி**
**புல்லும் வினைவென் றவர்க்கு**

(இ-ள்) வினை வென்றவர்க்கு-நல்வினை தீவினை அறுத்தவர்க்கு, எல்லையில் இன்பம் - அனந்த சுகம், உணர்வு - அனந்த ஞானம், வலி - அனந்த வீர்யம், காட்சி - அனந்த தரிசனமும் புல்லும் - வந்தடையும் எ.று.

(க-ரை) பிறப்பில்லவரை, அனந்த இன்பம், உணர்வு, வன்மை, காட்சி ஆகியன சென்று சேரும்.

(வி-ரை) எல்லை - முதல் நிலைத் தீவகம்.

**காதி நான்மை கடந்தோய் நீ!**
**கடையின் நான்மை அடைந்தோய் நீ!**

என்பது **மேருமந்தர புராணம்** (807).

நல்வினை தீவினை அறுத்தலாவது, ஞான மறைப்பு முதலான கர்மங்களிலிருந்து விடுதலை பெறுதல்.

159. **உலக மறியினும் ஒன்று மறியார்**
**நிலைய நிலைபெற் றவர்**

(இ-ள்) நிலைய நிலை - என்றும் அழியா நிலைபேறாகிய வீடு பேற்றை, பெற்றவர் - அடைந்தோர்-சித்த பரமேஷ்டிகள், உலகம்- இவ்வுலகமானது, மறியினும் - தலைகீழாக மாறினும் ஒன்றும் மறியார் - ஒரு பொழுதும் எக்காரணத்தைக் கொண்டும் திரும்பப் பிறவியைப் பெறார். எ.று.

(க-ரை) உலகமே தலைகீழாகப் போனாலும், முன்னமே வீடு பேறு அடைந்தவர், மீண்டும் பிறவியில் வந்து உழலார்.

(வி-ரை) அருந்தவன் திரிந்து வாராக் கதி' என்றார் **மேரு மந்தர புராண ஆசிரியர்.**

160. **மூவுலகத்து உச்சிச் சூளாமணி விளக்குத்
தோவகையில் சித்தி யவர்**

(இ-ள்) தோவகை இல்-குற்றம் இல்லாத, சித்தியவர்-பிறப்பில்லவர், மூவுலகத்து உச்சி-மூன்று உலகிற்கும் மேலான வீட்டுலகில், சூளாமணி விளக்கு-இரத்தினத் தீபம் போல ஒளிருவர்—எ.று.

(க-ரை) சித்த பரமேட்டிகள், மூன்று உலகிற்கும் மேலான மோட்சத்தில் சூளாமணி போல ஒளிர்ந்து கொண்டிருப்பர்.

(வி-ரை) **'மூவுலகின் உச்சி கணகழல் அரச நிற்றல் கைவலம் ஆகும் கண்டாய்** என்பது மேருமந்தரபுராணம் (100).

மூவுலகம்-கீழ் உலகம் (அதோ லோகம்) நடு உலகம் (மத்தியம லோகம்) மேல் உலகம் (ஊர்த்துவ லோகம்).

அறப்பயனை 154-160 வரை விளக்கியவர், இனி 161-173 வரை இல்லறத்தார்தம் பதினொரு நிலைகளை விளக்குவர்.

## இல்லறத்தார்

161. **பதினோர் நிலைமையர் சாவகர் என்று
விதியின் உணரப் படும்**

(இ-ள்) சாவகர்-சிராவகர் என்ற இல்லறத்தார், பதினோர் நிலைமையர்-தர்சனிகன் முதலாக உத்திஷ்ட பிண்ட விரதி ஈறுகப் பதினொரு நிலைமையினர், என்று-என்று, விதியின் உணரப்படும்-நூல் பிரமாணத்தால் அறியப்பெறும்,

(க-ரை) இல்லறத்தார் நிலைகள் பதினொன்று என்று நூல்கள் கூறும்.

(வி-ரை) இல் வாழ்வார் பதினொரு நிலைமை உடையவர்கள். அவற்றைப் பதினொரு குறள்களில் இனி விளக்குகிறார்.

### தரிசனிகன்

162. **காட்சியில் திண்ணனாய், சீல விரதம்இலான்
மாட்சிஉறு தரிசன் ஆம்**

(இ-ள்) காட்சியில்-நற்காட்சியில், திண்ணனாய்-திண்மை உடையவனாக, சீல விரதம்-அணு விரதம், குணவிரதம், சிட்சா விரதம் முதலான ஒழுக்கங்களை, இல்லான்-பெறாதவன், மாட்சி உறு தரிசன்-பெருமை வாய்ந்த தரிசனத்தை உடையவன், ஆம்-ஆவான்;

*(க-ரை)* நற்காட்சி மட்டுமே உடையவன் தரிசனிகன் ஆவான்.

> **'காட்சி எனும் பெயர் கதிர் விளக்கு ஏற்றிய**
> **மாட்சி உடையார் வதமிலர்'** —சூளாமணி துறவு, 178

## விரதிகன்

163. **வதம் ஐந்தும், சீலம்ஓர் ஏழும் தரித்தான்**
**விதியால் விரதி எனல்**

*(இ-ள்)* வதம் ஐந்தும்-அணு விரதங்கள் ஐந்தையும், சீலம் ஓர் ஏழும்-குண விரதம் மூன்று, சிட்சா விரதம் நான்கு என்ற ஏழையும், தரித்தான்-ஒருங்கே கடைபிடிப்பவன், விதியால்-நூல் விதிகளால், விரதி எனல்-விரதிகன் எனப் பெறுவான்.

*(க-ரை)* அணுவிரதம் ஐந்து, குண விரதம் மூன்று, சிட்சா விரதம் நான்கு என்பவற்றை மட்டும் உடையவன் விரதிகன் எனப் படுவான்.

*(வி-ரை)* நற்காட்சி உடையவனுகி அணுவிரதம், குணவிரதம் சிட்சா விரதங்களைக் கொண்டு நிற்பவன் விரதி. இவன் இரண்டாம் நிலை சாவகன்.

## சாமாயிகன்

164. **எல்லியும், காலையும் ஏத்தி நியமங்கள்**
**வல்லியான் சாமா யிகன்**

*(இ-ள்)* எல்லியும்-இரவிலும், காலையும்-பகலிலும், ஏத்தி-ஆன்ம குணங்களைப் போற்றி, நியமங்கள்-நாள் தோறும் காலம் பிறழாமல் நியமம் செய்யும், வல்லியான்-வல்லமை உடையவன், சாமாயிகன்-சாமாயிகன் எனப் படுவான் —எ-று.

*(க-ரை)* மேற்கொண்ட நியமங்களை முறை பிறழாமல் காலம் பிறழாமல் நிகழ்த்துகிறவன் சாமாயிகன் எனப் பெறுவான்.

*(வி-ரை)* நியமம்-சாமாயிகம் செய்தல். சாமாயிகன் மூன்றும் நிலை சாவகன்.

## போசதுபவாசன்

165. **ஒரு திங்கள், நால்வகைப் பவ்வமே, நோன்பு**
**புரிபவன் போசன் ஆம்**

*(இ-ள்)* ஒரு திங்கள்-ஒரு மாதத்தில், நால் வகைப் பவ்வமே-நான்கு திதிகளில், நோன்பு புரிபவன்-நோன்பு நோற்பவன் போசன் ஆம்-போசதுபவாசன் ஆவான்.

(க-ரை) மாதம் நான்கு முறை உண்ணு நோன்பு இருப்பவன் போசன் ஆவான்.

(வி-ரை) வளர் பிறை அட்டமி, சதுர்தசி- தேய்பிறை அட்டமி, சதுர்தசி, ஆக ஒரு திங்களில் நான்கு நாட்கள். பவ்வம்-காலம். நான்கு நாள் உண்ணு நோன்பு விரதத்தினை உடையவன் போசதுபவாசன். இவன் நான்காம் நிலை சாவகன்.

## அச்சித்தன்

166. **பழம், இலை, காயும், பசிய துறந்தான்**
**அழிவு அகன்ற அச்சித்தன் ஆம்**

(இ-ள்) பசிய-பசுமை வாய்ந்த, பழம்-பழங்களையும், இலை-இலையையும், காயும்-காய்களையும், துறந்தான்-உண்பதில்லை என்று வரம்பு செய்து கொண்டவன், அழிவு அகன்ற-குற்றம் இல்லாத, அச்சித்தன்-சச்சித்த விரதி எனப் பெறுவான்.

(க-ரை) பழம், இலை, காய் முதலான வற்றைத் துறந்தவன் அச்சித்தன் ஆவான்.

(வி-ரை) அச்சித்தன் ஐந்தாம் நிலை சாவகன்.

## இரவு உண்ணுன்

167. **இருளின்கண் நால்வகை ஊணும் துறந்தான்**
**இராத்திரிஅ புக்தன் எனல்**

(இ-ள்) இருளின்கண் - இராப் பொழுதில், நால் வகை ஊணும் - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்ற நால் வகைப்பட்ட உணவுகளையும், துறந்தவன் - முழுதுமாகத் துறந்தவன், இராத்திரி அபுக்தன் எனல் - இரவு உண்ணுன் எனப்படுவான்.

(க-ரை) இராப்போது உண்ணுதவன் இராத்திரி அபுக்தன் ஆவன்.

(வி-கு) இரவில் நான்குவகை உணவுகளையும் உண்பதில்லை என்று விட்டவன் இராத்திரி அபுக்தன். இவன் ஆறும் நிலை சாவகன்.

## பிரமசாரி

168. **உடம்பினை உள்ளவாறு ஓர்ந்து உணர்ந்து, காமம்**
**அடங்கியான் பம்மன் எனல்**

(இ-ள்) உடம்பினை - உடலை, உள்ளவாறு - உள்ளது உள்ள படியே, ஓர்ந்து - அழுக்குக்கூடை என்பதை ஆராய்ந்து, உணர்ந்து-

அறிந்து, காமம் அடங்கியான் - பெண் விருப்பத்தை அடக்கியவன், பம்மன் எனல் - பிரமசாரி எனப் பெறுவான்!

(க-ரை) காம உறவை தவிர்த்தவன் பிரமசாரி ஆவான்.

(வி-ரை) பம்மன் ஏழாம் நிலை சாவகன்.

## அநாராம்பன்

169. **கொலை வரும் ஆரம்பம் செய்தலின் மீண்டான்**
**அலகில் அநாராம்பன் எனல்**

(இ-ள்) அலகு இல் - எண்ணிக்கை இல்லாமல், கொலை வரும்- கொலைகளுக்குக் காரணம் ஆகும், ஆரம்பம் - தொழில்களைச், செய்தலின் - செய்வதினின்று, மீண்டான் - மீண்டவன், அநாராம்பன் - அநாராம்பன் ஆவான்.—எ.று.

(க-ரை) கொலைக்குக் காரணமான தொழில்களைத் தீண்டாதவன் அநாராம்பன் ஆவான்.

(வி-ரை) ஆரம்பம் - தொழில், அநாரம்பம் தொழில் செய்யாமை, அநாரம்பன் - தொழில் செய்தலைத் தவிர்த்தவன். இவன் எட்டாம் நிலை சாவகன்,

## அபரிக்கிரகன்

170. **இருதொடர்ப் பாட்டின்கண் ஊக்கம் அறுத்தான்**
**உரியன் அபரிக் ரகன்**

(இ-ள்) இரு தொடர்ப் பாட்டின்கண் - மனை, வீடு, முதலிய பத்து வெளித் தொடர்புகளையும், மித்யாத்வம் முதலிய பதினான்கு உள் தொடர்புகளையும், ஊக்கம் - வைத்துக் கொள்ளும் ஆர்வத்தை, அறுத்தான் - அகற்றி ஒழிந்தவன், அபரிக்கிரகன் உரியன் - அபரிக்கிரகன் என்பதற்கு உரியனவன்.

(க-ரை) உறவுகளையும், பொருள் உரிமைகளையும் அறுப்பவனே அபரிக்கிரகன் என்ற பெயருக்கு உரியவன்.

(வி-ரை) அபரிக்ரகன் ஒன்பதாம் நிலை சாவகன்

## அனனுமதன்

171. **யாதும் உடம்பாடு வாழ்க்கைக்கண் இல்லவன்**
**மாசுஇல் அனனு மதன்**

(இ-ள்) வாழ்க்கைக்கண் - இல்வாழ்க்கையில், யாதும் உடம்பாடு - இல்லவன் - சிறிதும் உலகியல் தொடர்புகள் இல்லாதவன் மாசு இல் - குற்றம் இல்லாத - அனனுமதன் - அனனுமதனுவான்.

(க-ரை) இல்வாழ்க்கை உலகியல்களில் ஈடுபாடு, பிடிப்பு இல்லாதவனே அனனுமதன் ஆவான்.

(வி-ரை) அனுனுமதன் அனுமத விரதி என்றும் குறிக்கப்படுவான். இந்நிலை எய்தியவன் உலகியல் தொடர்பானவைப் பற்றி அறிவுரையும் கூட வழங்க மாட்டான். இவன் பத்தாம் நிலை சாவகன்.

## உத்திட்ட பிண்டன்

172. மனைதுறந்து, மாதவர் தான்அடைந்து, நோற்று,
வினைஅறுப்பான் உத்திட்டன் ஆம்

(இ-ள்) மனை துறந்து - வீடு முதலியவற்றை விட்டு விட்டு, மாதவர் தாள் அடைந்து - பெருந் துறவியரின் திருவடிகளைச் சேர்ந்து, நோற்று - எல்லா நோன்புகளையும் நோற்று, வினை அறுப்பான் - வினைப்பந்தங்களை அறுக்க முயல்கிறவன், உத்திட்டன் ஆம் உத்திட்ட பிண்ட விரதி ஆவான்.

(க-ரை) வீடு மனைவி மக்களைத் துறந்து, பெரும் தவசியை அடைந்து நோன்பு இருப்பவன் உத்திட்ட பிண்டவிரதி ஆவான்.

(வி-ரை) சாவக வாழ்க்கையில் பதினோராம் நிலை எய்திய சாவகன் துறவின் வாயிற்படியில் நிற்கிறான். இந்த நிலையில் அவன் தன் இல்லறத் தொடர்புகளை எல்லாம் அறுத்துக்கொண்டு முனிவரைச் சார்ந்து கோவணமும் ஓராடையும் உடையவனாகிறான். சாவகர்களுக்குக் கூறப்பட்ட விரதங்கள் அனைத்தையும் மேற்கொள்கிறான். தனக்கு என்று உணவைப் படைத்துக் கொள்ளாமல் முனிகள் போல் இரந்து உண்கிறான். எப்பொழுதும் தியானங்களில் ஆழ்கிறான். ஓராடை உடுக்கின்ற இவனை நூல்கள் 'சுல்லக்' என்று குறிப்பிடுகின்றன.

## பதிெனாரு நிலைகளின் இயல்பு

173. முன்னைக் குணத்தொடு தம்தம் குணம்உடைமை
பண்ணிய தானம் எனல்

(இ-ள்) பன்னிய-முன்பு கூறப்பட்ட, (ஸ்)தானம்-பதினோரு நிலைகளையும், முன்னைக் குணத்தொடு-முன்னையவற்றில் கூறப்பட்ட குணங்களோடு, தத்தம் குணம்-அந்த அந்த நிலைக்குக் கூறப்பட்ட குணங்களையும், உடைமை எனல்-உடையவனாய் இருத்தல் வேண்டும் என்று சொல்லல் வேண்டும்.

(க-ரை) பதினொரு நிலைகளில் அந்த அந்த நிலைக்குக் கூறப் பெற்ற குணங்களுடன் கூட, முன்னையவற்றிற்கு கூறப்பட்ட குணங் களோடும் உடையவனாக இருத்தல் வேண்டும்.

(வி-ரை) அதாவது, இரண்டாவது நிலையில் முதல் நிலைக்குக் கூறிய குணமும் இருத்தல் வேண்டும். முதல் நிலைக்குக் கூறிய குணம் இல்லாமல் இரண்டாவது நிலை கூடாது என்க. இவ்வாறே பிறவற்றிற்கும் கொள்க. ஆதலின் பதினோராவது நிலையில், அதற்கு முந்திய ஒன்று முதல் பத்து நிலைகளுக்குரிய குணங்களும் உடன் அமைந்து இருத்தல் வேண்டும். இனி, 174—180 வரை அருங்கலச் செப்பு என்ற நூலின் சிறப்பு, பயன் கூறப்படுகின்றன.

## நூலை உணரும் முறை

174. **பாவம், பகையொடு, சுற்றம் இவை சுருக்கி**
**மோவமோடு இன்றி உணர்**

(இ-ள்) பாவம் - பாவச் செயல்களையும், பகையொடு - பகை மையையும், சுற்றம் - உறவுகள் மேல் உள்ள பற்றையும், இவை சுருக்கி - என்ற இவற்றை முறையாகச் சிறுகச் சிறுகக் குறைத்து, மோவமோடு இன்றி - அறியாமையையும் மயக்கத்தையும் தவிர்த்து, உணர் - இந்நூலில் கூறப்பட்டுள்ள செய்திகளை அறிந்து கொள் வாயாக—எ.று.

(க-ரை) பாவம், பகை, உறவு என்பவற்றை மெல்ல மெல்லக் குறைத்து, அறியாமை இன்றி அருங்கலச் செப்பு என்ற இந்நூலைக் கற்று அறிக.

(வி-ரை) முன்பு கூறப் பெற்ற நூலுக்கும், இங்கே கூறப் பெற்றதற்கும் வேறுபாடு! முன்னது; பொது; ஆகம சாஸ்திரங் களைப் பற்றியது, இங்குள்ளது, இந்நூலைப் பற்றியது.

## அருங்கலச் செப்பின் சிறப்பு

175. **அருங்கலச் செப்பினை ஆற்றத் தெளிந்தார்**
**ஒருங்கு அடையும் மாண்பு திரு**

(இ-ள்) அருங்கலச் செப்பினை - அருங்கலச் செப்பு என்ற இந்நூலினை, ஆற்ற - மிகவும், தெளிந்தார் - அறிந்து கொண்ட வர்க்கு, மாண்பு - பெருமை உடைய, திரு-தேவ, மானவ, மோட்ச சாம்ராச்சியம், ஒருங்கு அமையும் - ஒன்றாய் வந்து சேரும்.

(க-ரை) இந்நூலைக் கற்பார்க்கு எல்லாப் பதமும் வரும்.

176. **வந்தித்து ஆய்ந்து, ஓதினும், சொல்லினும், கேட்பினும்
வெந்து வினையும் விடும்**

(இ-ள்) வந்தித்து - அருங்கலச் செப்பு என்ற இந்நூலை வழி பட்டு, ஆய்ந்து - ஆராய்ந்து, ஓதினும் - மீண்டும் ஓதினாலும், சொல்லினும் - பிறருக்கு எடுத்துச் சொன்னாலும், கேட்பினும் - பிறர் சொல்லக் கேட்டாலும், வினையும் - அவரைப் பற்றியுள்ள கர்ம பந்தம், வெந்து-எரிந்து, விடும்- அவரை விட்டு நீங்கி விடும்.— எ.று.

(க-ரை) அருங்கலச் செப்பை ஓதினும், பிறர்க்குப் பயிற்று விப்பினும், பிறர் சொல்லக் கேட்பினும் ஒருவருடைய வினைகள் விலகும்.

## அருங்கலச் செப்பின் பயன்

177. **தப்பினில் மீளா, கடுந்தவம் நீர்உற்ற
உப்பினில் மாய்ந்து கெடும்**

(இ-ள்) தப்பினில்—தவறுகளில், மீளா—மீண்டு, கடும் தவம்- கடுமையான தவ நோன்புகளை ஒழுங்குறப் பின்பற்றினால் அவனு டைய தீவினைகள், நீர் உற்ற உப்பினில் - தண்ணீரிலே போடப் பெற்ற உப்பினைப் போல, மாய்ந்து கெடும் - மறைந்து கெட்டுப் போகும்.—எ.று.

(க-ரை) அருங்கலச் செப்பில் கூறிய ஒழுக்கங்களைப் பிழை யின்றிப் பின்பற்றினால், நீரினுள் கரைந்து குறைந்து அழியும் உப்பைப் போல, ஒருவனது வாழ்க்கையில் வினைகள் அழியும்.

178. **காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றின்
நாமம் கெடக்கெடும் நோய்**

(ப-ரை) காமம் - ஆசை. வெகுளி-சீற்றம், மயக்கம்-மோகம் இவை மூன்றின் - இம் மூன்றினுடைய நாமம்-பெயர் கெட - கெட்டு விட, நோய் - பிறவியாகிய நோய், கெடும் - கெட்டு விடும்.

(க-ரை) காமம், சீற்றம், மோகம் என்ற மூன்றும் அழிய பிறவி நோய் இனித் தொடராது.

(வி-ரை) இப்பா திருக்குறள். மூன்றும் இராகம் துவேஷம் மோகம் - என்றும் குறிக்கப் பெறும்.

179. **முத்தி நெறிகாட்டும் முன்னறியா தார்க்கெல்லாம்
சித்தி அருங்கலச் செப்பு**

(இ-ள்) சித்தி - விருப்பங்களை ஈடேற்ற வல்ல, அருங்கலச் செப்பு - அருங்கலச் செப்பு என்னும் இந்த நூல், முன் அறியா

தார்க்கு எல்லாம் - முன்னே வீடு பேற்றின்பம் அறிந்துகொள் ளாதவர் அனைவர்க்கும், முத்தி நெறி-வீடு பேற்று வழி இது என்று, காட்டும் - காண்பிக்கும்.

(க-ரை) அருங்கலச் செப்பு, முத்தி நெறியைக் காட்டவல்லது.

180. **தீரா வினை தீர்க்கும் சித்திபதம் உண்டாக்கும்**
**பாரய் அருங்கலச் செப்பு**

(இ-ள்) அருங்கலச் செப்பு - அருங்கலச் செப்பு என்ற இந்நூல், தீரா வினை தீர்க்கும் - எளிதில் விட்டு நீங்காத வினைகளின் பிடிகளி லிருந்து விடுவிக்கும்; சித்திபதம் - வீடு பேற்றையும், உண்டாக்கும்- பெற்றுத்தரும், ஆதலால் பாராய் - இந்நூலை நான்கு ஆராய்ந்து பார்ப்பாயாக.

(க-ரை) அருங்கலச் செப்பு, வினைதீர்க்கும்; வீடு ஆக்கும் ஆய்ந்து அறிக.

181. **நச்சரவு அணிநிழல் பச்சைமா மலைதனை**
**நிச்சலும் நினைப்பவற்கு அச்சம் இல்லையே!**

(இ-ள்) நச்சு அரவு - நச்சுப் பாம்பினுடைய, அணி நிழல் - அழகிய அகன்ற படத்தின் நிழலில் அமர்ந்திருக்கும், பச்சைமாமலை தனை - பச்சைமலை போன்ற உருவம் உடைய பார்சுவநாத தீர்த்தங் கரரை, நிச்சலும் - நாள்தோறும், நினைப்பவர்க்கு-வழிபடுபவர்க்கு, அச்சம் - பிறவி அச்சம், இல்லை - இல்லா தொழியும்.

(க-ரை) பார்சுவநாத தீர்த்தங்கரரை நாள்தோறும் வழிபடு பவர்க்கு துன்பம் போகும்; இன்பம் ஆகும்.

அருங்கலச் செப்பு முற்றிற்று.

# எடுத்துக் காட்டு கதைகள்

## அட்டவணை

# 1. அஞ்சன சோரன்

பரதகண்டத்தில் சுதாகுசலம் என்று ஒரு நாடு. அந்நாட்டில் அரங்கம் என்று ஒரு நகரம் இருந்தது. அந்நகரில் **சினதத்தன்** என்ற வணிகர் தம் மனைவி **சினமதியுடன்** வாழ்ந்து வந்தார். அவ்வூருக்கு **சருவகுப்தி பட்டாரகர்** என்னும் துறவி ஒருவர் வந்தார். அது மழைக் காலம் ஆதலால் துறவிகள் அவ்வூரில் தங்கினார். அவரை ஏற்றுப் போற்றும் பேற்றினை சினதத்தர் பெற்றார். அவர் செல்வந்தர் இல்லை என்றாலும் செல்விருந்தினரான துறவிகளுக்கு உணவு படைத்தல் நல்வினை என்று கருதி உணவு அளித்து வந்தார். இவ்வாறு எழுபது நாள்கள் கழிந்தன. தனக்கு உணவு அளித்து வரும் சினதத்தனுக்கு வறுமை நீங்கும் பொருட்டு அவருக்குச் சில மந்திரங்களைக் கற்றுத் தர விரும்பினார் துறவி. அம்மந்திரத்தை எப்படி ஒலித்துப் பயன் பெற வேண்டும் என்றும் அவருக்கு விளக்கினார். தனி இடத்தில் ஓர் ஆலமரத்தில் ஆயிரம் கால் உள்ள ஓர் உரி கட்ட வேண்டும். அதன் கீழ், கூர்மையான வாள் வேல் முதலிய படைக்கருவிகளை முனைப்பகுதி மேல்நோக்கி இருக்கும்படி நெருக்கமாக நட வேண்டும். பிறகு உரியின் மேல் நின்று ஓர் ஒலிப்புக்கு ஒரு காலாக ஆயிரம் முறை ஒலித்து ஆயிரம் கால்களையும் அறுக்க வேண்டும். அப்படி அறுத்தால் தேவதை தோன்றி அவனுக்கு வேண்டியதைத் தரும் என்று விளக்கினார்.

துறவிகள் மொழி பொய்க்காது என்று நம்பி சினதத்தர் அம் மந்திர மொழிகளை விழிப்புடன் கற்றார். தம் வறுமையை நீக்கிக் கொள்ளும் நோக்கத்துடன், துறவி உரைத் தருளிய மந்திரங்களை, அவர் உரைத்த வழியிலே செய்தல் வேண்டி அண்மையில் உள்ள ஒரு காட்டிற்குச் சென்றார். அங்கு ஒரு ஆலமரத்தில் உரி கட்டி கீழே படைக்கருவிகள் நட்டு வைத்தார். உரியில் நின்று கொண்டு மந்திரத்தை ஒலித்து உரியில் ஒரு காலை அறுத்தார். இவ்வாறு மூன்று கால்களை அறுத்தார். உரி ஒரு பக்கம் சாய்ந்தது. அச்சமுற்ற சினதத்தர் கீழே பார்த்தார். கீழே படைக் கருவிகள் அவரை நோக்கி நின்றன. உரி அறுந்து விழுந்தால் படைக்கருவிகள் மேல் தான் விழ வேண்டும். படைக் கருவிகள் மேல் விழுந்தால் அவ்வளவு தான்! உயிர் போய்விடும்! இதை நினைத்தவுடன் மந்திரம் ஒலிப்பதை நிறுத்தினார். உரியை விட்டு கீழே இறங்கினார். துறவி, உயிர் போகும்படியான மந்திரத்தைக் கற்றுத் தந்திருக்கமாட்டார் என்று எண்ணி மீண்டும் உரியில் ஏறி மந்திரத்தை ஒலித்து ஒரு காலை அறுத்தார். மீண்டும் உரி தாழ்ந்தது. சினதத்தருக்கு மரண அச்சம் வந்தது. உடனே கீழே இறங்கினார். இப்படி அவர் இறங்குவதும் ஏறுவதுமாகத் தத்தளித்துக் கொண்டிருந்தார். மரண பயம்

வரும்போது இறங்கி விடுவார். துறவியின் மொழி பொய்க்காது என்று எண்ணும்போது ஏறி விடுவார்.

இந்த நிலையில் **அஞ்சன சோரன்** என்ற கள்வன் அவர் செயல்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். சினதத்தன் ஏன் இப்படி ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கிறார் என்று அவன் வியப்படைந்தான். எனவே அவன் சினதத்தனை நெருங்கி, ''ஐயா நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? ஏன் உரியில் ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கிறீர்கள்'' என்று கேட்டான். சினதத்தன் ''ஐயா! நல்ல நேரத்தில் வந்தீர்கள்! துறவி ஒருவர் எனக்கு மந்திரம் கற்றுக் கொடுத்தார். அதனைச் சாதிக்க வந்தேன். ஆனால், மந்திரம் பொய்த்துவிட்டால் படைகள் மேல் விழுந்து இறந்து விடுவேன் என்று அச்சம் வந்துவிட்டது. அதனால்தான் இப்படி ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கிறேன்'' என்றான். ''மந்திரத்தை யார் சொல்லிக் கொடுத்தது?'' என்று அஞ்சன சோரன் கேட்டான். ''சருவகுப்தி பட்டாரகர் என்ற ஜைனத் துறவி கற்றுக் கொடுத்தார்'' என்றான் சினதத்தன்!

ஜைனத் துறவிகள் பொய்யுரைக்க மாட்டார்கள் என்று அஞ்சன சோரன் அறிவான். அவர்கள் சொன்னால் அதில் ஐயம் கொள்ள வேண்டாம் என்றும் அவன் அறிவான். ஆனால், சினதத்தனைப் பார்த்து, ''ஐயா! அந்த மந்திரத்தை எனக்குச் சொல்லித் தாருங்கள்! நான் உங்களுக்கு வேண்டிய பொருள் தருகிறேன்'' என்றான் அஞ்சன சோரன். அதுபோல தான் திருடிவந்த பொருள்களை அவனுக்கு நிறைய கொடுத்தான். பொருளைப் பெற்றுக் கொண்ட சினதத்தன் அஞ்சன சோரனுக்கு மந்திரத்தைச் சொல்லிக் கொடுத்துவிட்டு சென்றுவிட்டான்.

அஞ்சன சோரன் அம் மந்திரங்களை முறைப்படி மொழிந்து உரியின் ஆயிரம் கால்களையும் அறுத்தவுடன் அவன் கீழே விழா வண்ணம் தேவதை வந்து காப்பாற்றிற்று. அஞ்சனசோரன் திருடன் தான். விரதம் இல்லாதவன்தான். ஆனால் ஜைனத் துறவியின் உரையில் அவன் கொண்ட நம்பிக்கை—ஐயம் இல்லாத நம்பிக்கை—அவனுக்கு நல்ல பயனைக் கொடுத்தது. திருட்டுத் தொழிலை அப்பொழுதே விட்டொழித்தான்! தேவதையின் துணையால் ஜைனத் திருக் கோயில்கள் எல்லாம் தொழுதான். அவன் மனம் தெளிவடைந்தது. நற்காட்சி பெற்றவனாகி சாரண முனிவரிடம் அறம் கேட்டு தவம் ஆற்றி முக்தி அடைந்தான்.

## 2. அனந்தமதி

பாரத கண்டத்தில் அங்கதேசம் என்று ஒரு நாடு. அந்நாட்டின் தலைநகரம் இராசபுரம். அந்நகரத்தில் **அருகதாசன்** என்ற வணிகர் வசித்து வந்தார். அவருக்கு **அனந்தமதி** என்ற பெண் இருந்தாள். அவள் மிகவும் அழகி: ஒழுக்கம், அறிவு உடையவள். ஒரு முறை அவ்வூருக்கு **மதிவரன்** என்ற முனிவர் எழுந்தருளி இருந்தார். அவரிடம் அனந்தமதி பிரம்மசரிய விரதம் பூண்டாள். காலம் குறிப்பிடாமல் விரதம் பூண்டதால் இறப்பு வரை திருமணம் செய்து கொள்ளுவதில்லை எனத் தீர்மானித்துக் கொண்டாள்.

இந்த நிலையில், ஒரு நாள் வேடர்கள் சிலர் அவள் வீட்டைக் கொள்ளையிட்டனர். அருகதாசரோ வாணிபம் காரணமாக வெளி நாடு சென்று இருந்தார். நாட்டிலிருந்த அரசனோ போர்முனைக்கு சென்று இருந்தான். வேடர்கள் கொள்ளை அடித்தபோது அவர்களைக் காப்பாற்ற யாருமில்லை. ஒரு வேடன் அனந்த மதியின் அழகில் மயங்கி அவளைக் கைப் பற்றி வந்தான். வேடர் தலைவன் அவளைக் கண்டு மயங்கி அவளை மனைவியாக்கிக் கொள்ள துடித்தான். அனந்தமதியோ மணமாகாத விரதம் பூண்ட மங்கை. என்ன துன்பம் வந்தாலும் தன் விரதத்தைக் கைக் கொள்ள துணிந்தாள். நிறை காக்க நினைந்தவளை சிறை காப்பு என்ன செய்ய முடியும்? வேடர் தலைவன் மேற்கொண்ட அச்சுறுத்தல்கள் அவளை நெருங்க முடியவில்லை. அவை நெருங்க முடியாமல் தேவதைகள் அவளைக் காத்தன. வேடர் தலைவன் அச்சமுற்று அவளை **புட்கரன்** என்ற வணிகனுக்கு விற்றுவிட்டான்.

புட்கரன் அவள் மீது தணியாத மோகம் கொண்டு அவளுக்குத் தன் எண்ணத்தை பணி மகளிர் வழி தெரிவித்தான். அனந்தமதி தன் விரத நிலையை எடுத்துக் கூறி அவளை உடன் பிறந்தாளாகப் போற்றும்படி வேண்டினாள். பணிப் பெண்கள் இந்தச் செய்தியைக் கூற அஞ்சி, 'ஐயா அவள் உங்களை மணந்த பின்னரே விரும்புவாளாம்' என்று பொய்யுரைத்தனர். அதைக் கேட்டு அவனும் அவளை மணக்க ஏற்பாடு செய்தான். இதனை அறிந்த அவன் மனைவி **வசந்த திலகை** கோபம் கொண்டு இருந்தாள். இவற்றைப்பற்றி ஒன்றும் அறியாத அனந்தமதி வசந்ததிலகையை நெருங்கி, 'நீங்கள் தான் என் அண்ணனின் மனைவியோ' என்று உரையாடினாள்! வசந்த திலகை உண்மை அறிந்து மகிழ்ந்து அவளைப் போற்றினாள். இதனை அறிந்த புட்கரன் மனம் தெளிந்து தன் ஆசையை விட்டொழித்தான்.

அவ்வூரில் சுந்தரி என்று ஒரு கணிகை இருந்தாள். அவளுக்கும் புட்கரனுக்கும் பண்ம் கொடுக்கல் வாங்கல் உண்டு. அவளுக்குச்

சேரவேண்டிய பணத்திற்கு அனந்தமதியை விற்றுவிட்டான். தன் வினையை எண்ணி அனந்தமதி வருந்தினுள். அனந்தமதியின் அழகைக் கண்டு மனம் மகிழ்ந்த சுந்தரி அவளைக் கொண்டு பெரும் செல்வம் சேர்க்கலாம் என்று எண்ணினுள். அவளை நாள்தோறும் அழகு செய்து பார்த்து தன் எண்ணத்தை அவளுக்கு விளக்கினுள். அனந்தமதி தன் விரதத்தை அவளுக்கு விளக்கி தன் நிலையைத் தெளிவுபடுத்தினுள். ஆனுல் கணிகையோ அதை ஏற்கவில்லை. அவளை அந்நாட்டு இளவரசன் சந்திக்க ஏற்பாடு செய்தாள். இள வரசன் அவள் அழகைக் கண்டு அவளைத் திருமணம் கொள்ள தூது அனுப்பினுன். பெருந் தொகையைப் பெற்றுக் கொண்டு இளவரச னுக்கு மணம் முடித்து வைக்க சுந்தரியும் ஒப்புக் கொண்டாள். அனந்த மதி செய்வது அறியாது கலங்கினுள். தான் கொண்ட விரதத்திற்கு இப்படித் தொடர்ந்து இடையூறு வருகிறதே என்று எண்ணி இரங் கினுள். என்ன ஆனுலும் புலன் இச்சைக்கு அடிமையாகக் கூடாது என்று எண்ணினுள். அவள் கொண்ட விரதத்தால் அவளைக் காக்க தேவதைக் காத்திருந்தது.

''பெண்ணே! நீ கலங்காதே! உன் விரதம் உன்னைக் காப் பாற்றும். இளவரசன் உன்னை மணப்பான். இருவரும் படுக்கை அறைக்குச் செல்வீர். அங்கே இளவரசன் உடனே உறங்கிவிடுவான். படுக்கையின் கீழே ஒரு பேழை இருக்கும். அதில் பிடாரி வேடம் கொள்ள தேவையான பொருள்கள் இருக்கும். அவற்றை அணிந்து கொள்! இளவரசன் அந்த நேரத்தில் விழித்து உன்னைப் பார்த்து அச்சங் கொண்டு ஓடிவிடுவான்'' என்று அவள் கனவில் தேவதை கூறி மறைந்தது. அதன்படியேதான் நடந்தது. தன்னை விட்டால் போதும் என்று இளவரசன் அனந்தமதியைத் துறந்தான்.

தேவதையின் அருளால் பிடாரி வேடம் போட முடிந்ததால் அவளைப் பார்த்த எல்லோரும் பிடாரி என்று ஒதுங்கிச் சென்றனர். தன்னைக் காத்துக் கொள்ள அந்த வேடத்தை அவள் நன்ருகப் பயன் படுத்திக் கொண்டாள். இப்படி இவள் திரிந்து கொண்டிருந்தாலும் கடவுள் வழிபடுதலை அவள் மறக்கவில்லை. பகலில் பிடாரியாகத் திரிவாள். இரவில் தன் உண்மை உருவத்துடன் கடவுள் வழிபாடு செய்வாள். இப்படி நாள் தோறும் நடந்து கொண்டு வருவதை **ஜினதாசர்** என்ற வணிகர் ஒருவர் கண்டுபிடித்தார். அனந்த மதியை நெருங்கி உண்மையை அறிந்தார். அனந்தமதி தன் நண்பர் அருகதாசரின் மகள் என்று அறிந்து கவலைப்பட்டார். அருகதாசர் வெளிநாடு சென்று இருப்பதை அவர் அறிவார். அதனுல் அவர் வரும் வரை அவளைக் காப்பது தன் கடமை என்று உணர்ந்து அவளைக் காப்பாற்றி வந்தார். வாணிபம் செய்யச் சென்ற அருகதாசர் திரும்பி வந்தவுடன் அனந்தமதியை அவரிடம் சேர்ப்பித்தார்.

அனந்தமதியைக் கண்ட ஊராரும் உற்றாரும் வருத்தம் நீங்கி மகிழ்ந்தனர்.

எத்தகைய இடையூறு நேர்ந்த காலத்தும் தன் விரதத்தைக் காத்த அனந்தமதி தன் உடல்பற்றைத் துறந்தாள். தீட்சை பெற்று விரதங் கொண்டு வந்தாள். முடிவில் அமரேந்திரனாகத் தோன்றி இந்திர சுகம் அனுபவித்து முறையான யோகத்தினால் ஆண் பிறவி எடுத்து முக்தி அடைந்தாள். ★

## 3. ஒத்தாயணன்

பரத கண்டத்தில் நரசில்பம் என்னும் நகரம் உண்டு. அந்நகர் அரசன் **சேடகன்**. அவன் பட்டத்தரசி **பத்மாவதி தேவி**. அவர்கள் மகள் **பிரபாவதி**. அவளை **ஒத்தாயணன்** என்ற அரசருக்கு மணம் முடித்து வைத்தான். ஒத்தாயணனும் பிரபாவதியும் ஜைனத் துறவிகளை ஏற்று போற்றுவதில் தலைசிறந்து விளங்கினர்.

ஒரு நாள் சௌதர்மேந்திரன் சபையில் தேவர்கள் அவனைச் சூழ்ந்திருந்தனர். அப்போது இந்திரன் அவர்களை நோக்கி ''செல் விருந்து ஓம்புவதில் ஒத்தாயணனும் பிரபாவதியும் காட்டிலும் சிறந்தவர்கள் இல்லை'' என்று கூறினான். அதனை சோதிக்க நினைத்த **மணிசூளன்** என்ற தேவன் எண்ணினான். அதனால் உறுப்பு குறைந்த, ரணமும், சீழும், நாற்றமும் உள்ள தொழு நோய் வந்த முனிவர் வேடம் கொண்டு நரசில்பம் நகரத்துக்கு வந்தான். ஆகாரத்திற்கு வீதி வழியே வருவது போல் அரண்மனைப் பக்கம் வந்தான். ஒத்தாயண அரசன், முனிவர் வருவதைக் கண்டான். மனம் மகிழ்ச்சி கொண்டான். முனிவர் தாளை வணங்கினான். அவரை முறையாக வரவேற்றான். சீழ் ஒழுகும் அவர் கால்களைக் கழுவினான். தன் முடியில் அந்த நீரைத் தெளித்துக் கொண்டான். அருவருப்பு உணர்வு ஏதும் இல்லாமல் ஆனந்த உணர்ச்சியோடே அவருக்கு உணவு படைத்தான். அவன் மனைவியும் அதே உணர்வுடன் அமுது தந்தாள். அமுது உண்ட முனிவர் வாந்தி எடுத்தார். ''ஐயோ ! இவர் உடல் ஏற்காத உணவை அளித்தோமே ! என்ன பாபம் செய்தோம்'' என்று வருந்தினர். அவர் வாந்தியைத் தங்கள் கரத்திலேயே ஏற்றுக் கொண்டனர். எச்சில் அவர்கள் மேல் விழுந்தது. அதனைப் பற்றி அவர்கள் அருவருப்பு அடையவில்லை. அவர் உடலைத் துடைத்துத் தூய்மை செய்தனர். அருங்கல மும்மையை உடைய மேனி என்று கொண்டு வணங்கினர். அவர்களுடைய உண்மையான விருந்தோம்பலைக் கண்ட தேவன் மகிழ்ந்து தன் சுய உருவுடன் வெளிப்பட்டு தான் யார் என்பதையும் தான் வந்த காரணத்தையும் விளக்கிப் போனான். அருவருப்பு இல்லாமல் அன்னம் அளித்து சிறப்புப் பெற்ற அவர்களை மக்கள் போற்றிச் சிறப்புச் செய்தனர். ★

## 4. இரேவதையார்

நாவலம் தீவில் வெள்ளியம் பெருமலையின் தென் கோடியில் தரணி திலகம் என்று ஒரு நகரம் இருந்தது. அந்நகர்க்கு அரசன் **இரதிவேகன்** என்னும் வித்யாதரன். அவன் ஒரு முறை தீர்த்த யாத்திரை செய்து வந்த போது உத்தரமதுரைக்கு வந்தான். அங்கு **சருவகுப்தி பட்டாரகர்** என்ற முனிவரைத் தரிசித்தான். அவரை வணங்கி அவரிடம் அறவுரை கேட்டான். பின் தான் மகத நாட்டில் உள்ள இராச கிருகம் என்னும் தலத்திற்கு யாத்திரை செல்ல இருப்ப தாகச் சொன்னான். அப்போது பட்டாரகர், அந்நகரில் எழுந்தருளி இருக்கும் **உண்டுளிதத்தர்** என்னும் முனிவருக்குத் தன் வணக்கத் தையும் **இரேவதை**யாருக்குத் தன் ஆசியையும் கூறும்படிச் சொன்னார். இரதிவேகன் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு புறப்பட்டு இராசகிருக நகரை அடைந்தான்.

சருவகுப்தி பட்டாரருடைய ஆசிக்கு அருகதையான இரேவதை யாரைச் சோதிக்க எண்ணினான் இரதிவேகன். எனவே, மாய வேடத்தால் பிரம்மனாக உருவம் கொண்டு அறவுரை ஆற்றினார். பலர் அறவுரை கேட்டனர். ஆனால் இரேவதை மட்டும் வரவில்லை. அவள் ஏன் வரவில்லை என்று உசாவினர். அதற்கு அவள், ''பிரம்மா எண்பது வில் காலத்தவன். இவனோ ஏழு முழத்தில் உள்ளான். இது ஏதோ மாயம்'' என்றாள். அதைக் கேட்ட இரதிவேகன் வியப் புற்று தன் பிரம்மா வேடத்தைக் கலைத்தான்.

சில நாள்கள் கழித்து அவன் விட்ணு வேடம் தாங்கி உபதேசம் ஆற்றினான். பலர் வந்து உரையைக் கேட்டனர். இரேவதையார் மட்டும் வரவில்லை. அவள் ஏன் வரவில்லை என்று உசாவினர். ''வாசுதேவனுக்கும் தேவகிக்கும் மகனான விட்ணு பத்து வில் காலத் தவன். இப்பொழுது உள்ள இவனோ ஏழு முழம் உள்ளவன். இவன் விட்ணு இல்லை. இது ஏதோ மாயம்'' என்றாள். இதை அறிந்த மாய விட்ணு தன் வேடத்தைக் கலைத்தான்.

பின்பு புத்தர் வடிவு கொண்டு அறம் உரைத்தான். பலர் கேட் டனர். ''சுத்தோதனர்க்கும் மாயா தேவிக்கும் புதல்வன் புத்தன். அவன் அக்காலத்தே நீங்கினான். இக்காலத்தே இல்லை'' என்று கூறி இரேவதை அறவுரை கேட்க வரவில்லை.

இதையறிந்த மாய வேடதாரியாகிய இரதிவேகன் ஈசுவரர் வேடம் பூண்டு அறவுரை ஆற்றினான். பலர் கேட்டனர். இரேவதை மட்டும் வரவில்லை. ''வைசாலி நகரத்தில் சத்னிக்கும் சேட்டைக்கும் புதல்வன் ஈசுவரன். அவன் ஜின வேடம் கொண்டு வெற்றி பெருமல்

போனான். அவன் இப்பொழுது உள்ளனோ?'' என்று கூறி வர மறுத்துவிட்டாள்.

இதைக்கேட்ட இரதிவேகன் இரேவதையாரிடம் தேவ மூடத் தனம் இல்லாமையை அறிந்து மகிழ்ந்தான். பின் அவன் சமவ சரணம் அமைத்து தீர்த்தங்கரர் போல உரையாற்றினன். இரே வதையோ, ''இது அவசர்ப்பிணி காலம். அதன் முடிவில் வர்த்தமான சுவாமியின் சமவசரணமும் பரிநிர்வாணமும் நடந்தேறின. இனி தீர்த்தங்கரர் காலமும் சென்று உத்சர்ப்பிணி காலத்தில் மூன்றும் காலத்தில்தான் உண்டாகும். இப்போது உண்டாகி இருப்பது மாயம்'' என்றனள்.

இதைக் கேட்டு இரதிவேகன் அச்சமுற்று தன் வடிவு கொண்டு அவளை வணங்கினன். ''மூடத்தனம் அதிகமாக இருக்கும் இக் காலத்தே நீங்களும் மூடத்தன்மையை வளர்க்கலாமா?'' என்று அவனைக் கேட்டாள். அதற்கு அவன் ''தாயே! சருவகுப்த பட்டாரகர் தங்களுக்கு ஆசி கூறச் சொன்னர் அதன் உண்மையைச் சோதிக்கவே இப்படி மாய வேடம் கொண்டேன். பொறுத்தருள வேண்டும்'' என்றான். பின் விடைபெற்று சென்றான்.

இரேவதையாரும் பெண் பிறவியை ஒழித்து தேவ பதவியை எய்தினர். ★

## 5. சிநேந்திர பத்தர்

நாவலம் தீவில் பரத கண்டத்தில் அங்க நாட்டில் தான்யபுரம் என்று ஒரு நகரம் இருந்தது. அவ்வூரில் நான்கு கள்வர்கள் இருந் தனர். ஒரு நாள் அவர்கள் கொள்ளையிட்ட பொருளைப் பங்கு போடுவதில் மனவேறுபாடு ஏற்பட்டது. **கீர்த்திதரன்** என்பான் தனக்கு அதிகமான பங்கு வேண்டும் என்றான். மற்றவர்கள் அதை ஏற்கவில்லை. தங்களைக் காட்டிலும் அவனுக்குத் தனித் திறமை இருந்தால் சம்பாபுரியில் உள்ள வணிகர் **சிநேந்தர பத்தர்** வீட்டில் உள்ள விலை உயர்ந்த மாணிக்க விளக்கைக் கவர்ந்து வரும்படி கூறினர். அப்படித் திருடி வந்தால் அவனுக்குக் கூடுதலாகப் பங்கு தருவதாக ஒப்புக் கொண்டனர். கீர்த்திதரனும் அதற்கு ஒப்புக் கொண்டு சம்பாபுரி நோக்கி பயணம் ஆனன்.

சிநேந்தர பத்தர் தன் பெயருக்கு ஏற்ப பக்திச் செய்வதில் சிறப் புடையவர். வணிகம் செய்பவர் என்றாலும் பக்தியில் களங்கம் இல்லாதவர். அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் முரண்பாடு

இல்லாத சிறந்த ஜின பக்தர். அவர் மிகச் செல்வந்தர். அவர் அரண்மனை போன்ற தன் ஏழடுக்கு மாளிகையின் மேல் தளத்தில் ஆலயம் அமைத்து இருந்தார். அந்த ஆலயத்தில் விலை மதிப்பில்லா மாணிக்க விளக்குகள் இருந்தன. அவை எப்பொழுதும் ஒளி வீசிக் கொண்டிருந்தன. அந்த மாணிக்கங்களைக் களவாட கீர்த்திதரன் வந்தான்.

சிநேந்தரர் பக்தர் என்பதால் அவர் விரும்பி ஏற்கும் சுல்லக வேடம் கொண்டு வந்தான் கீர்த்திதரன். அவன் வேடதாரி என்று கருதாமல் அவனை முறைப்படி வரவேற்று போற்றினார் சிநேந்தர பத்தர். அவர் திருக் கோயிலில் அவன் தங்கினான். சில நாள்கள் சென்றன.

ஒரு நாள் இரவு சிநேந்தர பத்தர் வணிகம் தொடர்பாக வெளி இடத்தில் தங்க நேரிட்டது. அதுதான் வாய்ப்பான நேரம் என்று வேடதாரியான கீர்த்திதரன் மாணிக்கங்களைக் களவாடிக் கொண்டு புறப்பட்டான். ஆனால் மாணிக்க ஒளி அவனைக் காட்டிக் கொடுத்து விட்டது. காவலர்கள் போலித் துறவியைப் பிடித்துவிட்டனர். அவனை அழைத்துக்கொண்டு வெளியிடத்தில் தங்கி இருந்த சிநேந்தர பத்தரிடம் கொண்டு சென்று நடந்ததைக் கூறினர். அகப்பட்டுக் கொண்ட கீர்த்திதரன் அச்சமுற்று என்ன செய்வது என்று அறியாது திகைத்தான். அந்த நேரத்தில் சிநேந்தர பத்தர் நிலைமையைப் புரிந்து கொண்டு, காவலர்களைப் பார்த்து, 'மாணிக்கங்களை நான் தான் கொண்டுவரச் சொன்னேன். அவர் கள்வர் அல்லர், நீங்கள் போகலாம்,' என்று கூறி காவலர்களைப் போகச் செய்தார். வேட தாரியான தன்னை உண்மையான துறவி போல நடத்தி தன் குற்றத் தைப் பொறுத்த சிநேந்தர பத்தரின் அருளுணர்ச்சியைக் கண்டு கண்ணீர் மல்க அவர் அடிகளில் விழுந்து வணங்கினான். அப் பொழுதே அவனுக்கு நற்காட்சி தோன்றியது. 'துறவு ஏற்பேன்' என்று உறுதி கூறி விடைபெற்றுச் சென்று **கீர்த்திதர்** என்பாரிடம் துறவு பூண்டு நற்கதி அடைந்தான்.

உண்மையான துறவி தவறு இழைத்தால் அந்தத் தவற்றைப் பொறுத்து மறை வெளிப்படுத்தாமல் இருத்தல் போல் வேடம் தரித்த கீர்த்திதரனிடம் நடந்து கொண்டதால் சிநேந்திர பத்தர் புகழுக்கு உரியவரானார்!

★

## 6. பாரீசர்

புகழ் பெற்ற பரத கண்டத்தில் மகத நாட்டிற்கு அரசனாக விளங்கினான் **சிரேணிகன்!** அவன் தேவி **சேலினி.** அவர்களுக்கு மகன் **பாரீசர்.** அவர் துறவி ஆனார்.

ஒருமுறை அவர் சரியா மார்க்கமாகச் சென்றபோது, அவர் இளமைக்கால நண்பனான **புட்படாலனைச்** சந்தித்தார். அவன் அமைச்சர் மகன். இருவரும் இளமைக் காலத்தே ஒன்றாக ஓடி ஆடித் திரிந்தவர்கள். துறவியான தம் நண்பரை முறையாக வரவேற்று உணவு படைத்தான் புட்படாலன். முனிவரான பாரிசரும் உணவு ஏற்றபின் அறவுரை ஆற்றினார், புட்படாலன் அவர்பால் கொண்ட அன்பால் துறவு ஏற்றான்.

புட்படாலன் துறவு ஏற்றானேயொழிய அவன் எப்பொழுதும் தன் மனைவி நினைவாகவே இருந்தான். உடல் துறந்து இருந்தாலும் உள்ளம் துறவாமல் இருந்தது. நண்பனுடைய மன அலைச்சலைக் குறிப்பாக உணர்ந்தார் பாரிசர். தடுமாறும் அவன் மனத்தை மாற்ற விரும்பினார். அறிவுரையை விட அனுபவம் விரைந்த விளைவைக் கொடுக்கும் அல்லவா? உலக இன்பத்தின் பொய்ம்மையே அவனே உணரும்படி செய்ய வேண்டும் என்று மனத்தில் கொண்டார்.

ஒருநாள், பாரீசர் மகத தேசம் போகலாம் என்று புட்படால னிடம் கூறினார். மனைவி நினைவாகவே இருக்கும் புட்படாலன் உடனே போகலாம் என்றான். மனைவியைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவில் மனம் துள்ளிக் குதித்தது. இருவரும் பயணம் ஆனார்கள்.

மகத தேசம் வந்தவுடன் முதலில் பாரீசர் அரண்மனைக்குச் செல்வது என்று முடிவு செய்தனர். அரசருக்குத் தகவல் தரப் பட்டது. அரசன் விரைந்து வந்து அவர்களை வரவேற்றான். அரச வாழ்க்கையையும் அரச போகத்தையும் துறந்து விட்டு சலனமற்று இருக்கும் பாரீசரைப் பார்த்தான் புட்படாலன். தேவ சுகம் போல் கிடைக்கும் அரச சுகத்தைத் துறந்த பாரீசரின் துணிவை தெளிவை உணர்ந்த புட்படாலன் நாணி மனம் குன்றினான்!

புட்படாலன் இல்லத்திற்குச் செல்லலாம் என்றார் பாரீசர். அதற்கு தேவையே ஏற்படவில்லை. ''அடிகளே! மனம் திருந்தி விட்டேன்! உண்மை எது பொய் எது என்று புரிந்து கொண்டேன். நிலை தவற இருந்த என்னை நெறியில் நிறுத்திய அடிகளே! இனி நாம் புறப்படலாம்! இந்த 'வீடு' வேண்டி வந்தவனை அந்த 'வீடு' காட்டினாய்!'' என்றான் புட்படாலன்.

இருவரும் புறப்பட்டனர். காலம் கனிந்த போது நல் கதி அடைந்தனர்.

★

# 7. வச்சிர மா முனி

அமராவதி நகரத்து அரசன் **திவாகரதேவன்**. அவன் தேவி **ஜயஸ்ரீ**. அவர்கள் வளர்ப்பு மகன் **வச்சிரகுமாரன்**. ஒரு நாள் அரசி வச்சிர குமாரனை 'அடுத்தவன் பிள்ளை' என்று இகழ்ந்தாள். அதனைப் பொறுக்க மாட்டாமல் தன் பிறப்பை அறிய **சோமதத்தர்** என்ற முனிவர் பால் சென்று நின்றான். அவர் அவனைத் தீக்கை ஏற்கச் செய்தார். அவனும் தவம் ஏற்று அவரோடு தங்கலானான்.

அக்காலத்தே, மதுரை என்ற நகரில் சாகரதத்தன், என்றொரு ஏழை இருந்தான். அவன் மனைவி **சமுத்திரதத்தை**. அவர்களுக்கு **தரித்திரை** என்றொரு மகள் இருந்தாள். ஒரு நாள் அவ்வூருக்கு வந்த சாரணமுனிவர் இருவர் அவளைக் கண்டனர். ஒருவர், ''முன் வினைப் பயனை இவள் நுகர்கிறாள்'' என்று கூற மற்றொருவர், ''இவர் இவ்வூர் அரசியாவாள்'' என்று பேசிக் கொண்டு சென்றனர். அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள் ஒரு புத்த பெண் துறவி. சாரணர் வாக்குப் பொய்க்காது என்பதை அவள் அறிவாள். ஆதலால், அந்த ஏழைப் பெண்ணை அழைத்துச் சென்று வளர்க்க லானாள். அவள் வளர்ந்து மங்கையானாள். ஒரு நாள் அவ்வழியே உலா வந்த அரசன் அவள் அழகில் மயங்கினான். அவள் மணம் முடிக்க விரும்பினான். புத்தத் துறவியோ, ''அவளை ஒரு புத்தனுக்கே மணம் முடிப்பேன்'' என்றாள். அரசன் அவள்பால் உள்ள மோகத் தால் புத்த மதத்தைத் தழுவினான்.

அவன் பட்டத்து இளவரசி **ஊர்மிளாதேவி**. அவள் ஒவ்வொரு ஆண்டும் ஆட்டானிகத்தன் போது ஜினபகவானுக்கு தேரோட்டும் விழா நடத்துவாள். அது போல அந்த ஆண்டும் நடத்தினாள். ஆனால், தரித்தரையும் அதுபோல புத்தபகவானுக்கு விழா நடத்த விரும்பினாள். அரசன் உடன்பாடு பெற்று ஊர்மிளா விட்ட தேருக்கு முன்னே தம் தேரைச் செல்லச் செய்தாள். இதனை அறிந்த ஊர்மிளா, தன் தேர் முன்னே செல்லாதவரை உணவு கொள்வது இல்லை என்று முடிவு செய்து முனிவர் சோமத்தன்பால் வந்து முறையிட்டாள். அதனைக் கேட்டிருந்த வச்சிர முனிவர், அப்போது அங்குத் தன்னைப் பார்க்க வந்திருந்த திவாகர தேவனிடம் 'அறம் விளக்கம் காட்ட வேண்டி ஆவன செய்க என்றார். திவாகர தேவன் வித்தியாதரனாதலால், அவன் உடனே தன் வித்தையினால் ஊர்மிளாவின் தேரை ஆகாய வழியே வலம் வரம் செய்தான்.

அறம் விளக்கம் செய்ய வேண்டிய காலத்தே அறம் விளங்க ஆவன செய்த வச்சிரமாமுனிவர் அனைவர் போற்றுதலுக்கும் உரியவரானார்!

★

# 8. விண்ணு முனிவர்

பரத கண்டத்தில் அத்தினாபுரம் என்ற பட்டணம் இருந்தது. அதற்கு அரசன் **மகாபலி**. அவன் சிறந்த கொடையாளன். தனக்கு வந்து சேர்ந்த பொருள்கள் அனைத்தும் நல்வினையால் வந்தவை. அவற்றை நல்லவருக்கு வழங்க வேண்டும் என்று அதன்படி கொடை வழங்கி வந்தான்.

ஒரு முறை அருக சமயத்துறவிகள் பலர் அந்நாட்டிற்கு வந்தனர். அவர்களுக்கும் தம் பொருளை வழங்க எண்ணினான் அரசன். அவர்களை அழைத்து வரும்படி ஆட்களை விடுத்தான். முனிவர்கள் பொருள் வேண்டாம் என்று கூறி வர மறுத்துவிட்ட[illegible]னைக் கேட்ட அரசன் அவர்கள் அனைவரையும் அழைத்து வர[illegible] 'துறவிகளே! என் கொடையை நீங்கள் ஏற்காதது ஏன்?' என[illegible]

'அரசே! அகப்பற்றையும் புறப்பற்றையும் துறப்பவனே துறவி. துறவியாகிய எங்களுக்குப் பற்றை உண்டாக்கும் பொருள் வேண்டாம்' என்றனர்.

'உங்களுக்கு வேண்டாம். நான் தரும் பொருள்களைக் கொண்டு கோயில்களைக் கட்டலாமே' என்றான்.

'கோயில்களைக் கட்டுதலும் பாதுகாத்தலும் அரசன் தொழில் துறவிகள் தொழில் அல்ல' என்றனர்.

அரசன் அதனைக் கேட்டு வெகுளி கொண்டு அனைவரையும் சிறையில் அடைத்தான். அரசன் கட்டளை பற்றி கவலை கொள்ளாமல் துறவிகள் சிறைக்குள்ளேயே தங்கள் தவத்தை ஆற்றினர். உண்ணா நோன்பு பூண்டு தியானம் செய்து கொண்டிருந்தனர்.

இம் முனிவர்களுக்கு ஏற்பட்ட இன்னலை தன் தொலை உணர்தல் அறிவால் (மனப்பர்யஞானம்) அறிந்தார் **சுருத சாகர பட்டாரகர்** என்பார். முனி கணங்களை அழைத்தார். அவர்களிடம் நிலைமையை விளக்கி, சிறையில் இருக்கும் துறவிகளை விடுவிக்க வேண்டும் என்றார்.

அக்கணங்களுள் ஒருவர் **விண்ணு** முனிவர். அவர் தன் தவ வலிமையால் வேண்டிய உருக்கொள்ளும் சித்தி அடைந்து இருந்தார். தான் அடைந்துள்ள சிறப்பைக் கொண்டு முனிவர்களை விடுவித்து வரும்படி சுருதசாகரர் கூறினார். அவர் ஆணையை மேற்கொண்டு மகாபலி அரசனைக் கண்டார்.

அரசன், முனிவரைப் பார்த்து, 'தங்களுக்கு என்ன வேண்டும் கேளுங்கள் தருகிறேன்' என்றான். எனக்கு இரண்டு அடி நிலம் போதும்' என்றார். அரசனும் 'அப்படியே தந்தேன்' என்றான்.

முனிவர் தன் ஓர் அடியால் அவன் நிலம் முழுதும் கவரும்படி பாதத்தைப் பரப்பினுர். இன்னும் ஓரடி நிலம் வேண்டும் என்று கேட்டார். அரசன் அச்சமுற்று தன் பிழைக்கு இரங்கி முனிவர்களை விரைந்து விடுதலை செய்து அவர்கள் திருவடிகளில் விழுந்து வணங்கினுன். முனிவர்களும் மன்னன் அறியாமையை பொறுத்துக் கொள்ள வேண்டும் என்றனர். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி விண்ணு முனிவர் தன் உருவைச் சுருக்கிக் கொண்டு முனிவர்களுடன் புறப்பட்டு வந்தார். சுருதசாகர பட்டாரகரிடம் நடந்தவற்றைக் கூறி வணங்கினுன்.

தன்னைப் போல் அற நெறியில் நிற்போருக்கு இன்னல் வந்த கா[illegible]கள் இன்னலை நீக்கிய அவர் அன்பை எண்ணிப் [illegible]ர் மக்கள்.

## 9. சட்டிப் புலையன்

பௌதனபுரத்து அரசன் **மகாபாலன்**. அவன் மகன் **பலகுமாரன்**. அரசன், ஆட்டானிக காலத்தில் யாரும் புலால் உணவு கொள்ளக் கூடாது என்று ஆணை இட்டிருந்தான். எனவே அந்நாட்களில் யாரும் உயிர்க்கொலை செய்யமாட்டார்கள். ஆனுல், அரசன் மகனுக்கு புலால் உணவு இல்லை என்ருல் உணவே இறங்காது. அவன் அரசனுக்குத் தெரியாமல் ஓர் ஆட்டைக் கொன்ருன். இதனை அறிந்தனர் காவலர்கள். அரசனிடம் சென்று நடந்தவற்றைக் கூறினர். ‘அரசன் ஆணையை அரசன் மகனே மீறுவதா? வேலியே பயிரை மேய்ந்தால் சட்டத்தை யார் மதிப்பர்?’ என்று அரசன் வெகுண்டான். அவன் உண்மையான அரசன். மக்களுக்கு ஒரு சட்டம் மன்னருக்கு ஒரு சட்டம் என்று பிரித்துஅறியாதவன். சட்டத்தின் முன்னர் அனைவரும் சமம் என்ற நீதிமான். அதனுல், உயிர்க் கொலை புரிந்த தன் மகனைக் கொன்று விடும்படி ஆணையிட்டான்.

காவலர்கள் அரசகுமாரனைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றனர். ஆனுல் தண்டனையை நிறைவேற்ற வேண்டிய **சட்டிப்** புலையன் அன்று கொலைத் தொழிலைச் செய்ய மறுத்து விட்டான். காவலர்கள் அரசனிடம் சென்று முறையிட்டனர்; அரசன் புலையனை இழுத்து வரச் செய்தான். அரச ஆணையை நிறைவேற்ருமைக்குக் காரணம் கேட்டான். அதற்குப் புலையன், ‘அரசே! என்னைப் பொருத்தருள வேண்டும்! நான் ஒரு முறை பாம்பு கடித்து மயக்க முற்றேன். அப்போது நான் இறந்துவிட்டதாக எண்ணி என் சுற்றத்தார் என்னை மயானத்திற்குக் கொண்டு சென்றனர். அப்போது மருத்துவ தவ வலிமை பெற்ற முனிவர் மீது பட்ட காற்று என்மீது பட்டால் நான் மயக்கம் தீர்ந்து எழுந்தேன். அவ

ரிடம் அறவுரை கேட்டு, சதுர்த்தசி அன்று கொலை செய்வதில்லை என்று வதம் கொண்டேன். இன்று சதுர்த்தசி நான் உயிர்க்கொலை செய்யமாட்டேன், வதத்தை முறிக்கமாட்டேன் என்ருன். சண்டாளனுக்கு விரதமாவது என்று வெகுண்டு, தன் மகனையும் புலையனையும் முதலைக்கு இரையாக்கும்படி ஆணையிட்டான். அதன்படியே காவலர்கள், முதலைகள் உள்ள நீர் நிலையில் இருவரையும் தள்ளினர்; கொல்லாமை வதத்தை முறிப்பதைக் காட்டிலும் கொலைப்படுதலே சிறந்தது என்று எண்ணி புலையன் விழுந்தான். ஆனுல் அவன் விரத பலன் அவனைக் காப்பாற்றி விட்டது. தண்ணீர் தேவதை ஒன்று தோன்றி அவனை முதலைகள் வாயிலிருந்து காப்பாற்றியது. அரசன் அதனைக் கேள்வியுற்று தன் பிழைக்கு வருந்தி புலையனிடம் மன்னிப்பு கேட்டு வணங்கினுன், அவனுக்குச் சிறப்புகள் செய்தான்.

கொல்லாமை வதம் பூண்டதால் பல்லோரும் போற்றும் பிறவியானுன் சட்டிப்புலையன்!

★

## 10. தனதேவன்

**தனதேவன, சிநதேவன்** என்று இரண்டு வணிகர்கன் இருந்தனர். இருவரும் கூட்டாகச் சேர்ந்து வணிகம் செய்தனர். வணிகத்தில் வரும் இலாபத்தைச் சரிபாதியாகப் பங்கிட்டு கொள்ளுவது என்பது இருவரும் செய்து கொண்ட உடன்பாடு. இந்த அடிப்படையில் இருவரும் வணிகம் செய்து வந்த காலத்தில் அவர்களுக்கு நல்ல இலாபம் வந்தது. ஊதியம் வரவர சிநதேவன் மனம் திரிந்தான், 'பணம் என்ருல் பிணமும் வாய் திறக்கும்' என்பர் உலகோர், பணத்தின்மீது ஆசை கொள்ளாதார் யார்?

தனதேவன் இலாபத்தைச் சம பங்கு போடக் கேட்டான். சிநதேவன் மறுத்துவிட்டான். அப்படி ஏதும் உடன்பாடே இல்லை என்று பொய் கூறினுன், கூட்டாளிப் பொய்யைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தான் தனதேவன். ஊராரிடமும், பெரியோர்களிடமும் முறையிட்டுப் பார்த்தான். பலன் ஒன்றும் இல்லை. சம பங்கு தருவதற்கு எந்த ஒப்பந்தமும் இல்லை; சான்றும் இல்லை என்று கூறி விட்டான் சிநதேவன். வேறு வழி இன்றி, தனதேவன் அரசனிடம் முறையிட்டான். அரசன் வழக்கை உசாவினுன்.

''நான் விரும்பும் தொகை தருகிறேன் என்று சொன்னேனே அன்றி பாதி பங்கு தருவதாகக் கூறவில்லை'' என்ருன் சிநதேவன். அரசன் அவன் சொல்லை உறுதி செய்ய நெருப்பைக் கையில் எடுக்கச் சொன்னுன். கை தீய்ந்து போனுல் அவன் சொல்லுவது பொய்யாகும் என்ருன். தான் பொய் சொல்லுதலை அறிந்த சிநதேவன் உண்மையை ஒத்துக்கொண்டு தண்டனை பெற்ருன். உண்மையைப் பேசிய தனதேவன் சிறப்படைந்தான்,

★

## 11. பாரீசன்

இராசக்கிருக அரசன் **சிரேணி**. அவன் தேவி **சாலினி**. அவர்கள் மகன் **பாரீசன்**. அவன் நற்சாட்சி உடையவனுகி உலக பற்றுகளைத் துறந்து துறவியானுன்.

ஒரு சதுர்த்தசி அன்று உண்ணு நோன்பு இருந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தான். அப்போது, சுாவலர்களால் துரத்தப்பட்டு வந்த **வித்தியத்தன்** என்பவன் தான் திருடி வந்த முத்துமாலையை தியானத்தில் இருந்த பாரீசர் மேல் எறிந்துவிட்டு தப்பிவிட்டான். கள்வனைத் துரத்தி வந்த காவலர்கள் திருடன்தான் தியானம் செய்பவன் போல நடிக்கிருன் என்று கருதி பாரீசரை அரசன் முன் கொண்டு நிறுத்தினர். திருட்டு குற்றம் செய்த மகனைக் கொன்று விட அரசன் ஆணையிட்டான்.

பாரீசரைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றனர். அவரைக் கொலை செய்ய கொலைகாரன் வாளை வீசியபோது வாள் மாலையாக அவர் தோளில் விழுந்தது. கொலையாளி அச்சமுற்று அரசனிடம் சென்று நடந்ததைக் கூறினுன். அரசன் தவறு நேர்ந்து விட்டது என்று அறிந்து கொண்டு விரைந்து சென்ருன். களவு செய்யாத பாரீசரைக் கொல்லச் சொன்னதற்குப் பொருத்தருள வேண்டினுன்.

இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த **வித்தியத்தன்** வியப்படைந்தான். களவு செய்யாமையால் ஏற்படும் சிறப்பைக் கண்ணுக்கு நேரே கண்டான். அரசரிடம் சென்று தானே உண்மை யான **கள்வன்** என்று ஒப்புக்கொண்டான். அரசரும் பிறரும் இவற்றைக் கேட்டு மகிழ்ந்தனர். பாரீசருக்கு அளவிலா சிறப்புச் செய்தனர்.

★

# 12. நீலி

இலாட தேசத்தில் பிரகுகச்சம் என்றொரு நகரம் இருந்தது. அந் நகரில் **சிநதத்தன்** என்ற வணிகன் வசித்து வந்தான். அவன் மனைவி **சிநதத்தை**. அவர்களுக்கு ஒப்பற்ற மகள் ஒருத்தி. அவள் பெயர் **நீலி**. அவள் இறை பக்தி மிக்குடையவள் அடக்கம் அழகும் ஒருங்கே பெற்றவள். அவளை விரும்பினான் **சாகரதத்தன்**. மணந்தால் அவளையே மணப்பது இல்லையென்றால் மடிவது என்று முடிவு செய்தான். அவளோ சிந பக்தை. அவனோ புத்த மதத்தைச் சார்ந்தவன். என்ன செய்வது? எப்படி மணம் முடிப்பது? அவன் பெற்றோர் குழம்பினர். ஒரே மகன்; அவன் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்று நினைத்தனர். தாங்களும் சிந மதத்தராகி விட்டதாக பொய் சொல்லினர். அதனை மெய் என ஏமாந்து சிநதத்தன் தன் மகளை சாகரதத்தனுக்கு மணம் முடித்தான்!

நாள்கள் சென்றன. தங்களை ஏமாற்றிவிட்டதை நீலி அறிந்தாள். என்றாலும் தன் கொள்கைப்படி ஜினனை வணங்கி வந்தாள். அவளைப் புத்த மதத்திற்கு மாற்ற என்னென்னமோ செய்து பார்த்தனர். அவள் நற்சாட்சி உடையவள். மாறவே இல்லை. எரிச்சலுற்ற சாகரதத்தன் பெற்றோர் அவள்மீது அடாது பழி சுமத்தினர். அவள் ஒழுக்கம் கெட்டவள் என்று நா கூசாது பொய்யுரைத்தனர். தனக்கு நேர்ந்த பழியை எண்ணித் துடித்தாள் நங்கை! ''இப்பழி நீங்கினால் அல்லது உணவு கொள்ளேன்'' என்று நோன்பு பூண்டாள்! அன்று இரவு அவள் கனவில் தேவதை தோன்றி, ''உன் பழியைப் போக்குவேன்'' என்று கூறியது.

நீலியின் விரத பலத்தால் அவளைக் காத்துவரும் தேவதை அரசன் கனவிலும் தோன்றி, ''உன் அரண்மனைக் கதவுகள் நாளை மூடப்பட்டிருக்கும். கற்பு விரதம் காத்து வரும் ஓர் உத்தமியின் கால்பட்டால்தான் திறக்கும்'' என்று கூறி மறைந்தது. அரசன் வியப்புற்றான். அதேபோல மறுநாள் கதவுகள் திறக்கப்பட முடியாமல் கிடந்தன. கனவில் கண்டது நினைவில் நிகழ்ந்துள்ளதைப் பார்த்து தேவதை கூறியதுபோல விரதம் காக்கும் மங்கையைத் தேடச் செய்தான். காம ஒழுக்கப் பழிக்கு ஆளான நீலி விரதம் கொண்டிருப்பதை அறிந்து அவளை அழைத்தனர். அவள் வந்து கால் வைத்தவுடன் கதவுகள் திறந்து கொண்டன. அதனைக் கண்ட அரசர் முதலியோர் மகிழ்ந்தனர்.

கொண்டானையன்றி மனத்தாலும் வேறு நினையாத கற்பொழுக்கம் கொண்ட நீலியை எல்லோரும் புகழ்ந்தனர்; பழியும் பகலவன் கண்ட பனிபோல நீங்கிற்று! ★

# 13. சயகுமாரன்

அத்திஞபுரத்து அரசன் **சோமப்பிரபன்!** அவன் மகன் **சயகுமாரன்.** சயகுமாரன் தேவி **சுலோசனை!** இருவரும் கருத்தொருமித்த காதலர்களாக வாழ்ந்து வந்தனர். 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்பதுபோல அளவுபட்ட ஆசையுடன் வாழ்ந்து வந்தான் சயகுமாரன். எனக்கு உரியதற்கு மேல் எதையும் விரும்பாதவன் என்று புகழப்பட்டு வந்தான்! அவன் உறுதியை சோதித்துப் பார்க்க **இரவிப்பிரபன்** என்ற அமரன் வந்தான்.

கண்டார் மயங்கும் கன்னி வடிவம் கொண்டு சயகுமாரனை, அணுகி, ''அரசே! நான் நமி என்ற வித்யாதரன் மனைவி! என் பெயர் **சுரூபை!** சுயம்வர மண்டபத்தில் உங்களோடு போட்டி இட்டானே நமி அவன் மனைவி. அவனை விட்டு நான் நீங்கி விட்டேன். என்னை நீங்கள் ஏற்றுக்கொண்டால் பல வித்தைகளை அறிந்து கொள்வதுடன் அரசாட்சியும் விரிவடையும்'' என்றாள். பெண்ணுக்கும் மண்ணுக்கும் மயங்காதார் யார்? சயகுமாரனும் மயங்கிவிடுவான் என்று கருதினான் இரவிப்பிரபன். ஆனால் அவனோ, ''பெண்ணே! சுலோசனைக்குத்தான் நான் மணாளன்! பிறருக்கு எல்லாம் நான் மகன்'' என்றான்.

அவனை மேலும் சோதிக்கக் கருதி பெண்ணுருவில் இருந்த இரவிப்பிரபன் தழுவுதல் முதலான காம குறும்புகளைச் செய்தான். சயகுமாரன் இவற்றை எல்லாம் எதிர்நோக்கித் தானே வதம் மேற்கொண்டான். இத்தகைய இடையூறுகளுக்கு அவன் இரையாவானா? ஆகமாட்டான்; ஆகவில்லை! அவன் உறுதியைக் கண்ட அமரன் தன் உண்மை உருவைக் காட்டி வாழ்த்திச் சென்றான்!

சயகுமாரன் சனங்களால் போற்றப்பட்டான்! ★

# 14. தனசிரீ

குருகச்சம் என்னுல் நகரில் **தனபாலன்** என்ற வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி **தனசிரீ** என்பாள். அவர்களுக்கு இருமக்கள்; **குணபாலன், சுந்தரி** என்று பெயர். **குண்டலன்** என்ற இளைஞனும் தனபாலன் அரவணைப்பில் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் திடீரென்று தனபாலன் இறந்துவிட்டான். தந்தை இறந்த நிலையில் சிறகொடிந்த பறவைகளாகத் துடித்தனர் மக்கள். குடும்ப பொறுப்பு முழுதும் குணபாலன் மீது விழுந்தது. ஏதோ வாழ்ந்து கொண்டிருந்தனர். நாள்கள் சென்றன.

தனசிரீக்கும் குண்டலனுக்கும் கூடாத தொடர்பு ஏற்பட்டு விட்டது. எல்லாப் பசியைக் காட்டிலும் உடற்பசி கொடுமை யானது. அதற்கு இரையாகிவிட்டால் பிறகு மீண்டு வருதல் ஏது? தனசிரீ காமப்பசிக்கு இரையாகி கண்மண் தெரியாமல் ஆடினுள்! அன்னையாரின் கூடா ஒழுக்கத்தை அறிந்து துடித்தான் மகன்! தன் காம ஒழுக்கம் மகனுக்குத் தெரிந்துவிட்டது என்பதைக் கண்டு கொண்டாள் தாய். மகனையே தீர்த்துவிட திட்டமிட்டாள்! மோகம் மூண்டு விட்டால் மகனாவது மகளாவது? மகனைத் தீர்த்து விடும்படி குண்டலனுக்கு வழி கூறினுள். தாயின் பேச்சை மறைவில் கேட்டிருந்த சுந்தரி அண்ணனை எச்சரித்தாள்!

மாடுகளை ஓட்டிக்கொண்டு வழக்கம்போல காட்டுக்குச் சென்ருன் மகன். மாடுகளை மேய விட்டு, தன் துணிகளைக்கொண்டு தான் படுத்து இருப்பதுபோல உருவ ஏற்பாடு செய்துவிட்டு ஒளிந்து இருந்தான். கொலை செய்ய வந்த குண்டலன் குணபாலன் படுத் திருக்கிருன் என்று அவன் துணிமீது கொடுவாளை எறிந்தான். உடனே குணபாலன் வெளிப்பட்டு அக்கொடுவாளைக் கொண்டு குண்டலனை வெட்டி வீழ்த்தினுன். அக்கொடுவாளோடு வீட்டுக்கு வந் தான். குணபாலன் வாளொடு வருவதைப் பார்த்து நிலைமையைப் புரிந்து கொண்ட தனசிரீ மகன் கையிலிருந்து கொடுவாளைப் பிடுங்கி மகன் என்றும் பாராமல் அவனை வெட்டினுள்! இதைப் பார்த்துக் கொண்டிருந்த சுந்தரி உலக்கையால் தன் தாயாரைத் தாக்கினுள். அதற்குள் அரசன் ஆட்கள் விரைந்து வந்து தனசிரீயைக் கொண்டு சென்றனர். சுந்தரி அரசனிடம் வரலாறு முழுதும் கூறினுள்; அரசன் வெகுண்டு தனசிரீக்குக் கொடுந்தண்டனை வழங்கினுன்.

கொலையினுல் பெற்ற மகனை இழந்ததோடு அரச தண்டனைக்கும் தீராப் பழிக்கும் ஆளான தனசிரீயை உலகத்தார் தூற்றலாயினர். ★

# 15. சத்தியன்

சிம்மபுரத்து அரசன் **சிம்மசேனன்** அவனிடம் சத்தியகோடன் என்னும் பட்டப் பெயர் பூண்ட சிரீபூதி என்னும் அமைச்சன் ஒருவன் இருந்தான். கப்பல் பயணம் செய்து வந்த **பத்திரமித்திரன்** என்ற வணிகன் சிம்மபுரத்து வளத்தைக் கண்டு அங்கேயே வாழ நினைத்து, சத்திய கோடனிடம் விலையுயர்ந்த மணிகள் அடங்கிய செப் பொன்றைக் கொடுத்து, 'தான் இதை மீண்டு வந்து வாங்கிக் கொள்கிறேன்' என்று சொல்லி தன் ஊருக்குப் போய் திரும்பி வந்து தன் செப்பினைத் தரும்படி சத்திய கோடனிடம் கேட்டான்.

சத்தியகோடன், 'யான் உன்னை அறியேன்; செப்பையும் நீ என்னிடம் கொடுக்கவில்லை' என்றான். பத்திரமித்திரன் மனம் வருந்தி அமைச்சனுடைய மோசச் செயலை அனைவருக்கும் சொல்லித் திரிந்தான். அப்போது அமைச்சன், 'இந்த பத்திரமித்துரன் பொருளைக் கள்வர் களவாடியதால் பொருளை இழந்த அதிர்ச்சியில் புலம்பித் திரிகிறான்' என்று சொல்லித் தன்மோசச் செயலை மறைத்து வந்தான்.

அரசன் தேவியாகிய இராமதத்தை, 'இவன் எப்பொழுதும் ஒரே தன்மையாகப் புலம்புகிறான். பயித்தமானால் முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவான்; இவன் பித்தனாக மாட்டான்' என்று எண்ணி தன் ஐயத்தை அரசனிடம் கூறினாள். அரசனும் அதனை ஏற்று சத்தியகோடனைச் சோதிக்க எண்ணினான். தன் தேவியின் விருப்பப்படி சத்தியகோடனைச் சூதாட்டத்திற்கு அழைத்து அவ ளோடு சூதாட விட்டான். அதில் அவன் பூணூலையும் முத்திரை மோதிரத்தையும் பந்தயம் வைக்கச் சொல்லி அவற்றை ஜெயித் தாள். இராமதத்தை பின் **நிபுணமதி** என்னும் பணிப்பெண் கையில் அவற்றைக் கொடுத்து, இவற்றை நீ சத்திய கோடன் கருவூலத் தலைவனிடம் காட்டி, அந்த பத்திரமித்திரன் செப்பை வாங்கி வா' என்று விடுத்தாள். அவளும் அவ்வாறே இரகசியமாக வாங்கி வந்தாள். மன்னன், பத்திரமித்திரன் உண்மையை உறுதி செய்து கொள்ள வேண்டி அந்தச் செப்பில் தன்னுடைய சில மணிகளையும் கலந்து அவனிடம் கொடுத்தான். அவன் அரசன் வைத்த மணிகளை எல்லாம் நீக்கி விட்டு தன்னுடைய மணிகளை மட்டும் எடுத்துக் கொண்டான். அரசன் அகம் மகிழ்ந்து அவனுக்குச் சிறப்பு செய்தான்.

பொய்மை கூறி வாழ்ந்த பூதிக்குத் தண்டனை கொடுத்தான். பொய்யால் கேடு அடைந்த சத்தியனை மக்கள் தூற்றி வரலாயினர். ★

---

29 இக்கதை மிக விரிவாக மேருமந்தரப் புராணத்தில் பேசப்படுகிறது.

# 16 தாபதன்

வத்சல நாட்டில் கௌசாம்பி என்னும் நகரில் ஒரு திருடன் வாழ்ந்து வந்தான். அவன் திருடன் என்று யாரும் ஐயமுருத வகையில் அவன் தன் திருட்டுத் தொழிலை நடத்தி வந்தான். அவன் ஊரின் கோடியில் இருந்த ஆலமரத்தில் ஓர் உறி கட்டினன். அதிலிருந்தபடியே தவம் செய்தான். அவன் செய்கைக்குக் காரணம் கேட்ட போது, 'எனக்கு என்று நிலம் கிடையாது. பிறருடைய நிலத்தை மிதிக்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது? அதனுல்தான் உரியில் இருந்தபடியே தவம் செய்கிறேன்' என்ருன். அவன் கூறியதைக் கேட்ட அப்பாவி மக்கள் **உறித்தாபதனைப்** போற்றினர். பகல் முழுதும் தாபதன் போல நடித்து நடு இரவில் திருடும் வேலையைச் செய்தான்! நாள்கள் சென்றன!

நாட்டில் திருடு மிகுவதை அறிந்து அரசன் வெகுண்டான். காவலர்களைக் கடிந்து கொண்டான். கள்ளனைப் பிடிக்க நாள் குறித்தான். காவலர் கலங்கினர். அப்போது ஒரு பிராமணன் உணவுக்கு காவலன் வீட்டுக்கு வந்தான். காவலன் கவலையை அறிந்தான். வரும் வழியில் பார்த்த உறித்தாபதனே கள்வனுக இருக்க வேண்டும் என்று கருதினன். அதற்குக் காரணம் உண்டு. அவன் மனைவி பிற ஆடவர் தன் மேல் படக்கூடாது என்ற கொள்கையினுல் தன் பிள்ளைக்குப் பால் கொடுக்கும்போது கூட பிள்ளையின் உடல் தன் மேல் படாதபடிச் சேலையால் தன் உடலை மூடிக் கொள்வாள். அதனைக் கண்ட பிராமணன் தன் மனைவியின் பத்தினித் தன்மையைக் கண்டு பூரித்துப் போனுன். ஒரு நாள் இரவு அவன் மனைவி அவனை ஏமாற்றி விட்டு ஓர் இடையனுடன் ஓடி விட்டாள். அவன் துறவியானுன். உண்மையான தூய்மை எது பொய்யான தூய்மை எது என்று எண்ணுமல் பொது மக்கள் நம்பி ஏமாறுவதால் வேடதாரிகள் வாழ்கின்றனர்.

பிராமணன் காவலனுக்கு ஆறுதல் கூறிவிட்டு உறித்தாபதன் இருக்கும் இடத்திற்குச் சென்ருன். தான் ஒரு குருடன் போல நடித்து அங்கேயே தங்கினுன். பிராமணன் ஒன்றும் அறியாதது போல நன்ருக நடித்தான். அவன் குருடன்தான் என்று எண்ணிக் கொண்டு உறித்தாபதன் வழக்கம் போல திருடச் சென்ருன். திருடி வந்த பொருள்களைப் புதைத்துவிட்டு வழக்கம் போல உறியில் ஏறிக் கொண்டான். இவற்றை எல்லாம் பார்த்து வைத்துக் கொண்ட பிராமணன் காவலனுக்குத் துப்பு கொடுத்தான். காவலர்கள் உறித் தாபதனைக் கையும் களவுமாகப் பிடித்து அரசன் முன் நிறுத்தினர். அரசன் கள்ளனைக் கடுமையாகத் தண்டித்தான். களவால் துன்புற்ருன் தாபதன்.

# 17. காப்பான்

அகிர நாட்டில் **எமதண்டன்** என்றொரு நாடு காப்பான் இருந்தான். அவன் ஒழுக்கம் இல்லாதவன். அவன் தாய் பெயர் **வசுந்தரி**. அவளும் ஒழுக்கம் இல்லாதவள். நூலைப் போல சேலை என்பார்கள் அல்லவா? அதைப் போல தாயும் மகனும் ஒழுக்க மில்லாதவர்கள்.

ஒருநாள் வசுந்தரி தன் மருமகள் அணிகளை அணிந்து அழகு செய்து கொண்டு வெளியே போனாள். தன் ஒழுக்கக் கேட்டை வீட்டில் நடத்த முடியுமா? அதனால், இதற்கு என்று தனியாக உள்ள இருட்டிற்குச் சென்றாள்.

பரத்தை உறவு நாடிப் புறப்பட்ட எமதண்டன் இருட்டில் அவளோடு கூடினான். என்னே காமத்தின் கொடுமை? காமத்திற்கு கண் இல்லை என்பது இதனால் தானே? தொடர்ந்து அவன் அன்பைப் பெற வேண்டி வசுந்தரி தான் அணிந்திருந்த நகைகளில் ஒன்றைப் பரிசளித்தாள். அதைப் பெற்றுக் கொண்டு வந்த எமதண்டன் அந் நகையைத் தன் மனைவியிடம் கொடுத்தான். 'இது என் நகையா யிற்றே! நேற்று மாலை மாமியிடம் கொடுத்தேனே' என்றாள். அதைக்கேட்ட நாடு காப்பான் தான் நாடி உறவு கொண்டது தன் தாயே என்று அறிந்தான். என்னே கொடுமை! இப்பொழுதாவது நல்லறிவு தோன்ற வேண்டாமா? அவனுக்குத் தோன்றவில்லையே! காமத்தின் கொடுமையை என்னென்பது? நாளும் நாளும் அவளை நாடிச் சென்றான். நாள்கள் சென்றன!

அவன் முறையற்ற உறவு மனைவிக்கும் தெரிந்து விட்டது. கண் டித்தாள்; கண் கலங்கினாள்; மனம் பொறுக்காமல் ஒருத்தியிடம் கூறி விட்டாள்! பெண்ணிடம் போன இரகசியம் நிற்குமா? அது ஊர் முழுதும் பரவி ஊராள்வோன் காதுக்கும் எட்டியது! முறை கெட்ட உறவை கண்டு பிடிக்கத் தக்கவரை ஏவினான் முறை செய்யும் மன்னன்.

தகாத உறவு கொண்டோர் தப்ப முடியாமல் தண்டனைக் குள்ளானர். அரசன் தந்த கொடுந்தண்டனை ஒரு புறம்! அடுத்த பல பிறவிகள் அவர்கள் பட்ட கொடும் துன்பங்களை வருணிக்க வார்த்தை போதா! காமத்தால் அறிவு இழந்தோர் நல் பிறவி எடுப்பது ஏது?

# 18. தாடி வெண்ணெய்க்காரன்

அயோத்தி நகரில் **உலுப்ததத்தன்** என்றொரு வணிகன் இருந்தான். அவன் நாடுகளைச் சுற்றி சேர்த்து வந்த பொருளை வழியில் கள்ளரிடம் பறிகொடுத்தான். பொருளை இழந்த அவன், தாடியும் மீசையுமாகத் திரிந்து கொண்டிருந்தான். இனிப் பொருளைச் சேர்ப்பது எப்படி என்று எண்ணமிட்டு வரலானான்.

ஒரு நாள் அவன் ஓர் இடைச்சியிடம் மோர் வாங்கிக் குடித்தான். அப்போது அவன் தாடியில் கொஞ்சம் வெண்ணெய் ஒட்டிக் கொண்டது. அதனைப் பார்த்தவுடன் அவனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. நாள் தோறும் இப்படி வெண்ணெய் சேர்த்து நெய்யாக்கி பணம் சேர்க்கலாம் எனத் திட்டமிட்டான். தன் திட்டத்தைச் செயல்படுத்த நடவடிக்கை மேற்கொண்டான்.

ஆயர்பாடியில் அமர்ந்துகொண்டு ஆயர்களால் கொடுக்கப்பட்ட மோரைத் தாடி தோர்டியும்படி குடித்து வந்ததால் அவனுக்குத் தாடி வெண்ணெய்க்காரன் என்று பெயரும் வந்தது. இவ்வாறாக, அவன் நாளடைவில் ஒரு சேர் வெண்ணெயைச் சேர்த்து ஒரு கலயத்தில் இட்டு ஒரு உறியில் அந்தக் கலயத்தை வைத்தான். அப்போது குளிர்காலம் ஆதலால் அவ்வுரியின் அடியில் தன் கால்களுக்கு நேராக ஒரு நெருப்புச் சட்டியை வைத்திருந்தான். படுத்துக் கொண்டிருந்த அவன் கற்பனையில் ஆழ்ந்தான். 'இவ்வெண்ணெயை நெய்யாக்கி விற்றால் பணம் கிடைக்கும். அதைக் கொண்டு முன் போல துணி வாணிகம் செய்து பொருள் சேர்க்கலாம். பெரும் பொருள் சேர்ந்தால் கப்பல் வாணிகம் செய்யலாம். கப்பல் வாணிகம் செழித்தால் பொருள் குவியும். ஏழடுக்கு மாளிகைகள் கட்டலாம். மேல்தளத்தில் பஞ்சணையில் படுத்துப் புரலலாம். அழகு நங்கையர் மனைவியர்களாக வருவர். கால் கை பிடித்து விடுவர். அப்போது ஊடல் கொண்டு கால்களைப் பிடிக்கத் தெரியவில்லை என்று இப்படி மார்பில் உதைப்பேன்' என்று சுவையான பகல் கனவில் ஆழ்ந்திருந்த தாடி வெண்ணெய்க்காரன் ஓர் உதை விட்டான். அவ்வளவில் அந்த உதை உறியில் பட்டு 'அதிலிருந்த கலயம் நெருப்புச் சட்டியில் விழ, நெருப்பு சட்டி கீழே உருண்டு நெருப்பு சிதற குடிசை தீப்பிடித்துக் கொண்டு எறிந்தது. பேராசைத் தீ பிடித்து கற்பனையில் ஆழ்ந்த வெண்ணெய்க்காரன் உடல் குடிசைத் தீயில் எரிந்து கரிந்து போயிற்று!

## 19. சிரீசேனன்

மலய தேசத்தில் இரத்தின சஞ்சயபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன் **சிரீசேனன்**. அவன் தேவியர் இருவர் **சிம்ம-நந்திதை, அநிந்ததை** என்று பெயர். அவனுக்கு **இந்திரன், உபேந் திரன்** என்று இருமக்கள்.

அவர்களிடத்து அடைக்கலமாக வந்து சேர்ந்தாள் **சத்யபாமை** என்ற பெண். தாசிக்குப் பிறந்த ஒருவன் தன் கணவனாக ஆகி யிருப்பதை அறிந்த அந்தப் பெண் ஈனப் பிறவியான அவனுடன் வாழ்வதைக் காட்டிலும் சாவதே மேல் என்று எண்ணினாள். அடைக் கலமாக அரசியை வந்து அடைந்தாள்.

ஒரு நாள் **அர்க்ககீர்த்தி அமிதகதி** என்ற இரு சாரணர் இரத்தின சஞ்சய புரம் வந்தனர். அவர்களை முறைப்படி வரவேற்று அன்னம் அளித்தனர் அரசனும் அரசியும் அவர்கள் விதிப்படி அன்னம் அளித்த போது சத்யபாமையும் உடன் துணை செய்தாள். அவ் அன்னதானத் திற்குத் துணை செய்ததால் சத்யபாமை உத்தம போக பூமியில் தேவராய்ப்பிறந்தாள்.

சிரீசேனனும் தேவ சுகங்களைத் துய்த்து பின்னர் சாந்திநாத தீர்த்தங்கரர் ஆனார்!

## 20. இடபசேனை

சனதபம் என்னும் தேசத்தில் **தனபதி** என்ற வாணிகர் வாழ்ந்து வந்தார். அவன் மனைவி **தனசிரீ.** அவர்களுக்கும் அழகும் அறிவும் உள்ள பெண் குழந்தை பிறந்தது. அதற்கு **இடபசேனை** என்று பெய ரிட்டுப் பாராட்டி வளர்த்து வந்தனர்.

ஒருநாள் தாதி குழந்தையைக் குளிப்பாட்டிய நீரால் நோய் பிடித்த நாயொன்றை ஓட்டினாள். அந்நீர்பட்ட நாய் நோய் முற்றும் நீங்கியதாக மீண்டும் வந்தது. இதனைக் கண்டு வியப்புற்று, குழந்தை உடல் மீது பட்ட நீரை தேமல், குஷ்டம், முதலிய கொடிய நோய் உடையவர்கள் உடல்மீது தெளித்துப் பார்த்தனர். உடனேநோய் தீர்ந்து விடுவதை அறிந்தனர். இப்படியே நோய் தீர்த்து வந்தனர்.

அந்நாட்டில் செங்கண்மாலேறி என்னும் கொடிய நோய் பரவி யது. அந்நோய் கண்ட மூன்றும் நாளே மக்கள் மாண்டனர். இந் நோய் அரசனையும் அரச குமாரனையும் பற்றிய போது இடபசேனை யின் உடல் மீது பட்ட நீர் கொண்டு மரணத்தைப் போக்கினர். இதனை அறிந்த அரசன் அவளை மணந்தால் தனக்கு நோயே வராது என்று எண்ணமிட்டு அவளை மணந்து கொண்டான். அரசன் பட்டத் தரசியான பின் அவள் மீது பொறுமை கொண்டனர் மற்ற பட்டத்

தரசிகள். அவள் மீது பழி சுமத்தினர். உண்மை அறியாத அரசன் அவளை நீக்கி விட்டான். அவளைத் துன்புறுத்த முயன்ற போது **மணிசூளிகை** என்ற தேவமாது அவளைக் காப்பாற்றினாள், இடப சேனை மீது தன் ஆணை ஏதும் செல்லவில்லை என்பதை அறிந்து அரசன் அஞ்சினான். அப்போது தேவமாது சொன்னாள், 'அரசனே! முன் பவத்தில் அறியாது தவமுனிவர் மீது குப்பைகளைக் கொட்டினாள். பின்னால் அதை அறிந்த போது வருத்தம் உற்று அவருக்கு மருத்துவ உதவி செய்து வந்தாள். அதன் பலனாக பிறருடைய நோயைத் தீர்க்கும் பேறு பெற்றாள். அறியாமல் செய்த பிழைக்கு உன்னால் நீக்கப்பட்டாள்' என்று கூறினாள்.

தன் முன் பவத்தை அறிந்த இடபசேனை உலகைத் துறந்து முடிவில் தேவன் ஆனாள்! ★

## 21. பன்றி

மாளவ தேசத்தில் கடக்கு என்ற கிராமம் இருந்தது. அவ்வூரில் **தேவிலன்** என்ற குயவனும் **தர்மிலன்** என்ற அம்பட்டனும் இருந்தனர். அவர்கள் இருவரும் சேர்ந்து ஒரு சத்திரத்தைக் கட்டினர். ஒரு நாள் தேவிலன் ஒரு ஜைன முனிவரை அழைத்து வந்து தங்கச் செய்தான். ஆனால் அம்பட்டன் அந்த ஜைன முனிவரை வெளியில் அனுப்பிவிட்டு தான் அழைத்து வந்த துறவியைத் தங்க வைத்தான். தேவிலனுக்கு இது தெரியாது.

மறுநாள் வந்து பார்த்தபோது, ஜைன முனிவர் இரவு முழுதும் குளிரினாலும் பூச்சிகளினாலும் துன்புற்று இருந்ததை அறிந்தான். அவன் வெகுண்டு அம்பட்டனுடன் சண்டையிட்டான். இருவரும் மடிந்தனர். அம்பட்டன் புலியாகவும் குயவன் பன்றியாகவும் பிறந்தனர்.

புலி இருந்த குகையில் **குப்தர், திரி குப்தர்** என்று இரு முனிவர்கள் வந்து தங்கினர். அக்குகைக்கு வெளியே இருந்தது பன்றி. அது முனிவர்களைப் பார்த்தவுடன் தன் முன்பவ உணர்ச்சி தோன்றி அம் முனிவர்கள் முன்படுத்து வணங்கியது.

குகைக்குள் மனிதர் இருப்பதை மோப்பத்தால் அறிந்து புலி அவர்களைத் தாக்க அவர்கள் மீது பாய்ந்தது. அவ்வளவில் பன்றி புலியின் மீது வெகுண்டு பாய்ந்தது. இரண்டும் கொடுமையாகச் சண்டை இட்டு மடிந்தன. பன்றி தேவலோகத்தில் தேவனாகவும் புலி நரகத்திலும் பிறந்தன. இருக்க இடம் கொடுத்து தேவலோகத்தில் இடம் பிடித்தது பன்றி! ★

## 22. கொண்டை

பிடநாட்டில் குருமறை என்று ஒரு நகரம். அந்நகரில் **கரமுண்டர்** என்ற வாணிகர் வாழ்ந்து வந்தார். அவர் மனைவி **சீரீமதி**. அவர்கள் தெய்வபக்தி மிக உடையவர்கள். அவர்களுடைய கால்நடைகளை **மதிரவன்** என்பவன் மேய்த்து வந்தான்.

ஒருநாள் அவன் கால்நடைகளை ஓட்டிக் கொண்டு காட்டிற்குச் சென்றான். அக்காடு தீயால் வெந்து போயிருந்தது. ஆனால் அந்த கருகிய காட்டிலும் ஒரு சோலை காணப்பட்டது. மதிரவன் வியப் புற்று அவ்விடத்திற்குச் சென்று பார்த்தான். இவ்விடத்தில் ஏதாவது சிறப்பு இருக்கும் என நினைத்தான். அவன் நினைத்தது போன்று ஒரு மரத்தின் கீழ் ஆகமம் இருக்கக் கண்டான். அதை மிகவும் விழிப் போடு வீட்டிற்கு எடுத்து வந்து காத்து வந்தான்.

அப்போது, **சுருதசாகரர்** என்ற முனிவர் அன்ன ஏற்புக்காக அவ் வூருக்கு வந்தார். கரமுண்டர் அம் முனிவரை முறையாக வரவேற்று அன்னம் படைத்தார். அதுபோது மதிரவன் தான் காட்டிலிருந்து எடுத்து வந்த ஆகமத்தை முனிவரிடம் கொடுத்து அது கிடைத்த வரலாற்றைக் கூறினான். முனிவர் அவனை வாழ்த்திச் சென்றார்.

அவன் இறந்த போது கரமுண்டருக்கு மகனாகத் தோன்றினான். அவர் அவனைக் **கொண்டை** (கௌண்டேசன்) என்று பெயரிட்டு அன்புடன் வளர்த்து வந்தார். அவனும் பிள்ளைப் பருவம் தாண் டியது போது சுருதசாகர முனிவர் அவ்வூருக்கு வந்து அவனை அழைத் துக் கொண்டார். பின் அவரிடம் துறவு ஏற்று சுருதங்களில் முழு ஞானம் பெற்றார். அவரே நூல்கள் பல படைத்த குந்த குந்தாச் சாரியார் ஆவார்!

★

# 23. தேரை (தவளை)

**பகவன் மகாவீரர்** ஏழ் இறை இருக்கை வட்டம் எழுந்திருந்தது. அனைத்து உயிர்களும் அருகன் உரை கேட்க ஆவலாய் சென்றன. தவளை இலச்சினைப் பொறித்த முடியுடன் தேவன் ஒருவனும் அருகனைத் தரிசிக்க வந்தான். **சிரேணிக** மன்னன் **கௌதம சாமியை** வணங்கி 'ஏன் இந்த தேவன் தவளை இலச்சினைப் பொறித்த முடியுடன் விளங்குகிறான்?' என்று கேட்டான். அவன் வரலாற்றை கௌதமசாமி கூறினார்:

'இராசகிருகம் என்ற நகரில் **நாகதத்தன்** என்ற வணிகன் இருந்தான். அவன் மனைவி **பவதத்தை** அவன் இறந்தபோது தன் வீட்டுப் பக்கத்தில் உள்ள குளத்தில் தவளையாகப் பிறந்தான். அவன் மனைவி குளத்துக்கு வரும்பொழுது எல்லாம் அந்தவளை முன் பவ உணர்வு பெற்று அவள் மீது தாவி விளையாடியது. இதைக்கண்டு அவள், தனக்கும் அத் தவளைக்கும் ஏவாவது ஒரு தொடர்பு இருக்க வேண்டும் என்று நினைத்தாள். அப்போது வந்த **சுவரத முனிவரிடம்** அதைப் பற்றிக்கேட்டாள். அவரும், தம் தொலைபவ உணர்வால், தவளை அவள் கணவனாக இருந்தது என்றார். அதனை அறிந்த அவள் அத் தவளையை எடுத்து வந்து தன் வீட்டில் அன்புடன் காத்து வந்தாள்.

இந்த நிலையில் பகவன் மகாவீரர் சமவசரணம் எழுந்தது. மக்கள் அறவுரைக் கேட்க குழுமினர். பவதத்தையும் புறப்பட்டுச் சென்றாள். தவளையும் பக்தியால் ஒரு தாமரை இதழை கவ்விக் கொண்டு புறப்பட்டது. ஆனால் வழியில் ஒரு யானையின் காலில் மிதிபட்டு இறந்தது. அது, பூசை உணர்வு புண்ணியத்தால் சௌதர்ம கல்பத்தில் தேவனாகப் பிறந்தது. அவ்வளவில் அத்தேவனே அவதி ஞானத்தால் தன் முன் பவத்தை அறிந்து தவளை இலச்சினையுடன் வந்துள்ளார்' என்றார். தெய்வ பூசனையால் தேவனாயிற்று தேரை!

# சொல்லடைவு

(எண் : பாடல் எண்)

அகம்-உள். பெ. 89
அகலும்-விலகும். வி.மு. அருக துதி. வரி. 2.
அகழ்தல்-மண்ணைத் தோண்டு தல். தொ.பெ. 93
அகற்றி-விலக்கி. வி.எ. 148,149
அகன்ற-விலக்கிய. பெ. எ. 166
அகன்றது-நீக்கியது. வி.மு. 39
அச்சம்-பயம். பெ. 41, 156,181
அச்சித்தன்-ஸச்சித்த விரதி என்றது ஐந்தாம் நிலை சிராவகன். பெ. 166.
அச்சு-வண்டியின் அச்சு. பெ. 45
அஞ்சனசோரன் - ஒரு திருடனின் பெயர். நிச்சங்கை - நம்பிக்கைவைத்தல் என்ற கருத்துடைய கதையில் வருபவன். பெ. 25
அஞ்சி-பயந்து. வி.எ. 100, 152
அட்டமி-அஷ்ட்டமித்திதி. பெ. 122
அடங்கி-அடக்கம் கொண்டு. வி. எ. 114
அடங்கியான்-அடங்கியவன். வி.அ.பெ. 168
அடவி-காடு. பெ. 84, 130
அடி-கால். பெ. 143
அடையும்-வந்து சேரும். வி.மு. 175
அடைத்தல்-விலங்குகளை ஓரிடத்தில் அடைத்துப் பூட்டி வைத்தல். தொ.பெ. 68
அடைந்து-சேர்ந்து. வி.எ. 172
அணி-அழகு. பெ. அருகதுதி. 1, 181
அணுவதம்-இல்லறத்தார் பின்பற்ற வேண்டிய ஐந்து விரதங்கள். பெ. 65, 66,
அத்து-சாரியை, இடைச்சொல். 11, 15, 16, 21, 22, 23, 23, 24, 33, 36, 40, 40, 41, 46, 50, 56, 89, 91, 116, 137, 140, 149, 151, 153, 154, 154, 155, 160, 173
அதம்-அத்திப்பழம் அல்லது அழுகிய (பழம்), பெ. 101
அதன்-அன் சாரியை ஏற்ற அஃது என்ற சுட்டுப்பெயர், 43, 84, 110, 131, 142
அநாரம்பன்-உழவு, வரைவு, வாள், கல்வி, வணிகம், சிற்பத்தொழில்கள், ஏதேனும் ஒரு வகையில் உயிர் இம்சை விளைக்கக் கூடியன. இவ் வாறு, தொழில்களையும் விட்டவன் அநாரம்பன். 169
அபரிக்கிரகன்-ஒன்பதாம் நிலை சிராவகன், பெ. 170
அபுக்தன்-இரவில் உண்ணுதான் பெ. 167
அமைந்த-தோன்றிய பெ.எ. 85, 132
அரசர்-வேந்தர் பெ. 53
அரண்-பாதுகாவல் பெ. 10
அரவு-பாம்பு பெ. 181

ஆசை-விருப்பம் பெ. 77
ஆட்டு-(நீர்)ஆடுதல் தொ.பெ. 103, 123
ஆடல்-(நீர்)ஆடுதல் தொ.பெ. 30
ஆண்டு-வருடம் பெ. 105, 131
ஆதி-முதலாக பெ. 8, 110
ஆம்-ஆகும் என்பதன் இடைக் குறை வி.மு. அல்லது பெ.எ. 19, 22, 38, 62, 69, 74, 77, 87, 91, 94, 106, 119, 134, 162, 165, 166, 172
ஆய்-ஆகி வி.எ. 48, 110,162
ஆய்ந்து-ஆராய்ந்து வி.எ. 176
ஆய-ஆகிய என்பதன் இடைக் குறை பெ.எ. 87, 146
ஆர்த்தல் - கட்டி வைத்தல்' தொ.பெ. 68
ஆர்வம்-விருப்பம் 6, 32, 91
ஆரம்பம்-தொடக்கம். பெ. 11, 123, 126, 169
ஆல்-மூன்றும் வேற்றுமை உருபு. இ. 9, 35, 36, 38, 111, 120, 137, 139, 163
ஆலோசனை-சிந்தித்தல். பெ.148
ஆவர்-பிறப்பினர் ஆகுவர். வி. மு. 53, 55
ஆள்-ஆட்கள் பெ. 92
ஆற்ற-மிக. வி.எ. 175
ஆறு-சைன நெறி. பெ. 22
ஆறு-ஸ்திதி கரணம் என்ற ஆறும் உறுப்பு. பெ. 22
ஆறு-நீர் ஓடும் ஆறு. பெ. 30 84 130.
ஆறு - எண்ணிக்கை. எண்ணடி. 39, 41, 42
ஆறு-வகை. பெ. 42
ஆன்-மூன்றும் வேற்றுமை உருபு. இ. 21, 109
இ-இவை. சு. பெ. 2, 4, 42, 105, 131
இகந்த-நீங்கிய. பெ.எ. 79
இகழ்க்கில்-இகழின். வி.எ. 35
இஞ்சி-பச்சை இஞ்சி. பெ. 101
இடபமாசேன்-விரஷபசேன். பெ. 141
இடம்-பகுதி இடம். பெ. 88, 130
இடர்-துன்பம். பெ. 136
இடை-இடம். பெ. 39
இடையூறு-தடைப்படுத்தும் துன் பம். பெ. 145
இணை-இணை விழைச்சு. பெ. 75
இத்துணை-இந்த அளவு, 131
இது-சுட்டுப் பெயர். 112
இந்தியம்-பஞ்ச இந்திரியம் என் பதன் குறை. பெ. 11
இந்திரர்-தேவேந்திரர், பெ. 151
இந்திரன்-சினேந்திரர் பெ. 151
இயக்கம்-சவாரி செய்தல். பெ. 78
இயங்கு-நிலைபெயரும், பெ.எ.
இயமம்-வாழ்நாள் விரதம், 102
இயன்றது-கூடினது, 13
இரங்கல்-வருந்துதல், தொ.பெ. 115
இரண்டு-பெ.எ. 63, 69
இரா-இரவு. பெ. 105
இராகம்-அவா. பெ. 8
இராத்திரி-இரவு. பெ. 167
இரு-இரண்டு. பெ.அடி. 170
இருக்கை-ஆசனம். பெ. 108
இருடி-ரிஷி. பெ. 12, 64
இருள்-இருட்டு. பெ. 77, 167
இரேவதையார்-பெயர், 26
இல்-இல்லாத. 7, 19, 25, 28, 29, 48, 51, 52, 54, 55, 83, 93, 2, 100, 135, 140, 145, 158, 160, 169, இடப் பொருள். 43, 48, 93,

ஈத்தல்-கொடுத்தல். தொ.பெ. 94

ஈயும்-கொடுக்கும். பெ.எ. 139

ஈவது-கொடுப்பது. வி.அ.பெ. 137

ஈன்று-உண்டாக்கி. வி.எ. 95

ஈனம்-குறைவு. பெ. 140

உச்சி-மோட்சத் தானம். பெ. 160

உடம்பாடு-உடன்படுதல். தொ. பெ. 171

உடம்பு-உடல். பெ. 19, 112, 150, 168

உடன்-இடம் 88

உடுப்பன-உடுத்துவன. வி.அ. பெ. 103

உடை-உடைய. வி. 22, 32

உடைமை-உரிமை. தொ. பெ. 173

உடையது-உடைமையது. கு.வி. அ.பெ. 46

உடையார்-உடையவர். கு.வி. அ.பெ. 32, 47, 48, 22

உடையான்-உடையவன். கு.வி. அ.பெ. 7, 37,

உண்ட-உடைய. பெ.எ. 33

உண்டாக்கும்-உண்டு பண்ணும். வி.மு. 180

உண்டாகி-தோன்றி. வி.எ. 9

உண்டல்-உணவு உண்ணுதல். தொ பெ. 125

உண்டி-உணவு. 125, 134

உண்டேல்-உண்டாகுமாஞல். வி.எ. 36

உண்ணுமை-உண்ணுது இருத்தல். தொ. பெ. 82

உணர்-அறி. வி. 9, 65, 108, 174

உணர்தல்-அறிதல். தொ.பெ.57

உணர்ந்து-அறிந்து. வி.எ, 5, 97, 150

உணர்ந்தார்-உணர்ந்தவர். வி. அ.பெ. 3

உணர்ந்தான்-உணர்ந்தவன். வி. அ.பெ. 1

உணர்ந்து-அறிந்து. வி.எ. 168

உணர்வு-அறிவு. தொ.பெ. 34, 43, 44, 158

உணரல்-அறிதல். தொ.பெ. 37

உணரப்படும்-அறியப் பெறும். வி.மு. 161

உத்தம-சிறந்தது. பெ. 137, 138

உத்தமர்-சிறந்தவர். பெ. 137

உத்திட்டன்-உத்திட்ட பிண்ட விரதி என்னும் பதிஞேராவது சிராவகன். பெ. 172

உப்பு-பெ. 177

உப-துணே. முன்ஞெட்டு. 98, 99

உபகரணம்-துணேக்கருவி. பெ. 134

உபதேசம்-அறிவுரை. பெ. 92

உபவாசம்-உண்ணுநோன்பு. பெ. 125, 126

உம்-இடைச் சொல். 2, 3, 4, 12, 21, 24, 26, 27, 29, 36, 37, 38, 39, 42, 43, 44, 45, 47, 53, 55, 56, 59, 61, 65, 78, 79, 80, 82, 83, 84, 87, 89, 99, 100, 103, 109, 111, 113, 114, 115, 116, 117, 118, 120, 122, 132, 136, 140, 146, 151, 153, 155, 156, 157, 158, 159, 163, 164, 166, 167, 171, 176, 181

உய்த்தல்-செலுத்துதல். தொ. பெ. 12; நடத்தல், தொ.பெ. 131, 134

உயர்வர்-சிறக்கப் பிறப்பர். வி.மு. 54

சூளாமணி-இரத்தினம். பெ. 160
செட்டியர்-வாணிகர் பெ. 53
செப்பு-சிமிழ். பெ. 175, 179, 180
செய்க-செய்திடுக. வியங்கோள். 138, 143
செய்கை-செயல். தொ,பெ. 116, 121
செய்த-பெயரெச்சம். 115
செய்தல்-செயலாற்றுதல். தொ. பெ. 156, 169
செய்யப்படும்-செய்தல் வேண்டும். வி.மு. 124
செய்யேன்-செய்ய மாட்டான். வி.மு. 126
செய்யான்-செய்ய மாட்டேன். வி,மு. 114
செய்வன். வி.மு. 90
செயல்-தொழிற்பெயர். 96, 105, 135
செல்வம்-சொத்து. பெ. 34
செல்வாள்-செல்பவள்.வி.அ.பெ. 76
செவ்விது-செவ்வையானது. கு. வி. அ. பெ. 39
செற்றம்-பகைமை. பெ. 6, 32, 91, 147
சென்றார்-சென்றனர். வி.மு. 151
சே-மாடு, பெ. 92
சேக்கை-படுக்கை. பெ. 127
சேதியம்-சைன பிம்பங்கள். பெ. 110
சேர்ந்த-சார்ந்தவர் வி.அ.பெ. 20
சேரி-மனிதன் சேர்ந்து வாழும் இடம். பெ. 130
சொல்-மொழி. தொ.பெ. 2, 26, 95, 116
சொல்லாமை-கூருதிருத்தல். தொ. பெ. 69
சொல்லின்-கூறின். வி.எ. 176
சொல்லுப-சொல்லுவார்கள். வி.மு. 85
சொல்லுவது-கூறுவது. வி.அ, பெ. 61
சொல்வர்-கூறுவர். வி.மு. 40
ஞான்று-பொழுது. பெ. 123
ஞானம்-அறிவு. பெ. 2, 12, 57
தகு-தக்க. கு.வி. அடி. 131
தடுமாற்றம்-சம்சார சரீர போகம் பெ. 18, 140
தடி-பிரம்பு. பெ. 94
தண்ட-அனர்த்த தண்ட (விரதம்). 89, 90, 97
தத்துவம்-ஜீவ, அஜீவ, ஆஸ்ரவ, பந்த, சம்வர, நிர்ச்சர, மோட்சம் என்ற ஏழு. பெ.12
தப்பு-அதிசாரம் (தவறு) பெ, 177
தம்-தமது (தாம் >தம்) 138, 173,
தயா-அபய (தானம்) பெ. 138
தரிசன்-விரதங்கள் இருக்காது சம்யக் தரிசனம் மட்டும் உடையவன். பெ. 162
தரித்தான் -விரதங்களைப்பின்பற்றுபவன். வி.அ.பெ. 163
தலை-முதன்மை. பெ. 87, 113
தலைமகன்-சுவாமி. 4
தவம்-நோன்பு நோற்றல். பெ. 34, 95, 177
தவர்-தவம் இருப்போர். பெ. 135, 172
தள்ளல்-மனத்தை வேறு வகைகளில் செலுத்துதல். தொ. பெ. 121
தளர்ந்தார்-கொள்கைத் தளர்ச்சியினர். வி.அ.பெ. 22

தன்-சாரிணி. இ. 181
தனக்கு-தன்னுடைய. 116
தன்சிரி-கொலை செய்து கெட்ட தனஸ்ரீ. 81
தனதேவன்-பொய்யாமையில் பெயர் பெற்ற தனதேவன். பெ. 80
தனியன்-தனிமையன். கு.வி. அ. பெ. 112
தாங்கல்-விரதங்களிலிருந்து விலகியவரை மீட்டும் விரத வழி நிறுத்தல்-ஸ்திதிகரணம். தொ.பெ. 15
தாபதன்-களவினுல் கெட்ட உறித்தாபசன். பெ. 81
தாள்-கால். பெ. 172
தான்-இடைச் சொல்-13 ஒருவன். 115, 152
தானம்-கொடை. பெ. 135, 137, 138, 140, 173
திங்கள்-மாதம். பெ. 105, 131, 165
திசை-நான்கு திசை. 83
திண்ணன்-திண்மை உடையவன். கு-வி.அ.பெ. 162
திரு-அழகிய. பெ. 143 தேவ, மானவ, மோட்சப் பேரரசு. பெ. 175
திருந்தார்-திருந்தாதவர். வி.அ. பெ. 118
திறம்-திறன் வாய்ந்த. 16, 21, 154,
திறவதின்-உறுதியாய். 124
திறவது-வல்லமை. 76
தீ-நெருப்பு. பெ. 30, 94
தீமை. பெ. 38, 91, 114, 115
தீய்வை-தீமை தருப்வை. கு.வி. அ.பெ. 114
தீயார்-தீமை செய்பவர் கு.வி. அ.பெ. 118
தீர்க்கும்-கெடுக்கும். வி.மு. 180
தீர்ந்த-நீங்கிய. பெ.எ. 40, 53
தீர்ந்தார்-நீங்கியவர். வி.அ. பெ. 77
தீரா-நீங்கா. ஈ.எ.பெ.எ. 180
தீமை-கெடுதி. பெ. 113
துக்கம்-துயரம். 10
துடைத்தல்-நீக்குதல். தொ.பெ. 139
துடையாது-அகற்றுது. வி. எ. 127
துணை-அளவு. பெ. 131, 140
துய்த்து-அனுபவித்து. வி.எ. 99
துய்ப்பாம்-அனுபவிப்போம். வி.மு. 99
துய்ப்பு-அனுபவிப்பு. தொ.பெ. 106
துயக்கு-மிகுதி.பெ. 32, உறு 100
துள்க்கு-நடுக்கம். பெ. 17
துறக்கப்படும்-நீக்கப்பெறும். வி.மு. 100, 147
துறத்தல்-நீக்குதல். தொ.பெ. 86, 87, 127, 145
துறந்தான்-துறந்தவன். வி.அ. பெ. 11, 166, 167
துறந்து-நீக்கி. வி.எ. 172
துறவு-துறத்தல். தொ.பெ. 60
தூய-தூய்மையான. கு.பெ.எ. 114
தெரிந்து-அறிந்து. வி.எ. 90
தெய்வ-தேவன். பெ. 31, 32
தெய்வம்.தேவன். பெ. 41, 144
தெள்ளுங்கால் - தெளியும் இடத்து. 82
தெளிந்தார்-ஆராய்ந்து தெளிந்தவர். வி.அ.பெ. 175
தெறித்த-அடிக்கப்பட்ட. பெ.எ. 8
தேசம்-நாடு. பெ. 129

தேசாவகாசிகம்-இவ்வளவுகாலத் திற்கு இன்ன நாட்டிற்கப்பால் போவதில்லை என்று வாழ்தல். 129

தேரை-ஒரு வகைத் தவளை. பெ. 144

தேவர்-தெய்வம். பெ. 31, 54

தேவன்-தெய்வம். பெ. 38

தேவாதிதேவன்-அருகத் பரமேசு வரன். பெ. 143

தேறுதல்-தெளிதல். தொ.பெ. 3

தேன்-பெ. 82

தொக்க-தொகுதியாக்கப்பட்ட பெ. 2

தொடர்-பாகியம். அப்யந்தரம் என்னும் இருவகைப் பரிக் கிரகங்கள். 11, 147, 170,

தொடர்பு-நட்பு. தொ.பெ. 118

தொழ-வணங்க. வி.எ. அருக துதி.

தோவகை-ஸ்திதி கரணம். குற் றம், பெ. 26, 29, 54, 160

நகை-சிரிப்பு. தொ.பெ. 96

நச்சு-குற்றம். பெ. 56

விஷம். பெ. 181

நஞ்சு-விஷம். பெ. 94

நட்டார்-நண்பர். பெ. 152

நபுஞ்சகர்-அலிகள். பெ. 49

நம்பற்க-நம்ப வேண்டா. வியங் கோள். 123

நரகம்-ஏழு நரகங்கள். பெ. 47

நல்-சிறந்த. பண்படி. 2, 3, 13, 18, 24, 38, 39, 40, 44, 49, 57, 62, 89, 104, 120, 135

நல்குரவு-வறுமை. பெ. 52

நல்லோர்-நல்லவர்கள். கு.வி. அ.பெ. 40

நனைதாடி-வெண்ணைக்காரன். வி.தொ. 18

நன்று-நல்லது. கு.வி.மு. 62, 117

நலிவு-வருத்தம். தொ.பெ. 156

நவை-துன்பம். பெ. 120

நாமம்-அச்சம். பெ. 178

நாய் பெ. 38

நார்-செடியினின்று பெறும் நார் கள். 94

நால்-நான்கு. பெ. 122, 165, 167

நாள்-ஒரு நாள். பெ. 131, 132

நான்கு-எண்ணுப் பெயர். 4, 65, 74, 134- 146, 155

நிகழ்ச்சி-நடப்பு. தொ.பெ. 12

நிச்சயம்-உறுதி, பெ. 27

நிச்சல்-நாள்தோறும். பெ. 181

நித்த-நாள்தோறும். பெ. 104

நிதானம்-விரைவின்மை. பெ. 153

நியமம்-நியம விரதங்கள்-இவ் வளவு நாட்களுக்கு என்று நோன்பிருத்தல், 102, 104, 105, 164

நிலை-நிலைமை. தொ.பெ, 59, 108, 159

நிலைமைய-நிலையானது. கு.வி. அ.பெ. 4

நிலைமையர்-நிலைமையை உடை யவர். கு.வி.அ.பெ. 161

நிலைய-ஞானதரிசன நிலை. 159

நிழல்-நீழல். பெ. 181

நிற்றல்-நிற்பது. தொ.பெ. 114

நிறுத்தல்-நிறுத்துதல். தொ. பெ. 22

நிறை-நிறை அளவை. பெ. 72

நிறைந்தது-மகாவிரதம். பெ. 64

நிறைந்ததூஉம்-மகாவிரதம். பெ. 63

பயன்-விளைவு. பெ. அருகதுதி. 28, 36, 154, 155
பரிமாணம்-ஐம்பொறி அவாக் களை அடக்குதல். பெ. 98
பரிவு-விருப்பம். பெ. 156
பல்-பல. பெ. 120
பலதேவர்-வாசுதேவர்க்கு மூத் தார். 55
பவ்வம்-திதி, பருவம், காலம் 165
பழம்-பழங்கள். பெ. 101, 166
பழி-குற்றம். தொ.பெ. 15, 50
பழித்து-நிந்தித்து. வி.எ. 113
பழிப்ப-பழிக்க வி.எ. 51
பழிப்பு-நிந்திப்பு. தொ'பெ. 19
பற்ற-அறிய. வி.எ. 5
பற்று-பரிக்கிரகப் பற்று பெ. 6, 147,
பறை-பேரிகை. பெ. 8
பறையன்-பறை அடிப்பவன், பெ. 37
பன்றி-விலங்கு. பெ. 141
பன்னிய-கூறப்பட்ட, பெ.எ. 173
பாசண்டி-புறச் சமயத்தாரைப் போற்றுதல். பெ. 33
பாடு-தொடர்ப்பாடு, அகத்தும் புறத்தும் உள்ள பற்றுகள். 11, 147
பாபம்-பழிபாவம் பெ. 92
பாய்தல்-குதித்தல், தொ.பெ. 30
பார்க்கப்படும்- சிந்திக்கப்பெறும் வி.மு. 120
பாராய்-ஆராய்ந்திடு, ஏவல் வி. மு. 180
பாரிசர்'பாரிசேண குமாரர் பெ. 26
பாரீசன்-பாரிசேணகுமாரர் பெ. 80
பாவம்-பாபம். பெ. 20, 69, 85, 95, 107, 123, 132, 139, 174
பாழ்-பாழான, பெ. 31
பாற்று-குறிப்பு வினை முற்று. 37 115, 116' 118, 119
பானம்-பருகத் தகும் நீருணவு. பெ. 150
பிணி-நோய். பெ. 155
பிரிவன-பிரிந்து போவன வி.அ. பெ. 119
பிழைப்பு-தவறுதல் தொ.பெ. 49
பிற-ஏனைய. 36, 61, 109,
பிறத்தல்-தோன்றுதல், தொ. பெ. 48, 52
பிறப்பு-தோன்றுதல். தொ.பெ. 34, 155, 156
பிறர்-மற்றவர். பெ. 51, 76. 116, 117
பிறவார் - பிறக்கமாட்டார் வி. மு, 50, 51
புகுதல்-நுழைதல், தொ.பெ. 30, 47
புண்ணியம்-நல்லன. பெ- 137
புராணம்-திரிசஷ்டி சலாகா சான்றோர்தம் கதை கூறும் நூல். பெ. 154
புரிந்து-விரும்பி. வி.எ. 132
புரிபவன்-விருப்புகிறவன். வி. அ.பெ. 165
புரிவு-விருப்பம். தொ.பெ. 142
புரை-குற்றம். பெ. 53
புல்ல-பொருந்த வி.எ. 60
புல்லுக-பின் பற்றுக, வியங் கோள் 132
புல்லும்-வந்து சேரும். வி.மு. 158
புலம்-வயல் முதலான. பெ. 130
புலன்-ஐம்புலன்கள். பெ. 98
புலைசு-மாமிசம், பெ. 82

## சுருக்க விளக்கம்

இ-இடைச்சொல்,
சு.-சுட்டு,
பெ.-பெயர்ச்சொல்,
வி-வினைச்சொல்,
ஆ. பெ-ஆகு பெயர்,
ஈ.எ.பெ.எ-ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்,
எ.பெ-எண்ணுப் பெயர்,
கு.வி. குறிப்பு வினை,
கு.வி. அ.பெ-குறிப்பு வினையால் அணையும் பெயர்,
கு.வி.மு-குறிப்பு வினை முற்று,
தொ.பெ-தொழிற்பெயர்,
பெ.எ-பெயரெச்சம்,
வி.அ.பெ-வினையால் அணையும் பெயர்,
வி. எ.வினைஎச்சம்,
வி.மு-வினைமுற்று,

# செய்யுள் முதற் குறிப்பு

[எண் - பாடல் எண்]

# ஜைன இளைஞர் மன்ற வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | சைனரின் தமிழிலக்கண நன்கொடை<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 25-00 |
| 2. | அவிநயம்<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 9-00 |
| 3. | அமுதசாகரம்<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 4-00 |
| 4. | இந்திரகாளியம்<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 2-00 |
| 5. | கலிங்கத்துப்பரணி ஒரு மதிப்பீடு<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 4-00 |
| 6. | தொல்காப்பிய ஒப்பியல்<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 10-00 |
| 7. | நரிவிருத்தம்<br>[ஆறுமுகஞ்சேர்வை] | ரூ | 2-50 |
| 8: | அறநெறிக் கதைகள்<br>[புலவர் அசோக்குமார்] | ரூ | 1-50 |
| 9. | அருகன் அந்தாதி<br>[ஆனை. நரசிங்கப்பெருமாள்] | ரூ. | 1-00 |
| 10. | திருக்குறளில் அறிவுத்துறைகள்<br>[கட்டுரைகள்] | ரூ. | 22-00 |
| 11. | அருங்கலச்செப்பு<br>[க. ப. அறவாணன்] | ரூ. | 9-00 |

வணிகர்களுக்குக் கழிவு உண்டு.

தொடர்புகொள்க :

**ஜைன இளைஞர் மன்றம்**

1-A, போக் சாலை, சென்னை-600 0[illegible]7.

எஸ். தன்யகுமார் பிரஸ், தி. நகர், சென்னை-600 017.